உ

திருச்சிற்றம்பலம்.

# ஒழிவிலொடுக்கம்.

சீகாழி.

## திருஞானசம்பந்தசுவாமிகள்

திருவருள்பெற்ற

## கண்ணுடையவள்ளல்

திருவாய்மலர்ந்தருளிச்செய்தது.

இஃது

திருப்போரூர்ச்

## சிதம்பரசுவாமிகளால்

அருளிச்செய்த - உரையுடன்.

சிதம்பரம்.

## இராமலிங்கபிள்ளை

யவர்களால்

பார்வையிடப்பட்டு.

மண்ணிப்பாக்கம்.

## சபாபதிமுதலியா

ரவர்களால்

முத்தமிழ்விளக்க அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

விரோதிகிருது௵ ஐப்பசி௴

முதல்பதிப்பு.

1851

உ

# சிறப்புப்பாயிரம்.



வள்ளல்குருராயன்வாதுவென்றசம்பந்தன்...... .........*
வள்ளன்மலர்த்தாடலைமேல்வைத்துரைத்தா - னுள்ளத்*
தழிவிலடிக்குந்தேனையன்பொலாமுன்னை... .. ....... ...*
வொழிவிலொடுக்கநூலோர்ந்து.. .............. .. .......*

இச்செய்யுள் கருதிற்றியாதோவெனின், இந்நூன்முதலா சிரியர்பெயர் முதலியவற்றைச்சுருக்கித் தோற்றலிற் சிறப்புப்பா யிரவெழுதக முணர்த்தல் கருதிற்றென்க.

வள்ளல்குருராயன்வாதுவென்றசம்பந்தன் - வள்ளன்மலர் த்தாடலைமேல்வைத்து---எ-து- வள்ளலாரென்னுந் திருப்பெய ருடையவர் ஞானாசாரிய ரூபராகிச் சமைய வாதிக டருக்கச் செருக்குகள் பிற்பட்டொழியப்பொருதெறியான்வெற்றிகொ ண்டு சீகாழியென்னுந்திருநகர்க்கண்ணே மெய்ந்நெறிவிளங்கவி ற்றிருந்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது வள்ளற்றன் மையுடைய மலர்போலுந் திருவடிகளைத் தமது நன்முடிக்கண் ணோர் பொன்முடியாகவணிந்து.

ஓர்ந்து - உள்ளத் -தழிவிலடிக்குந்தேனையன்பொலாமுன் ணை-வொழிவிலொடுக்கநூலுரைத்தான்---எ-து- அத்திருவடிகளி னருட்டுணையாற் றத்துவங்க ளனைத்துஞ் சடமென் றோர்ந்துண ர்ந்தவற்றைக்கடந்து தற்காட்சியோடு திருவருட்காட்சியுங் கை ப் தந்தனம் வாதனையா னசைந்தெழும் பேரானந்தேற்று தன் னையதனிலவாருவொள்ளிப்பிணக்கியாண்டு மேன்மேலும்மிழாநி ன்ற சிவானந்தத்தினைத் தாமநுபவஞ்செய்தவாறதன்கணன்பு ள்ளவர்க்குவருஞ் செய்தற்பொருட்டுச்சிவானந்தானுபவந்தரங் கமெல்லாய் வெளிப்பட்டுவிளங்கவொழிவிலொடுக்கமென்றோ ருபதேசமுறைமையை யுரைத்தருளினார் என்றவாறு.

( வள்ளலென்னும்பெயர். )

ஆசிரியர்க்குத் தாமுன்னிருந்த கிரியாசாரிய நிலைக்கண்ணே வ்வாசாரிய மரபின்வழித்தாய் வந்தகாரண விசேடச்சிறப்புப் பெயரென்க. அல்லதூஉம் பின்னர் ஞானாசாரிய நிலைக்கட் டம தருண்ஞானநோக்காலியைந்த கண்ணுடையவென்னுங்காரண விசேடணமேற்கொண்டுநின்றவிவ் வள்ளலென்னும் பெயரீண்ட வ்விசேடண மிசையெச்சநிலையினிற்ப நின்றதெனினு மமையு மென்க. இஃது வினைபண்பு முதலியவடுத்தொகைநிலைச்செ

ற்றொடராகாது தொகாநிலையாய்த் தனைத்தொடர் பயனிலைய
ன்மைப்பொரு ளுணர்ச்சியின்றி யிடையிட்டு நிற்கத்தான்செய்
யுண்முதற்கட்டனித்திருந்தமையி னாற்றலின்றாமேலோவெனின், அ
ற்றன்று-கொடைமடங்குறித்த குணங்காரணமாகவந்த விவ்வள்
ளலென்னும்பெயர் தனதுறுப்புகளுட்கொடை குணம்புகழ மூ
ன்றுவளமென்னு நல்வழக்குறித்த பலபொருட் பகுதியாய வண
மையென்னு முதனுறுப்பா னாசிரியர்க்குளவாயவகங்கொடை மு
தலிய வருட்குணங்களைக் குறிப்பிற் புலப்படவிரித்தலிற்பொரு
ளாற்றலுண்டென்க. அல்லதூஉம்- இப்பெயர் உயர்பொருட் கி
டனு புடனிலைச்சுட்டாய் ஒருநெறிப்பசைத்தா மேயாரினந்தழுவி
ப்பலவகைக்குறிப்பிற்படர்ந்து முற்றியவைப்பு வண்ணப் பெருஞ்
சொல்லாக நிற்றலிற் சொல்லாற்றலுமுண்டென்க.

ஆயினிவ்வாசிரியர்பெய ரிச்செய்யுளினி டைகடைகளினொ
ன்றினிறுத்தாது முதலடிமுதற்சீ ரொதுகைத்தொடைக்கணிறுத்
திற்குறித்த தியாதோவெனின், ஒன்றிரண்டெனக்கொண்டுறு
மறையாகமநன்றிருமுடியினடுநிலைநடா அட்ப்புலம்பெறுதத்து
வநியநியிற்போந்துண் மலந்தெறுமறிஞர் வாழ்த்திப்பரவுமா
சிரியர் சன்மார்க்கமுதலிய மார்க்க நான்கனுட்டலைமையிற்றலை
மையாய வுத்தமசன்மார்க்கத்தினையென்பது குறித்ததென்க. இங்
ஙனமுத்தம சன்மார்க்கத்தினையென்பதை யாசிரியர்கூறிய இது
வென்றதெல்லாம் பொய்யென்றுமென்னுந் திருவெண்பாவாற்
காண்க·—இஃதின்னும் விரிக்கிற் பெருகும்.

ஒருராயனென்பது-திருஞானசம்பந்தப்பிள்ளையார்க்குச்
சிறப்பிற்சிறப்பாய காரணப்பெயராய்நின்று-ஓதியுணர்ந்துபன்
னூட் பலசாதனங்களின் முயன்றுமுயன்றாசாரியத்தன்மையொ
ருவாறறிந்திக்கிடைப்பப்பெற்றுமோரோர்காலங்களினவத்தைவ
யப்பட்டு மயங்கு மற்றையாசாரியர்போலாதோதாமல்வேதாக
மாதிகளை முற்றுமுணர்ந் திறைப்போதுமோர் சாதனங்களின்
முயன்றதின்றி ஞானாசாரியவருளிலக்கணங்க ளனைத்துந்தாமே
தப்பாணிரம்பிநிற்ப வமர்ந்தனரென்பதூஉம் - ஓதியுணர்ந்தவ்
வாசாரியர்க்கெல்லா மவரவரறிவின்க ணருவுருவாய்நின் றறிவி
த்து மாசாரியவுருவாய் வெளிநின்றனுக்கிரகித்தும் நின்றனரொ
ன்பதூஉம்- திருநோக்கஞ்செய்தல்முதலிய வறுவகைத்தீக்கை
யானுமன்றித் தமதுதிருவுருவைக்காண்டனினைத்தன்மாத்திரை
யேபக்குவரல்லாரும் பக்குவராய்ப் பயன்பெறநின்ற திருவரு
ட்பெருமையென்பதூஉங்குறித்ததென்றுணர்க.இங்ஙனம்ஓதா

# சிறப்புப்பாயிரம்.

மல் வேதாகமாதி யுணர்ந்தமைமுதலியவற்றையாசிரியர்கூறியத ன்மையு முன்னிலையுமென்னுந் திருவெண்பாவாற்காண்க.

அல்லதூஉம்-குருராய னென்பது வாகுவென்ற சம்பந்த னென்பதற்கு மேனிற்கவைத்த விதப்புக் குறிப்பாற் பிள்ளையா ரிவ்வவதாரத்தின் மேனின்ற வவதாரத்தினுங் குமார சற்குருவா யரனார்க்கு மகத்தியனார்க்கு முபதேசித்தருளிய வாசாரியத்தலை மையுங் குறித்தமைதனைக்கொள்க. (அருணகிரிநாதர், தென்னவனை க்கனன்குலகாத்திரிநகசூலகரத், தென்னவனங்கனை நசிப்பதநீட் டினன் செல்வமுன்பின், றென்னவனங்கநன்னீற்றற் றிருநதவ தென்னவின்னநற், தென்னவனங்கனங்கைச் சிலைகைகூடமையுநதீர்த்த ருளே, என்றதனாற் பிள்ளையாரிவ்வவதாரத்திற்கு மேனின்றவவ தாரத்திற்குமாரசற்குருவென்பதுகாண்க கல்லாடம்- உமைமை திற்சுட்டதழனைகைப்பெருமானை வணங்கிநின்றேத்தக், குருமொ ழிவைதந்தாய்க்குறு புநின்றதறநெடுமறைவிரித்தோய். சித்தியார்) அருமறையாகமமங்கமருங்கலைநூறெரிந்த, வகத்தியனுக்கோ த்துவாமகுமரற்குருவாங்குருவை, என்பவைகளா லரனார்க்குமக த்தியனார்க்கு முபதேசித்த வாசாரியத்தலைமையையுணர்க.

ஆயிற்குருவேந்தனென்னாது குருராயனென்றதெது கு றித்தற்கோவெனின் நான்கன் வேற்றுமையானடுத்து மிக்குய ர்நெறிப் பொருண்மையின் வந்தகாரகச்சிறப் பொருதலைத் தொடர்மொழிப் பெயராய விக்குருராய னென்பதன்கட் குரு வென்பதன் முதனிலையெழுத்துத் தமிழியல்விதிப்படி மொழி க்குமுதலாகியும் ராயனென்பதன் முதனிலையெழுத்துத்தமிழி யல்விதியின்றி யாரியவியல்விதிப்படி மொழிக்கு முதலாகியும் வந்திருவகையியலுங் கோடலி னிதனைத்தம்பெயராகவுடையபி ள்ளையாருந் தமிழ்நூல் வடநூலென்னு மிருவகைநூற்கு முரி யாரென்பது குறித்தற்கென்க. ஆசிரியர் மறைப்புலவன் றமிழ்க் குரிசில் சீகாழிச்சம்பந்த னென்றதனாலிருவகைநூற்குமுரியா ரென்பது காண்கவெனக - அல்லதூஉம் - பொருள் வேறுப டாது சிறிதே வடிவு வேறுபட்டுநின்ற குருராய னென்பதுந் த ன்னையுள்ளுணர்ந்து நோக்கினர்க் கிலைமறைகாய்போல ஞானவென் னுமுயிர் மெய்யோடிருந்த தன்னுண் வடிவமுடன்கொண்டு விள ங்கக்காட்டி நிற்கின்றதாகலி னிதனையுடைய பிள்ளையாருந்தமது கடவுட்டன்மை வேறுபடாதுத் தமபருட வுருவங்கொண்டுநின் றதன்மை யன்பானுள்ளுணர்ந்து நோக்கினார்க்குக் குமார சற்குரு

டைக்கட் குருராயனென்றிதன் பெருமைதோன்றவைத்தனரெ
ன்க. இஃதின்னும் விரிக்கிற் பெருகுமென்க.

வாதுவென்ற சம்பந்தனென்பதிற் பொருளவானே வாது
வென்ற வென்றதென் குறித்தோவெனின் எண்வகைக் குன்றத்
தெண்ணாயிரவராய பாயுடுக்கைப் பதகச் சமணர்களொருங்
கேகூடித் தென்மதுரைக்கட் செந்தமிழ்ப்பாண்டியனை முன்னி
ட்டுச் செருக்காற் செய்தசுரவாதம் அனல்வாதம் புனல்வாதங்க
ளிற்பட்டு திருநீற்றுந் திருவாக்குமே வென்று திறல்கொ
ண்டமையன்றியும் பரசமய கோளரியென்று தாமே யொளி
த்த திருச்சின்னத்தின் றெய்வப் பேரொளிகெட முளைப்பெருந்த
திரட்டமறித்த போதமங்கைப் புத்தநந்தியின் பொய்த் தருக்க
மும் புழுத்தலையும் பொடிபட்டழியவும் பின்னருள்ளாறு போன
தில்லைத் தப்பற்றிச் சாக்கியக்குழுவட்டலைவனுடசாரிப்புத்தனுள்ளி
ற்சிலவுகைபாற் செட்ட சமயவாதந் தலைதடுமாறவுஞ் செந்தமி
ழ்வேதத் திருமறைதாங்கி மேம்படுதிஞானன் வெற்றிகொண்
டமையும் திருவோத்தூரின்கண் ணையுக்கிடும்பன பணையனை
யாயிற் பிறப்பன்றசதியாடிய வமணக்குழுவக்கவின் வாய்வாதங்
களையன்ன பட்டொழிபத்தார் திருவாட்பலார்த திருக்கடைக்காப்
புமொழியாமென யவ்வாணை பன்னபண்ண பலயாகச் செய்து
விறல்கொண்டமையுங் குறித்ததென்க.

அல்லதூஉம் - வாதென்பதிலக்கணையாகக்கொண்டு பெருமண
நல்லூரின்கட் டிருமணநல்விழாவைத் தரிசிப்பான வந்தமைக
ட்கெல்லாந் தொன்றுதொட்டிடைவிடாதுடனிழற்போற் சூழ்
ந்துளபிறவிப் பெருவாதுகளனைத்துங் வென்றதூஉம் - திருப்பா
ச்சிலாச்சிராமத்தின்கண் மழவன் மகளார்க்குற்ற முயலகவாது
வென்றதூஉம் - மருகற்கண்ணேர் வசியனுக்குற்ற விடவாதுவெ
ன்றதூஉம் - இவைமுதலியவுங் குறித்ததெனினுமாமென்க வெற்
றிகொண்ட பொருட்டிறன் புதலியவற்றுளொன்றேனுந் தோ
ன்றக்கூறாதிலே சானே வாதுவென்ற வென்றதென் குறித்தோ
வெனின் பிறர்க்கிங்ஙனம் வேறல்தம்மானுந் துணைமையானும்ப
ற்பலநாட் பற்பலவகையின் முயற்சிசெய்து முற்றுதெனினு
ம்பிள்ளையார்க்குச் செந்தமிழ்ப்பொழியுந் திருவாக்கானே யாண்
டாண்டவ்வேறன் முற்றியதென்பது குறித்தென்க. வாதுஎன்ப
து குருநாயனென்பதனோடுஞ் சம்பந்தனென்பதனோடுஞ் சா
ராது நடுநின்றமையின் அத்துவிதநெறியினுஞ் சேராது துவி
தநெறியினுஞ் சாராதுநின்ற பதிதவாதிகளதுபயனில்வாதமெ

ளிருமையுமென்க. எதிரேற்கப்பட்டெதிர்வினைகீழ்ப்படமே
ற்கொள்வினையெழுச்சிப்பொருளின்வந்தவெல்லென்னும்பிறவி
னைப்பகுதியானமைந்தவென்றவென்னும்பெயரெச்சஞ் சம்பந்
தனென்னும் பெயர்கொண்டு முடிந்தது இங்ஙனம் வெற்றிகொ
ண்டபருவம்பிள்ளையார்க் கிளங்குமாரப்பருவமெனக்குறித்த
தென்க. என்னைஎச்சமென்பதிளஞ்சேய் மேற்றாகலின்.

சம்பந்தனென்பது பிள்ளையார்க்கு மூவகைக்கண் மூவு
லகும்புகழப் பொற்பொடுபுணர்ந்த வற்புதத் திருப்பெயராக
லின் ஆண்டுபெருமா னருளப்பிராட்டியாரளித்தசிவ ஞானத்
தெள்ளமுதருந்தியச்சிவஞானத்திற் குரிய சம்பந்தமுடைமை யறிந்த
தென்றுணர்க. ஆயிற் சிவஞான சம்பந்த னெனப் பொது சம்பந்த
னென வைத்த தென்கொலோவெனின், சிவஞானமுமனைத்திற்சி
வானந்தமாநந்தாதீதமென்பனவுமுரிமைபூண்ட தலைமைய
ற்றியும் அவற்றையுலகுயிர்க்கிடமளமென் றுணாததியுரிமைசெ
ய்விக்கு மாட்சியெற்றியுமங்ஙனம் வைத்தமைதென்க.

அங்ஙனதாலடங் - சுருங்கச்சொல்லுதல் விளைப்பிணுற் சம்பந்த
னெனமேவசிவருனசம்பந்தமென வுரிமையசிறப்பு வழக்காற்
றுமென மேதனறும்பனைத்தெனினுமாமென்க எங்ஙனமெ
னின் இந்திரனென்பதூ இறைமைச்சிறப்பு வழக்காற்றலேவந்
திரமயுடையானென்றது பொருட்சிறப்பழக்காற் பொன்
னுடைமையுஞ் சுறிக்குமாகலினென்க. வள்ளன்மலர்த்தாளெ
ன்னும் ஒருவகைவைப் பிறவைக்கசந்தி மூவகைமொழித்தொ
கைச்சொற்றொடர்க்கண் வள்ளலென்னுங் குணிப்பெயர்விளமு
தற் றொழிற்பயனுறப் பற்றுடைமைக்குணப் பெயராய்நின்று
பிள்ளையாரது திருவடிகட்மை யடைந்தோர்க்குவகையாதா
நந்தப்பேற்றையளிதது அவரைத்தாங்கிக் கோடலைக் குறித்த
தென்றுணர்க.

அவ்வேதவாநந்தப் பேற்றைத்தருதற் குந்தாங்கிக்கோடற்
குங்கருத்தர் பிள்ளையாரன்றே யங்ஙன மிருப்பத் திருவடிகட்கி
ங்ஙனங்கூற லெங்ஙனமெனிற் றிருவடிகடம்மை வழிபடுவோர்
க்கிரங்கி யின்பமீதற் பொருட்டெழுந்தருளும் பிள்ளையாரது
படர்ச்சிநிகழ்ச்சிக் கருவியாய்நின்று அவரை யவ்வழி படுவோர்
பால் வருவித்தலானுஞ் ஞானதீக்கை பண்ணுங்கா லவர்சென்னி
யிற்சூட்டப்பட் டைக்கியம்வருவித்தலானு நித்தியாநந்தப்பே
றுவாய்க்குமாகலி னிங்ஙனமென்க.

அல்லதூஉம் - வாட்டமிலருளுங் கோட்டமில்குணனு ம
சையாநிலையு நலசயாமனனும் வெகுளாப்பண்பும் விடாப்பே
ரன்புஞ் செவ்வியின்பமீறு மெவ்வெவ வெவ்வகை வேட்டனரவ்
வகை விருப்பபாடுகுறிப்பின் வனையாதீதல் வள்ளற்றன்மை ன
ன்பவாகலி னிவ்வள்ளற்றன்மையைத் தம்பாலடைந் தோரிடை
யடைவித் தருளுங்கருணை பற்றியங்ஙனங் கூறியதெனினு மமை
யுமெனக். அஃதேல வள்ளற்றன்மைவழங்குமலர்போலுந் திருவ
டியென்றன் றேருவுமா விரித்தல் வேண்டுமங்ஙன மின்றிவள்ளற்
றன்மையுடைய மலர்போலுந்தாளென விரித்திருக்கின்றதேயெ
னின் அங்ஙனமடையித்தலும் வள்ளற்றன்மையே யாகலினுமு
டையதொன்றன்றே யுதவப்படுமாகலினு மிங்ஙனம்விரித்த லங்
ஙனங் கூறற்கு மமைதியாமெனக.

அல்லதூஉம் - அருளின்றியமையாத வள்ளற்றன்மைக்கவ்
வருளேமுதற்காரணமா மாகலின் ஆநந்தவடிவாகிய பிள்ளையா
ரவ்வாநந்தப் பேற்றையளிக்கும் வள்ளற்றன்மைக்கு முதற்கார
ணமாகிய திருவருட்சத்தியே திருவடியென் றுகுறித்ததற்குக்கார
ணத்தைக் காரியமாக வீண்டுபசரித்ததெனினு மமையுமெனக.

அல்லதூஉம் - எமது திருவடிகளை வழிபடின் வீட்டின்ப
மெளிதிற்றருவேமென்று பிள்ளையார் விதித்தருளிய வருள்விதி
ப்படியறிந்து வழிபடி னவ்வழிபாட்டா னவ்வீட்டின்பந் தரப்
பெறுத லுண்மையாகலி னவ்வுண்மைநோக்கியீண்டு கூறியதெ
னினும் பிள்ளையார்திருமேனி முற்றுந் தெய்வத்தன்மை பூரண
மாகலி னதனையறிவிக்க வீண்டுகூறியதெனினு மமையுமெனக.
திருவடிகட்கு அடையாய வள்ளலென்பதூஉம்- ஆசிரியர்பெய
ராய வள்ளலென்பதூஉம் அடியிணை எதுகைத் தொடையாய் எ
ழுத்தசை சீரொலி பொருளாதிகளாலொற்றுமைகொண்டு நின்
றுபிள்ளையாரது திருவடித்தீக்கைக்கு மாசிரிய ரதிபக்குவத்தன்
மைக்குமுள்ள வொற்றுமைப் பொருத்தம் விளக்கினவெனக.

வள்ளலென்பது-பிள்ளையார்க்குக்காரணச்சிறப்புப் பெய
ராகக்கொண்டு பொருள்கூறுவாறுமுளர் அங்ஙனங் கூறினித்து
ணைச் சிறப்பின்றென்றுமறுக்க என்னெனின் அவயவச்சிறப்பா
னவயவிக்குணம் வெளிப்படுத்தலே பெரும்பாலுமின்பமாகலி
னெனக.இதனைப் போற்றி மாலன்முகனுங் காணாதபுண்டரீகம்
என்பதனாற்காண்க வெனக வள்ளமலர்த்தாளெனப் பாடமே
லிவ்வள்ளம்போலுங் குவித்தவாய்மலரான மலர்களையுடையாகவுரை

மணிதற் கனியினிருக்கையு மிணைத்து நிற்கு மிடைப்பூட்டிற்கு
மிடனாகிவந்த பலபொரு ளொருசொல்லாகலின் றிருவடிகள் த
ம்மையடைந்தோரை யாநந்தநிலையுட்சேர்த்தலு மங்ஙனஞ்சே
ர்ந்தோர்மீட்டு மவ்வாநந்த நிலையினின்றும் போதலையுந்தாற்
றி வெளிப்படாமைக்கு மவத்தைகளுட்சென்று தாக்கிக் கலரப்
படாமைக் குங்காப்பாகலருளுருவாய தன்முன் னிற்றலுஞ் சிவ
த்துடன் சிவனையிடை நின்று கூட்டுவித்தலுங் குறித்ததுகாண்க
இக்குறிப்புணர்த்தவன்றே மலர்க்காலென்னாது மலர்த்தாளென்ற
தெனவுணர்க.

தலைமேல்வைத்து என்பது -ஆசிரியர்- தம்மாசாரியரா
கிய பிள்ளையார்திருவடித் தீக்கை செய்பதனாம் பெற்றமைகுறி
த்ததுகாண்க. அங்ஙனந் தலைவைக்கப்பட்டு எனச்செயப்பாட்டுவினை
யெச்சத்தானிருத்தற் பாலதன்றோவெனின் ஆசிரியர்க்குத்திருவ
டிகளின்மேலுள்ள பிரியத்தொடர்ச்சியின் பெருமைதோன்ற
விங்ஙன நின்றவங்ஙனங் குறித்ததென்க. இதற்கு இவ்வாறன்றித்த
லைமேற் பாவனையானவைத்தெனக்குறித்ததென்று கூறுவாரு
முளராலோவெனின் அவ்வாறு கூறிற் - பிள்ளையாரிந்நூலாசி
ரியர்க்கு ஞானாசாரியரென்பது மிவர்ஞானதீக்கையுடையாரெ
ன்பது மவ்வாங்குதலின்றி மற்றையாசிரியர்போலெடுத்த நூலினி
துமுடிதற்பொருட்டுப் பாவனையான் வழிபடுகடவுட்பழிச்சின
ரென்றிலேசற்கருதப்படுமாகலினங்ஙனங்கூறன்மரபன்றென்க.
தலையிலவைத்து என்னாது தலைமேல்வைத்து என்றமையான் மு
றைமுடிக்கண்மேனா வயங்காநின்றவச் செல்வத்திருவடியின் சீர்
மைதோன்றிற்றென்க.

ஓர்ந்து என்பதில் - ஓர் என்னும் பிறவினைமுதனிலை - அ
றிவுதனக்கெதிரிட்டவுணர்ச்சிப்பொருட்கண் ணெதிரிடுவதுபோ
ன்றெதிரிடாதுள் ளாழ்ந்தவப்பொருட்டிற னெதிரிட்டப் பெயரு
ம்புடைபெயர்ச்சியு மெதிரிட்ட பின்னர்விகற்பியாதெதிர்க்குந்
தொழு மெதிரிடப்பெயரும் புடைபெயர்ச்சியுங் கோடலிற்கரு
வித்திறனுந்தன் றிறனும் அருட்டிறனும் உற்றுணர்ந்தவ்வுணர்ச்
சிவிகற்பியாது தேறிநின்றமையைக்குறித்ததுகாண்க. இக்குறி
ப்புத்தோன்றவன்றே திருவள்ளுவநாயனாரு மோர்த்துள்ளமு
ள்ளதுணரி னென்றுமொன்றறிக.

உள்ளத்தழிவி லென்பதி லுள்ள மென்பதன் பகாப்பத
விபிற்றுப் பகுபதப்பொருளி னிடவாகுபெய ராயவுப்பொ
ருட்கண் வந்தவுள்ளென்னும் பகுதி யுட்புறத்து மப்போதமே

சவும் பேரசைவுங் குறித்ததுகாண்க.

உள்ளமென்பது வாதனையானுள்ளெழும்போதத்திற்கா
குபெயராயது - வள்ளலென்பது போன்றொழுகிசையாய்வரவு
ள்ளவழியிலென்றது பொருத்திசையாய்வர உள்ளத்தழிவி லெ
ன்றதென்கொலோவெனின். வேற்றுமைவழியாகலினும் போ
தவசைவு சார்பின்றியமையாமை குறிக்கவேண்டு மாகலினும்
சாரியையோடு புணர்த்தி யங்ஙனங் கூறியதென்க. அழிவுஎன்ப
தில்அழியென்னும் பொதுவினைப்பகுதி முன்னர்த்தோற்ற நிக
ழ்ச்சிப் பின்னரோர்காலத்து மோரிடத்துமின்றிக் கெடுதற்பெ
யர்ச்சிக்கண்வந்ததாகலினப்போதநிகழ்ச்சிபின்னரொக்காலத்து
மூட்புறமென்னு மெவ்விடத்துந்தோற்ற நிகழ்ச்சியின்றியொ
டுங்கியவாறு குறித்ததென்றுணர்க, இங்ஙனமன்றி உள்ளத்தழி
விலென்பதற்கு மனத்தினசைவற்ற விடத்தெனப்பொருள் கூறு
வாருமுளராலோவெனின் - மனத்தினசைவுபோத வசைவிற்
றனே யறுமாகலினு மஃதறுதவிடத் திஃதெவ்வாற்றானு மரு
தாகலினுமது பொருந்தாதென்க - இதனை ஆசிரியர் கூறியபற்
றதுபோதும் பதறுமென்னுந்திருவெண்பாவாற்காண்கவென்க

அடுக்குந்தேனென்பதி லடுக்குமென்பது - அடுத்தலெ
ன்னுந் தொழிற்பெயர்க்கட்டல் விகுதிதன்னொற்றுச் சந்தியொ
டுநீங்கவெதிர்காலப் பெயரெச்சவிடைநிலை யும்மை ககரமெய்ச்
சாரிலையூர்ந்துதன்னொற்றுச்சந்திபெற்றாண்டு நின்றிறையுமிட
ப்பாடுதோற்றாது செறிதற்பெயர்ச்சியும்அடுக்கலென்னுந்தொ
ழிற்பெயர்க்கண்ணல் விகுதிநீங்கவவ்வெதிர்காலப்பெயரெசசவி
டைநிலை யும்மைவிகுதிநீங்க நின்று தன்வரவுகண் டோடியகுற்
றுகரமூர்ந்தமெய்க்கண்ணேறிநின் றிறையுமிடைப்போதின்மை
படாதுபன்முறை மேன்மேலுறுதற்பெயர்ச்சியும் பொருளாக
க்கொண்டிருவகைப்பகுதி யொருவகை யெச்சமாக நிற்றலின்
றிதுமிடத்தானுங் காலத்தானும் பிரிவுதோன்றாது செறிந்து
பன்முறை மேன்மேலெழுமானந்தத்தேனென்று குறித்ததென்
றுணர்க.

உள்ளத்தழிவிலடுப்பது ஆனந்தமாகலிற் றேனென்பதை
யுவமக்குறிப்பாற் சிவானந்தத்தேனென்றதென்றுணர்க.

*தேனுண்டவண்டசைவின்றியத்தேன்மயமாயிருத்தல்போ
ல-ஆனந்தானுபவத்தர் போத வசைவின்றி யிவ்வானந்தமயமாயி
ருத்தலி னுவமையாகக் குறிக்கப்பட்டதென்றுணர்க. இதனு

யொப்புமைக்கூட்ட மொட்டாதிகளாகக் கூறுவாருமுளராலோ வெனி னவ்வாறு கூறினும் பொருள்சிதையாமையி னொருவாற மையுமென்க. போதவகையின்கட்டோற்றல் விடயாநந்தமாக விற் போதவழியின்கட்டோற்றல் சிவாநந்தமெனக்குறித்தற் குள்ளத் தழிவிலடிக்குந் தேனென்றதென்றுணர்க. எங்ஙனமெ னின். உள்ளத்தழியாமையி னடாத்தேனென்றெதிர்மறுக்கப்படு தலினென்க மதுரம்பற்றித்தேனையாநந்தத்திற்குவமைகூறுவா ருமுளராலோ வெனின் அதுநாவிடையமா யிறைப்போதுநி ற்றலினித்துணைச்சிறப்பின்றென்க.

அன்பரெலாமுண்ண வென்பதில் அன்பர் என்பதூஉஞ்சீரா ருள்புகழாதியைக் குறித்துப்பயில்வோரை நீக்கிச்சிவாநந்தமெ ந்நாளடைதுமென் றிடைவிடா ததனையே விரும்பிப்பயில்வோ ரைக்குறித்ததென்றுணர்க. எலாமென்பது - சரிதாதிகன்ம மா ர்க்கங்களை கூறும் பிறநூல்க ளெல்லாம் பருவநோக்காதுசாதி சமயாசாரவிகற்பங்களை நோக்கிச் சிலரைநீக்கியுஞ் சிலரைநிறு வியுமதிகரித்தல் போலாது அச்சாதிசமயாதிகளி னுயர்ந்தோர் தாழ்ந்தோரியாரேனும் பருவத்தராயி னிந்நூற்குரியராவரென் பது குறித்ததென்றுணர்க.

உட்கொளவென்றும் பொருளுட்கொண்டு பொருட்டு ட்பொருளிற்போந்த உண்ணவென்னுமெ வினையெச்சம்ஆநந்தா நுபவதற்கு விடாதவிலக்கணை யாயிற்றென் றுணர்க. என்னை யெனில உணவையிற் பசிநீங்கல்போல் ஆநந்தாநுபவத்திற்பசுத் துவநீங்கலினென்க பயன்காரணம்பற்றிவந்தவொழிவிலொடு க்கநூலென்பது ஒழிவிலொடுக்க மென்னுநூல் ஒழிவிலொடுக்க ந்திருநூலென விருவழிக்கும் பொதுவாய சந்தியான் வந்தமை யிற்றன்னைவேதாந்தத்திற்குஞ் சித்தாந்தத்திற்கும்பொதுவென் றுகுறித்ததென்றுணர்க.

ஒழிவிலொடுக்க நூலுரைத்தானென்பதில் வேற்றுமை சாரியை யுருபுமுதலியவொன்றும் விரியாதுநிற்றலின் ஞாநா சாரமன்றிக் கருமாசாரமொன்றும் விரியாத விந்நூலி னின்ம லத்தன்மை தோன்றிற்றென்றுணர்க. உரைத்தானென்பது - ஒ ருவர் மதிநுட்பத்தாற் றுங்கண்டறிந்த மாற்றுயர்ந்த பொன்னி ன்றன்மையைப் பிறருமறிந்து பயன்கோடற்குக் கட்டளைக்கல் லினுரைத்துக் காட்டல்போற் சுருதிகுரு வநுபவத்தாற் றாமநு பவித்தறிந்த சிவாநந்தப்பேற்றின் றன்மையைப் பக்குவருமறி ந்து பயன் கோடற் பொருட்டு நூற்கணுரைத்துக் காட்டினு ரென்று குறிப்புறுத்திற்றென்றுணர்க.

என்னெனின் உரையென்பது பொன்னுரையும் பொருளாகக்கோடலின் என்க. உரைத்தானென்னுமயனிலை - செயப்படுபொருளினிறுதியினியையாது செயப்படுபொருட்குங் கருவிப்பொருட்குமேற் றொடலை மேல்வைத்து என்பதனிறுதியிற் றொடர்ந்து நின்றதென்னெனிற் சிவஞானத் தீக்கையுடையராயுரைத்தா ரென்பது மன்றித் தமதாசாரியர் திருவடிசான்றாகத் தாங்கண்டவநுபவத்தை விளங்கவுரைத்தாரென்பதுங் குறித்தற்கென்க என்னை.

ப. தாடலைமேல்வைத்து எனவே சான்றாகவைத்தாலென்பது தாற்பரியமையுமாகலின் - தலைமேல்வைத்து என்பதன்பின்னிற்கக் கடவதாய ஓர்ந்து என்பது செயப்படுபொருடபி னிறுதிநிலையாய் நின்றதென்னெனின். இந்நூலைக்கற்போர்க்குககருமங் கழறந்து ஞானமேலிடுதலுண்மைகுறித்தற்கென்க. எங்ஙனமெனின் அவ்வோர்ந்தென்பது வினைக்குறையாகலின்மனைக உள்ளத்தழிவில் நிற்குந்தேவரையன்பரொலா முண்ணவொழிவிலொடுக்கநூலோர்ந்துரைத்தானெனக்கொண்டுபோதவொழிவின்கண்ணொடுப்பதாயவாநந்தத்தை யன்பரொல்லா மநுபவிக்கும் பொருட்டு வேதாகமமுடிபான ஞானநெறியை யாராய்ந்து ஒழிவிலொடுக்கமென்னுநூலை யுரைத்தார் எனப்பொருள் கூறுவாருமுளர். அங்ஙனங்கூறின் ஆசிரியர் பரஞானமுடையாரென்பது தோற்றாது. அபரஞானமுடையாராகப் பொருள்படுமாகலினும் அபரஞானத்தாற் கூறப்பட்டநூல் மிகச்சிறவாமையானும் அதுபொருந்தாதென்க.

இந்நூலியற்றற்கேற்ற நற்பொருளுடைமையுஞ் சிறப்புப்பாயிர விலக்கணத்து ளாக்கியோன் பெயரே யெனமுதனிறுத்தப்பட்ட நிமித்தகாரணச் சிறப்புடைமையும் இச்செய்யுண் முடிபுக் கெழுவாயாந்தலைமை யுடைமையும்பற்றி வள்ளலென முன்னிறுத்தியதென்க இந்நூலாசிரியர்க் காசரியரிவரென்பது தோன்றற்கு அவ்வள்ளலென்ப தன்புடைக்குருநாயனென்பதை நிறுத்தியதென்க இங்ஙனம் ஆசாரியரென்பவர் பிள்ளையாரென்பது தோன்றற்கு ஞானசம்பந்தனென வைத்தல்வேண்டுமாகலின் அந்தஞானத்தைக் குறிக்கும் பாசவெற்றியாய வாதுவென்றவென்பது முன்கூட்டிச் சம்பந்தனென வதன்புடை நிறுத்தியதென்க.

இரண்டாமடிக்கட் பிள்ளையார் தாள்க ணிறுத்தத் தொடங்கி முன்னர் அத்தாள்களினியற்கை யருளென்றுகுறிக்க வள்

ளமெலென்றும் அதன் வடிவமாநந்தமென்று குறிக்கமலொன்று
முறையேவைத்து வள்ளன்மலர்த்தாளென நிறுத்தியதென்க. தா
ள்களன்றியும்- பிள்ளையாரும்அருளியற்கையமோவென்பது குறி
க்கச் சம்பந்தனென்னுஞ் சத்தந்தோற்றியவுடன் வள்ளற்சத்த
ந்தோன்றநிறுத்தியதென்க. இங்ஙனம் நிறுத்தியவை - சொற்
பொருண்முறைநிலை- தாமொன்பதற்குந் தலையென்பதற்குமுள்
ளசொற்பொருட்சம்பந்தவின்பம்பற்றித் தாடலையென்றுந்தலை
யென்பதற்கும் மேலென்பதற்குமுள்ள உரிமைநோக்கம்பற்றி
த்தலைமேலென்றும் மேலென்னுமிடப்பொருட்குவைத்தற்கு
றுப்பிறந்ததுபற்றி மேல்வைத்து என்றும் வைத்து என்பதற்கும்
உரைத்தாரென்பதற்கும்உறுதிப்பொருளுவமையாதல்பற்றி வைத்
துரைத்தாரென்றும் முறையேநிறுத்தியதென்க இங்ஙனம நி
றுத்தியவை சொன்முறைநிலையும் சொற்பொருண்முறைநிலையு
மாம்.

இங்ஙனம் முற்றுமுறைநிலை கூறப்படுமின் மிகப்பெருகு
மாகலி னொருவாறுகாட்டினம் மற் றயவுமிவைகொண்டுணர்க
வென்க. இச்செய்யுட்பொருள் ஆசிரியரதருளாதியின் மாட்சி
மையைவெளிப்படையானுங் குறிப்பானும் விளங்கவிரித்தலின்
வாகைத்திணைப்புட்சால்புமுல்லைப்பொருளின்பாற்பட்டதென்க
என்னைசால்புமுல்லைப்பொருள்- சான்றோருடைமையைச் சான்றோ
ர்தஞ்சால்புரைத்தன்று என்பவாகலின் இச்செய்யுளதன் வட்டெ
யப்படுபொருளாய்நின்ற நூற்சிறப்பைதன்னுறுப்புக்களானுங்குறிப்
புக்களானுங்குறிப்பாற்றுதித்துநிறைநன்னோக்குடைச்செய்யு
ளென்றுமுணர்க. அங்ஙனங் குறித்தமையெங்ஙனமெனின்.

இச்செய்யுள் தான் கலிப்பாவஞ்சிப்பா ஆசிரியப்பா
வென்னு முப்பாவினுஞ் சிறந்தவெண்பாவாகலினிதனுறுப்பால்
இந்நூல்சரியைநூல் கிரியைநூல யோகநூல் என்னு முந்நூலி
னுஞ்சிறந்தஞானநூலென்றுகுறித்ததென்கதான் ஈரசையாகுஞ்சி
ட்டிநவகைத்தளைசழீஇ பொழுகிசைச் செப்பலோசையான்வ
ந்ததாகலினிக்குறிப்பா லிந்நூல் ஆகமமுடிவும் வேதமுடிவுங்
கூறுமிருவகை நெறியுமொருவகை நெறியாத்தழீஇக்கொண்டி
[illegible] மைமசு [illegible]

தான் ஒன்றடுத்தவிரட்டை முப்பத்தாறெழுத்துக்களை
க்கொண்டு நிற்றலினிக்குறிப்பானிந்நூல் பாசமொன்றடுத்த த
த்துவமுப்பத்தாறென்று மம்முப்பத்தாறன் றன்மையினவையெ

ன்று பகுதியில்வகையு முணர்த்துவதெனக்குறித்ததென்க. தா
ன்நான்கடுத்த முப்பத்தாறலைகளை யசைத்துநிற்ற லினிக்குறி
ப்பானிந்நூல் அத்தத்துவ முப்பத்தாறனையு நியதிகளைதன் மு
றையையுணர்த்துவ தெனக்குறித்ததென்க. அஃதேன் முப்பத்
தாறன்மேலுன் கடுத்ததென்னெனின்- ஆன்மதத்துவத்தின்வன்
மைதோன்றற்கோரசையும் வித்தியாதத்துவத்தின் வலிதோன்
றற்கோரசையுநாததத்துவத்தின் பெருமைதோன்றற் கோரசையு
மிருந்தனவென்க. தான்-பதினைந்துசீர்சீர் கொளநிற்றலினிக் கு
றிப்பானிந்நூல் ஆசாரியத்தன்மை சீடத்தன்மைபதித்தன்மைப
சுத்தன்மை பாசத்தன்மை உபதேசத்தன்மை பக்குவத்தன்மை
யோகநிவர்த்தி கிரியைநிவர்த்தி சரிதை நிவர்த்தி விரத்திவிளக்க
ந்துறவுத்தன்மை யருளவத்தைத்தன்மை வாதனைமாண்டார் த
ன்மை நிலையியல்பு என்றுமிப்பதினைந்தனையுஞ் சீர்பெறக் கொ
ண்டதெனக்குறித்ததென்க.

தாமெழுவகைத்தளையினியைந்ததாகலினிக்குறிப்பானி
ந்நூல் ஆன்மதரிசனம் அருட்டரிசனம் பராதரிசனம் பரா
யோகம் பராயோகநீக்கம் போதமொழிவு இன்பப்பேறு என்
றுமெழுவகைநிலையு மயிலிப்பதெனக் குறித்ததென்க. தன்-த
னிச்சொல்பெற்று நான்கடியுடனடந்ததாகலி னிக்குறிப்பானி
ந்நூல்கூறுமொப்பற்ற ஞானமும் சுத்தச்சரிதை சுத்தக்கிரியை
சுத்தயோகம் சுத்தஞானம் என்நான்குபாதத்தோடு நடப்பதெ
னக்குறித்ததென்க. தான் - ஒரூஉத்தொடையொடு முத்தொ
டையானியன்றதாகலி னிக்குறிப்பா னிந்நூற்சுருதிகுரு அனுப
வமென்னு மூன்றுமொத்தியன்றதென்க குறித்ததென்க.

அல்லதூஉம் - இச்செய்யுளடிநேரடியாய்விதித்தவெழு
த்தெல்லையினிகவாது நிற்றலினிக் குறிப்பானிந்நூல் மெய்வீட்
டினெறித்தா யவ்வீட்டினெறிக்கெல்லையாய ஞானத்தினிகவாது
நின்றதெனினுமாமென்க. எல்லைஎன்னெனிற்பத்தெழுத்தென்ப
நேரடிக்களவேயொத்த நாலெழுத்தோற்றலங்கடையேயென்ப
வென்க இங்ஙனங்குறித்தற்கன்றே இச்செய்யுளீற்றடியினூற்பெ
யரை வேறடைகொடாது தனிமையினிறுத்தியதென்க.

இச்செய்யுள் சிறப்புப்பாயிரத் ததாயினப்பாயிரத் தில
க்கணமிதனுளிருந்த வாறெங்ஙனமென்னின் வள்ளலென்பதனா
லாசிரியர்பெயரும் குருராயன்வாதுவென்றசம்பந்தன்வள்ளன்
மலர்த்தாடலைமேல் வைத்துரைத்தா னென்பதனான் ஞாநாசா

ரியாராகிய பிள்ளையாரருளுபதேச வழித்தெனவுட் கொளப்படுதலின்வழியும் இந்நூற்றொடர்தமிழ்த் தொடராக வினித்தமிழ்வழங்குநிலமேயிந்நூல்வழங்குநிலமெனக்கருதப்படுதலினெல்லையும் ஒழிவிலொடுக்கநூலென்பதனு னூற்பெயரும் ஒழிவிலொடுக்கமென அன்மொழித்தொகைப் பெயர்மாத்திரையினில்லாது நூலென விரித்தமையினிந்நூலுந் தொகைவிரியுடையதெனக்கருதப்படுதலின் யாப்பும்உள்ளத் தழிவிலென்பதனுற்கருதியபொருளும் அன்பரொலா முன்னவென்பதினுல் அன்பரொலாமுணைற் பொருட்டிஃதியற்றுகமவன் றுள்ளெழுந் தெதிரிட்டுநின்றதாசிரியரது பெருங்கருணையெனக் கருதப் படுதலிற் கேட்போரும்உள்ளத்தழிவிலடுக்குந் தேனென்பதனுற்பயனும் புலப்படுமாகலினவையிருந்தவாறிங்ஙனமென்க.

இப்பாயிரச்செய்யுள் மூற்காலத்தது.

இவ்வுரை-சி-இராமலிங்கபிள்ளையவர்களாற்

செய்யப்பட்டது.

இஃது காஞ்சிபுரம் - மாசிலாமணி முதலியா ரவர்களால்

இயற்றப்பட்டது.

---

விருத்தம்.

வஞ்சியர்மாமோகமுறுமாதவத்தோர்புகழு ... ... ... ... ❀
மாதேவனருள்விளங்கிவளருநிதிப்புதைபோல் ... ... ... ❀
விஞ்சியசம்பந்தனடித்துணையுளங்கொள்வள்ளல் ... ... ... ❀
விளம்பியருளொழிவிலொடுக்கப்பெயர்கொண்முறையு ... ❀
மஞ்சனம்போற்றிருப்போரூர்ச்சிதம்பரமாமுனிவ ... ... ❀
ரருள்புரிந்தவதனுரையுமறிஞரிஞ்யவித்துத் ... ... ... ... ❀
தஞ்சமுறுமூலகுணர்வானச்சிலியைவித்தான் ... ... ... ❀
றருமண்ணிப்பாக்கமகிழ்சபாபதிபூபதியே ... ... ... ❀



# அதிகாரவட்டவணை.








இஃது.

சிந்தாத்திரிப்பேட்டை.

அண்ணாமலைமுதலியாரால்

அச்சடிக்கப்பட்டன.




## இந்நூலுண்பாடத்திற் சிலசில இடங்களிலுள்ள மறைச்சொற்பொருட்குத் தெளிசொற்பொருள்.



௧-பவுரிக்கூத்து-வலமிடமாகச் சூழ்ந்தாடுங்கூத்து.

௨-குறுமன்னியர் - சிலராலறிந்து மதிக்கப்படும் பிரபுத்துவமுடையோர்

௩-மகாமன்னியன்-பலராலு மறிந்து மதிக்கப்படும்பிரபுத்துவமுடையோன்.

௩-பிரளயாகலர்-மும்மலங்களு ளொருமலநீத்தோர் அவர் பிரமன் முதலானோர்.

௪ ஞாதுரு-காண்பான்- ஞானம்- காட்சி-ஞெயம்- காணப்பட்டது.

௫-சூக்குமைவாக்கு-வார்த்தைதோன்றற்கு முதற்காரணமாயுந்தீயிலேநாதவடிவாய் நிற்குமொருசத்தி-பரஞானம்- அநுபவஞானம்-அபரஞானம்-வாசகஞானம்.

௬-பகடிக்கூத்து-உள்ளதுபோன்றில்லாதைக்காட்டும் வெளிவேடம் அல்லது அகசியக்கூத்து.

௮-அரிப்பாளன்-குப்பை முதலிய விடங்களிற்பொன்முதலிய அரித்தெடுக்கின்றோன்.

௮-கொழுந்தாடை, கரும்பினுனித்தழை.

௰௨-சாயாபுருடன், தந்நிழலைப்பார்த்துப்பின்னுகாயத்தையுற்று நோக்குகின்றார்க்கு அவ் வாகாயத்தின்கட் புருட வடிவம் போற்றோன்று மந்நிழற்காட்சி.

௰௫-பைமறித்தல், உள்ளிருந்தசரக்கு வெளிப்படப்பையைவாய்த்தொட்டு உட்புறமேற்பட்டும் வெளிப்புற முட்பட்டு மடங்கமடக்கல்.

௰௭- கிண்கிணிவாய்ச் செய்தலர்தல், வட்டவடிவாக முகங்கொமலர்தல்.

௨௰-பஃறுளை, பலதுளை.

௨௫-பற்ற, பார்க்கிலும்.

௩௰-அருகித்தோற்றல், சுருங்கித்தோற்றல்.

௫௰-பிரேரகம், காரியப்படுத்தல்.

௫௪-பிரதிபலிதம், எதிர்விம்பம்.

௫௭-சகசமலம், ஆணவமாகியமலம்.

௯௫-கடா,

௬௪-விட்டிசையாநிசைத்தல், நடுவேநில்லாமலோலித்தல்.
௬௫-நகினம், நிருவாணம்.
௭௭-தேறிட்டநீர், தேற்றாங் கொட்டையாற் றெளிவிக்கப்பட்டநீர்.
௬௪-கவுசனை, யாதாயினு மோர்பொருளை யுள்வைத்துமறையமேல்மூடிக்கட்டுமேற்கட்டு
௬௬-சுழல்விறிசு, கொள்ளிவட்டம்போற் சுற்றுவதாய ஒருவகைமருத்துவாணம் இத்தேயத்திக்காலத்தில் சுழலபுறிசு என்று வழங்குகின்றது.
௱௩-அநனனியம், அன்னியமல்லாமை.
௱௪-நெற்பொலி, தூற்றுநெல்.
௱௭-துப்புசெறித்து, துப்புஅவிழ்த்து.
௱௰௩-அநுபவிக்கச்சிதைக்கும், அநுபவிக்கவறிகின்றபோதும்
௱௪௨-அவித்தியாகதம், அஞ்ஞானமயம் வெறுவீடர்அநுபவிப்பதற் கிலாமையால்விட்டோர் போன் றிருப்போர் கறண்டல் பற்களாலநெருககிப்புறண்டுதல்.
௱௭௧-சேட்டித்தல், தொழிற்படுத்தல் அல்லது குணக்கேடனதொழிலை விளைத்தல்.
௱௭௭ சிங்கி, விலங்கு.
௱௮௮ நாங்கூழ், நாகப்பூச்சியென்னுமோர்கிருமி.
௲ -விகளம், பௌனம்.
௱௬௨-மடமெலிப்பு, பனைமடலாற் குதிரைசெய்தேறுதல்.
௱௪௫ மூடிகளசபுத்தி, முடிகிரசு களசம் நீக்கம் முதநி வீடு
௱௪௪-வாகியென்றவார்த்தை, இதுசெய்கவிடுகவென்று நியாயமாகக்கூறும்வார்த்தை.
௱௫௧-வியாபகம்,கலப்பு வியாத்தி கலக்கப்படுவது.
௱௫௩-விசர்க்கரித்தல், விடுத்தல்.
௨௱-ஐவராசர், பாண்டு மக்களாகிய தருமன் முதலிய ஐவர்.
௨௰-மந்தகாசப்பிரகாசம், புன்னகைப்பிரகாசம்.



திருச்சிற்றம்பலம்.



உரையாசிரியர்.



ஸ்ரீ- சிதம்பரசுவாமிகள்.



உ

சிவமயம்.

# ஒழிவிலொடுக்கம்.

## காப்பு.



(விநாயகர்தோத்திரம்.)

நிம்பநிழற்பா-லும்பன்முகத்தார் ... ... *
செம்பதுமத்தா-ணம்புகருத்தே, ......... *



(சுப்பிரமணியர்தோத்திரம்.)

ஒழிவிலொடுக்கத்துலாவரநாயேற்குச்......... *
செழிவிலொடுங்கருணைசேர்க்கு-முழுதின்டப் *
பண்டைவளநாட்டும்பரமகுருப்போரூரன் ...... *
ண்டைவளநாட்டுத்திருத்தாள்... ................... *



(திருஞானசம்பந்தசுவாமிகள்தோத்திரம்.)

வள்ளலுரைத்தவழுவிலொழிவில்லொடுக்கத்..... *
தெள்ளுமுரையெல்லாந்தெரிவிக்கு-முள்ளமே
யெம்பந்தநீக்குமிறைவன்றமிழ்க்காழிச்,... ... ... *
சம்பந்தன்பூஞ்சதங்கைத்தாள்...... ................. *

ஆனைமுகனாறுமுகனம்பிகைபொன்னம்பலவன்.... . *
ஞானகுருவாணியையுண்ணுடு...... ... ... ...,... *

---

“உள்ளவுரைநாயேற் குறச்செய்யும்” என்று பாடமோதலுமுண்டு. *

ஈண்டு - இத்தோத்திரச் செய்யுட்கள் உரையாசிரியரால் இந்நூற்கு உரை இனிதுமுடிதற்பொருட்டு இயற்றப்பட்டன.





உ

திருச்சிற்றம்பலம்.

# ஒழிவிலொடுக்கம்

## உரைபாடம்.

### முதலதிகாரம்.

### வேதாகமப்

# பொதுவிலுபதேசம்.

ஆசாரிய ரநாசாரிய ரிலக்கண முதலியவையு
மிந்நூலிற்கூறியகருத்தெல்லாவற்றையுந்தொகுத்
துப் பொதுவா னுபதேசமாகக் கூறினமையா லிவ்
வதிகாரத்திற்குப்பொதுவிலுபதேசமென்று
பெயராயிற்று.



(வெண்பா.)

வேதாகமப்பவுரிவீசுங்களாசநிலை... ... ... *
யாதாரவெற்பிலபிடேகம் - போதத் ... *
திருளிலெழுபாநுவெனதொழிவிலின்பக் ... ... *
கருணைபொழிவானெடுத்தகை ... ... ... ... ... *

வேதாகமப்பவுரிவீசுங்களாசநிலை--எ-து-வேதாகமங்களினது பவுரிக்கூத்தினைப் பிரம்போடுங் கைவாரங்கொண்டுவீசி நிறுத் துமோருண்மைநிலை.

ஆதாரவெற்பிலபிடேகம்---எ-து- ஆறாதாரங்களாகிய பொரு ப்பனையன் முடியிற் சூட்டுமோர் மகுடம்.

போதத்திருளிலெழுபாநு---எ-து- ஆன்மபோதத்தின்கண்ண தாகிய வாணவவிருளைக் கிழித்தெழாநின்ற ஞானசூரியன்.

எனதொழிவிலின்பக்கருணைபொழிவானெடுத்தகை.---எ-து- எனதுபோதநாசத்தின் கண்ணே யருளானந்தத்தைப்பொழியா

நின்ற பிள்ளையா ருயரவெடுத்துச் சுட்டோடு மெய்ப்பொருளைக் காட்டியதிருவத்தமானது -என்றவாறு.

அரங்கின்கண் ணடிக்கின்ற கூத்தர்பலருக்கு முதல்வனாகிய கூத்தன்வந்து கூத்தைக் கைகலாரங் கொண்டு நிறுத்தி யவ்வரங்கின்கண் ணுள்ள குறுமன்னியர்கட்கெல்லா முதல்வனாகிய மகாமன்னியனையே புகழ்ந்து சுட்டிநின்றாற்போல வேதாகமங்கள்கூறியபலசமைய நெறிகளையு மச்சமையங்கட்குரிய கடவுளரையுங் கடந்துநின்று அச்சடவுளருக்கெல்லாமுதல்வனையே பிள்ளையார் பாரா நககணணிறு லுணர்ந்து புகழ்ந்து சுட்டி நின்றமையால் "வேதாகமப்பவுரிவிசுங்களாசநிலை" எனறும்— நிராதாரமாகியவருளினின்று மீதாநமாகிய மெய்ப்பொருளிற்சுட்டோடு மதிதப்பட்டு நின்றமையால் "ஆதாரவெற்பிலபிடேகம்" என்றும்— ஆன்மபோதத்தைமறைத்த வாணவவிருளை நீக்கிச் சிவத்தையறிவிக்குந் திருவருளைப்போ லிறைவனைப்பிறர்க்கறிவித்தமையால் "போதத்திருளிலெழுபாநு" என்றுங்—கூறினார்.

"தோடுடையசெவியன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்-காடுடையசுடலைப்பொடிபூசியெனதுள்ளங்கவர்கள்வ-னேடுடையமலரான்முனநாட்பணிந்தேத்தவருள்செய்த-பீடுடையபிரமாபுரமேவியபெம்மானிவனன்றே".

என்னுந் திருக்கடைக்காப்பான்- மெய்ப்பொருளைத் தரிசித்துச் சுட்டிப்புகழ்ந்து நின்றம்பாது திருவுள்ளம் மெய்ப்பொருட் கிருபாநோக்கம்வைக்க வக்கிருபாநோக்கத்தின் வழித்தாய்ச்சென்று சிவத்திலதிதப்பட்டு நின்றானென்பதும் பிறர்க்கறிவித்தானென்பதும் "எனதுள்ளங்கவர்கள்வன்" என்பதனானும்— "பெம்மானிவனன்றே" என்பதனானுங்—காண்க.- இத்திருக்கடைக்காப்பு பிள்ளையார் ஞானபோநகமுண்டருளியபோது அருளிசசெயப்பட்டது. திருககடையாப்பு என்றுபாடங் கூறுவாருமுளர்.

பிரளையாகலர்க் கநுக்கிரகித்தலும். இது.— வேதாகமங்களைமுதற்பொருளாக்கி யவை யொன்றோடொன் றெவ்வாறுகூறுப்பலபேத சமையநெறிகளைக் கூத்தர்க்கினார்.

ஆதாரமாறையு மூடுருவிநின்ற சுழிமுனையை-மேருவென்றும்-இடைபிங்கலைகளை- யதனைவலம்வருஞ் சூரியசந்திர ரொன்றும்-யோகிகள் கூறுவராகலின் "ஆதாரவெற்பு" என்றார்.—முடி

கூறினமையால் மேவற்பென்று மகிறினையை யுயர்திணையாகக்கூறப்பட்டது — "கை" என்பதை மூன்றிடத்துங்கூட்டுக.— (கைவாரங்கொள்ளுதல்) கூத்தை நிறுத்தற்பொருட்டு ஒகோவென்று மடுக்குமொழிகூறிக் கரமுயர வெடுத்துவீசுதல்.

"களாசம்" என்பது-பிரம்பு.—பிரம்போடும் வீசுமெனக் கூட்டுக.—

இத்திருவெண்பா - ஞுருதோத்திரம். (௧)

௧௪

தன்னிழப்பையென்னகற்றுச்சாதிப்பான்சற்குருவா...*
மன்னுபெருஞ்சீயமதயானை-தன்னடைமேற் .......*
சொற்பநத்தேதோன்றித்துடிப்பற்றுக்கேவலமாய் ....*
நிற்பதும்பாற்பாரரனெனின் ... ... ... ... ... .... *

தன்னிழப்பை யென்னகற்றுச் சாதிப்பான்—எ-து- ஒருவன் றற்போத வொழிவை வச்சாத்திரங்களைக் கற்றவற்றாற்கூறியவாறே தனது போதத்தா னிட்டைகூடி யெங்ஙனஞ் சாதித்தடைவான்.

சற்குருவா மன்னுபெருஞ் சீயமதயானைதன்னடைமேற்சொற்பநத்தேதோன்றி—எ-து- ஞானசாரியனாகிய வருணிலைபெற்ற பெரியசிங்கம்போல்வான்- சீடனாகிய மதயானையினது மேலாம் பக்குவத்தாற் பிரபஞ்சமாகியசொற்பநத்தின்கட்டோன்றி.

துடிப்பற்றுக்கேவலமாய் நிற்பதுபோல்—எ-து-மதம்பொழியா நின்ற யானையினது சொற்பநத்தின்கட்சிங்கந்தோன்றவதனது மதகெர்விதமியாவுங்கெட்டு மருட்கேவலப்பட்டு நின்றாற்போலச் சீடனாகிய யானையினது ட்புறனாய்ச் சீவியாநின்ற போதப்பதைப்பெல்லாமற்று அருட்கேவலமாய் நிற்கும்படி.

பாரரனெனின்—எ-து- அப்போதத்திற்கு முட்புறனாகியகிருபாநோக்கஞ் செய்யானாயின்—என்றவாறு.

போதவொழிவின்கண் மெய்ப்பொருளிருத்தலின் மெய்ப்பொருளைத் "தன்னிழப்பு" என்றார்.

மெய்ப்போதத்தாற் பொய்ப்போத மழிவதன்றி இதனையிதனாலழிக்கத் தொடங்கின் மேன்மேல் வளர்ச்சியா யழிவுகூடாமையில "தன்னிழப்பையென்னகற்றுச்சாதிப்பான்" என்றார்.

யானையைச் சிங்கங்கொல்வதுபோல ஞானத்தா லஞ்ஞானத்தைக் கெடுத்தலிற் "சற்குருவாமன்னுபெருஞ்சீயம்" என்றும்

னார் ஞாதுரு-ஞாந-ஞேயமாய- விவைகளொன்றுந்தோன்றாது ஆன்மாவைப்பார்வையாற் சிவத்தி லதீதப்படுதலில் "கேவலமாய்நிற்ப துபோற் பாராவெனின்" என்றுங் — கூறினார்.

"குருவாஞ் சீயம்" என்றமையாற் (சீடனுமியானை) என்று வருவிக்கப்பட்டது, "துடிப்பற்றுக் கேவலமாய்நிற்பதுபோல்" என்றுவமையாகக் கூறினமையா லீண்டு மியானையுஞ் சிங்கமும் வருவிக்கப்பட்டது.

சிங்கம்போல்வான் யாராயி னெங்ஙனஞ் சாதிப்பானெ னமுடிக்க

நடை-பக்குவம்-மேலாயபக்குவம்- எனமாறுக.

சீயம்பாராவெனி னெனமுடிந்தது- இராசசிங்கம் வந்தா னென்பதுபோலக்கொள்க.

இத்திருவெண்பாவா லதிதீவிர பக்குவர்க்காயினும் ஞானா சாரியராலன்றிப் போதநாசங் கூடாதென்றுகூறியவாறுகாண்க

௫ கூலித்தொழிலாளர்கொண்டுவிற்போர்போன்றகுரு *
வேலைப்பகடிகளைமேவாதே-காலப்போற் ........*
பார்த்திருக்கவைத்தபரமகுருவைப்பரவ... ...,... ....*
வார்த்தையிலைதீண்டாமநம்... ... ... ... ......*

கூலித்தொழிலாளர் கொண்டுவிற்போர்போன்றகுரு வேலைப் பகடிகளைமேவாதே—எ-து- வேலைசெய்து கூலிவாங்கிக்கொள் ளுங் கூலித்தொழிலாளரையும் - ஓர் பொருளைக்கொண் டோர் பொருளைவிற்கும் வணிகரையும்போன்று- பிறர்க்குக் கிரியைக ளைச்செய்து காட்டியும்- உபதேசங்களைக்கூறியும் - அவர்கையில ருத்தம் பறிக்குந்- தமக்கிசையாத குருவென்னும் பெயர்கொ ண்ட தொழிற்செய்யும் பகடிக்கூத்தாடிகளை மாணா நீமெய்க்கு ருவென்றடையாதே,

காலம்போற் பார்த்திருக்க வைத்த பரமகுருவைப்பரவ வா ர்த்தையிலைதீண்டாமநம்.—எ-து - கதிர்வலம்வருதலாற்- கணம்- நாழிகை- நாள்- மாதம்- இருது-வருடம்-யுகம்- முதலிய காலங் களுமக்காலங்கடோறுந் தோன்றும் பிரபஞ்சங்களுமநந்தபே தமாய்த் திரியவுந் தனக்கோர் திரிவின்றி யவற்றோடுந் தாக்கற்றி ருந்த காலதத்துவம்போல மாயையிற்றோற்றிய கருவிகளுமிக்

# ஒழிவிலொடுக்கம்.

கருவிகளாற் காரியப்பட்ட பிரபஞ்சங்களு மநந்தபேதமாய்த்தி
ரியவுந் தனக்கோர்திரிவின்றி யிவற்றோடுந் தாக்கற்றிருந்த வரு
ளேவடிவாகக் கிருபாநோக்கம்வைத்து மாணாக்கனைச் சுட்டற்றி
ருக்கவைத்தமேலாகிய ஞானாசாரியனைத்தோத்திரம்பண்ணவோ
ர்வசனமுமில்லை தியானிக்கவெனின் மனமு மவனைத் தீண்டாது
ஆகலின் அக்குருவை யடைதி—எ-று.

கதிர்வலம் வருதலாற் கணைமுதலிய காலபேதங்களும் பிர
பஞ்சபேதங்களு நானாவாய்த்தோற்றினு மவைகடோற்றற்கும்
அதுவலம்வருதற்குங் காலதத்துவம் ஏதுவானாற்போல மாயை
யிற் கருவிகளும் பிரபஞ்சங்களு நாநாவாய்த்தோற்றினு மிவை
தொழிற்படுதற்கு மிவை மாயையிற் றோற்றுதற்குந்திருவருளே
துவாயிற்றென்பதுங்காண்க.

பரமகுரு-சூக்குமைவாக்குந் தற்போதமுங்கடந்த சிவமெ
ன்றறிவிக்கவேண்டி ‘‘வார்த்தையிலை தீண்டாமனம்,, என்றார்.

இத்திருவெண்பாவா லாசாரியனையு மதாசாரியனையு மா
ணாக்கனுக்கறிவித்தவாறு காண்க. (௫)

—••••••—

குட்டித்திரட்கரடியாறொழுகக்கோன்குதித்துக்...... ❋
கட்டிப்புதைந்தகதையாகுந்- துட்டமலப் ... ... ❋
பித்திலேமூத்தவர்கள்பேய்பிதற்றும்பேதையர்க்குப ...❋
புத்திபோற்காட்டும்பொருள்... ... ... ... ... ... ...❋

குட்டித்திரட்கரடியாறொழுகக்கோன் குதித்துக்கட்டிப்பு
தைந்தகதையாகும்—எ-து-பலகுட்டிகளோடுங்கரடியானதுநதி
வெள்ளத்தோடுஞ்செல்ல வதனது கரைக்கணின்ற வோரிடைய
னதனை யாடெனக்கருதி யந்நீரிற்குதித் ததனைப்பற்ற வஃதிவனை
ப்பற்ற வஃது மிவனு மவ்வெள்ளத் தாழ்ந்தனனென் றுலகத்தார்
கூறுங்கதைபோலவாகும்.

துட்டமலப்பித்திலே மூத்தவர்கள் பேய்பிதற்றும் பேதை
யர்க்குப்புத்திபோற் காட்டும் பொருள்—எ-து-கொடிதாகியமூ
ய்மலப் பைத்தியத்தான் முதிர்ந்த வாசாரிய ரல்லாமோர்காற்
கூறிய தோர்காற்கூறாது பேய்பிடித்தாற் போலும் பிதற்றுநின்
றவயக்குவர்க் குபதேசம்போலுங் கூறிய வருத்தம்.

பரஞானமென்பது சிறிதுமில்லாதா ரபரஞானங்களைக்கற்
றுக்கொண்டு மனைவிமுதலிய குடும்பவெள்ளத்தி லாழ்ந்துகிடக்

# பொதுவிலுபடே

இன்றபேர்சிலர்-டம்பநிமித்தங் கேழ்க்கவவர்க் கருத்த நிமித்த முபதேசிக்க அந்தவுபதேசப்பொருளா லிருவருக்குந் தோட மேவிட்டுப் பிறவிச்சாகரத்தாழ்வர் ஆகலி னிக்கதையை இப்பொ ருளுக் குவமையாகக் கூறினார்.

இடையன் காடியை ஆடென்றுங் காடி யவனை நதிகடத்து ம்புணையென்றுங் கருதினதுபோல-வபக்குவனைப் பக்குவனென் று மநாசாரியனை யாசாரியனென்று மிருவரு மாறுபாடாய்க்க ருதினுமொன்பதுமாம்.

இத்திருவெண்பாவா லநாசாரியனுக்கு மவனிடத்துபதேச ங்கேட்ட வபக்குவனுக்குங் குற்றம்வருமென் றறிவித்தவாறு கா ண்க. (௪)

குருட்டரிப்பனார்க்குங்குபேரனென்றுபேரோ .*
கருப்பிரதமோத்தையோகாட்டு-மருட்டரித்த*
வாசானைப்போல்வரோவாறாறுக்கப்புறத்தே......*
பேசாதிருத்தவல்லாப்பேர்... ... .. ... ... ...*

—ரிப்பனார்க்குங்குபேரனென்றுபேரோ - கருப்பிரத மோத்தையோகாட்டும்—எ-து- பிறவியந்தகனாகிய வரிப்பாள னுக்குங் குபேரனென்று பெயருண்டுகொலோ- கரும்பினிரத த்தை மோத்தையாடறிந்துகூறுமோ—அவைபோலும்.

அருட்டரித்த வாசானைப்போல் வரோவாறாறுக் கப்புறத் தே பேசாதிருத்தவல்லாப்பேர்.—எ-து- அருள்வடிவமல்லாதமா யாவடிவங்கொண்ட வநாசாரியரானார்- முப்பத்தாறு தத்துவங்க ளையுங் கடந்துநின்ற சிவத்தோடு மான்மாக்களை யிரண்டறக் கலப் பித்து மவுநமாய்வைக்க அருளே திருமேநியாகக்கொண் டெழு ந்தருளிவந்த ஞானாசாரியராப்போலு மாவாரோ.—எ-று.

குருட்டரிப்பனுக்குக் கைப்பரிசமேயன்றிக் கட்பார்வை யின்மையாற் பொற்பொடியேதோன்றுந் தன்மையிருப்பவனை யுஞ் செல்வத்தா னளகேசனென்று கூறக்கூடுமோ—வதுபோல் அஞ்ஞானாசாரியருக்குக் கிரியைத்தொழிலன்றி ஞாநமேயில்லை. யங்ங னமிருப்ப வவனையுங் குருவென்று கூறப்படுமோ—என்றும்— மோத்தையாடு கொழுந்தாலை இன்பமேயன்றிக் கரும்புதின்னு வறியா தாகலி னதனிரதத்தை யறிந்திங்ஙனமென்று தனதுகு ட்டிக்குக்காட்டவறியுமோ—வதுபோல-அஞ்ஞானாசாரியர் ஆகமங்கள்

கூறு மந்திரகலை - தந்திரகலை - உபதேசகலைகளுள். உபதேசகலை யைவிட்டிருவகைக்கலைகளை யாராய்ந் தவற்றுட்கூறிய சரிதாதி களைச்செய் தவற்றான்வரும்விடையா நந்தாநுபவம் பெறுவதோய ன்றிச் சிவாநந்தாநுபவ மனுவளவேனு மறியார் - அங்ஙன மிரு ப்பப்பிறர்க்கச்சிவாநந்தாநுபவ மெங்ஙனங் கூறுவார் — என்றும் இந்தவுமை பகளா லறிவித்தவாறு காணக.

அல்லாநன்றியும் ஆட்டோகாட்டும் என்னுமெதிர்மறை ஒகாரம் அவ்வாட்டைமறுத் தியானையைக் காட்டிநின்றதாகலிற் கருப்பந் தோட்டத்தைப்போர் சிவாகமம் - அதனுட்புகுதும் ஆடு யானை போல இதனுட்பு குதுங் கிரியாகுரு - ஞாநகுரு.

ஆடு கருமபையைவிட் டிலையைத்தின் றதனதுசுவையைத்தா னுமறிந்து தனது நட்டிகருங் காட்டுதல் போலவும் யானையிலை யைவிட்டுக கரும்பைத்தின்ற தனது சுவையைத் தானுமறிந்து தனது கன்றுக்குங் காட்டுதல் போலவுங் கிரியாகுரு - மந்திர - தந்திர - கலைகளை யாராய்ந் தவற்றுட்கூறிய சரிதாதிகளை யநுட் டித் தவற்றான்வரும் விடையாநந்தத்தைத் தானு மநுபவித்துத் தன்னையடைந்த சீடனுக்கு மவ்வுபதேசங்களா லவ்வாநந்தத்தை வருவிப்ப னென்பதும் — ஞானகுரு மந்திர - தந்திர - கலைகளை விட் டுபதேசகலையை யாராய்ந் ததனுட்கூறிய ஞாநாநந்தத்தை த்தானும்பெற்றுத் தன்னையடைந்த பக்குவனுக்கு மந்தஞாநாந ந்தத்தை வருவிப்பனென்பதுங் காண்க.

(உ-ம்) பிரபுலிங்கலீலை "புறம்புகாண் குவன்புல்லியனீசனை யறிந்தஞாநியகமுறக்காண்பனு - லெறும்பிகாண் குறிலின்கரும் பேகொளுஞ் - செறிந்தவாடிலைதின் பனவெனபவே,,"

அசகசாந்தரம் என்னுங் கிரந்தசமாதியும் - அது. —

குருட்டறிப்பனென்பதைக் "குருட்டறிப்பனுர்,, என்றிழி பின்கட் பன்மையாகக் கூறினர்.

கட்பார்வையின்மைபோன் ஞாநமின்மை — கைப்பரிசம தலபோற் கிரியைகளைச்செய்தல் — என்பதுங்காண்க.

இத்திருவெண்பாவா லநாசாரிய ரிலக்கணமு மாசாரியரில க்கணமுங் கூறியவாறுகாண்க. (௬)



தன்னறிவுசாட்சியல்லாற்சாயுச்சியப்பயனைச்........*
சொன்னபிழைகெட்டேன்றொலைப்பமோ - முன்னே

# பொதுவிலுபதேசம்.

நடவாவழியொருவன்சொல்லநடந்து... ... ... ...*
தடுமாறிநொந்தறியாதார் ... ... ... ... ... ... *

தன்னறிவுசாட்சியல்லாற் சாயுச்சியப்பயனைச் சொன்னபிழை கெட்டேன் றெலைப்பமோ—எ-து- சிவாநுபவநன்றாய் விளங்கிற்றென்பதற்கு மஃதின்றென்பதற்குந் தனக்குத் தன்னறிவுதானே சாட்சியாயிருக்கவும் பயனைக்குறித்து மயக்கத்தாலந்தவநுபவந் தனக்குண்டுபோற்காட்டிப் பிறர்க்கு வீடடையு நெறியானவுபதேசப் பொருளைக்கூறிய பாவங்களைக் கெட்டேன்? எந்தக்கால நீக்கிக்கொள்வமோ.

முன்னே- நடவாவழி யொருவன்சொல்ல நடந்து தடுமாறி நொந்தறியாதார்—எ-து- அஃதன்றியுந் தாமுன்செலலாதவோரூர்க்குப் பின் செல்லுங்கா லவ்வூ ரடையு நெறியாம்தென் றந்நெறிக்கட்டான் முன் நடவாவொருவனைக்கேட்ப வவனதன்கட் சென்றுன்போன்று நெறியல்லா நெறிகூற வீதுண்மையெனக்கருதியந்நெறிகட்சென்று முன்னிருந்தவூரும்பின்னடையு மூருமன்றிநடுவிடைத் தடுமாறி மநமுடல் வருந்தி யறிந்தவரலர்—எ-று.

ஐயன்-காளி- சந்நிதியி லசத்தியங் கூறினார்க்கு மிம்மைக்கண்ணே துன்பம்வருதலிற் பூரணசிவத்தின் சந்நிதியி லசத்தியங்கூறியபாவந் தொலையாதாகலிற் "கெட்டேன்றொலைப்பமோ," என்றும்—வாக்காற் கேட்டறிந்து காயத்தாற் சென்றடையுமூர்க்கு நெறியறியாவொருவனெறிகூறக்கேட் டதன்கட்சென் றதனை வருமிட ரநுபவித்தறிந்தவர் மநத்தானுஞ் சென்று கூடுதற்கரிய வீடடையு நெறியைத் தாமறியாதிருந்து மறிந்தார்போன்றுபிறர்க்குக்கூறூர்-ஆகலி னிங்ஙன மூவமை கூறினார்.

செறலின்கட் (டம்) என்னும்பன்மை "தன்," என்னுமொருமையாய்வந்தது.

"அல்லால்," என்பதை மயக்கத்தாலெனக்கொள்க.

"முன்னே," என்பதை யிரண்டிடத்துங் கூட்டுக.

"கெட்டேன்," என்ப திரக்கக் குறிப்பின்கண்வந்த வழக்குச் சொல்.

இத்திருவெண்பாவால் சாத்தியனேயன்றி சாதகன்ஞானோபதேசம் பண்ணுதல் குற்றமென்றறிவித்தவாறுகாண்க. (ங)



பொய்ப்போகப்போகப்பொருந்திப்பொருடானுஞ் *
சைமோகபோகதரங்கசதி -னையும்......... *
பரிபாகங்கண்டிபதையாமற்பார்க்குங்......................... *
குருவேகாண்ஞானக்குரு ... ... ... ... ... ... ... *

பொய்ப்போகப்போகப்பொருந்தி—எ-து- பொய்யாகிய கருவிகளான முப்பத்தாறு நீங்கநீங்கவே யவைகளைப் பகுத்தறிந்து நீங்கிநின்ற வறிவு தானென்று தன்னை யருளா லுள்ளபடி கண்டு பின்பு அருட்டரிசநம் - பரைதரிசனம் - பரையோகம்- என்னு மிவற்றை யடைந்து.

பொருடானுஞ்சைமோகம்போக தரங்கத்தி-னையும்- பரிபா கங்கண்டு பதையாமற் பார்க்குங் - குருவேகாண் ஞானக்குரு.— எ-து மெய்ப்பொருளாகிய வநுபவசத்தியிற் றோன்றுமான ந்தபோக சமுத்திரத்தலையி லவன்கரைந்தும்போகுந் தீவிரதரப க்குவ மீதெனறுகண்டு மாணாக்கனழும்போத மனுவளவேனும் பதையாதடங்கக் கிருபாநோக்கம்வைக்கு மாசாரியனே ஞானா சாரியனாவான்—எ-று.

சிவகரணம் பரையோகமளவுந்தொடர்தலிற் "பொய்ப்போ கப்போக" வென்றார்.

"சைமோகம்" என்றதனுபவசத்தி அது பரையோகத்திற் குஞ்சுகாதீததறிற்குமிடைமயதோன் றுமானந்தப்பேற்றிடம்.

"போகதரங்கத்து" என்றமையாற் சமுத்திரம் வருவிக்கப் பட்டது.

"தரங்கம்" ஆநந்தமேலிடல்.

அவ்விடத்தான்மபோதங்கெடுமாகலின் "னையும்" என்றார்

அடிதொடங்கி யநுபவமுற்றுங் கூறினமையா லிவ்வநுபவ முற்றும் பெறுமவ னதிதீவிரபக்குவ னென்பதுங்காண்க.

இத்திருவெண்பாவால் ஞானாசாரியராயினும் பக்குவனை யறிந்து போதியாராயி னவரையுமாசாரிய ரலரென்றுங் கூறிய வாறுகாண்க. (எ)

தேனுண்டெழுந்திறம்போற்சிவாநந்த ... ... ... *
மோநந்தனும்பிமொழிகாலத்-தேநின்று.......

தோன்றிருதுபோலுமொன்றைச்சுட்டாதுகேட்பவர்கட் *
கான்றதவம்வேதமது... ... ... ... ... ... .. ... *

தேனுண்டெழுந்திறம்போற்சிவாநந்த - மோநந்துளும்பி மொழிகாலத்தே—எ-து-தேனை நிறையவுண்ட தனை மீட்டுங் கக்குந்தன்மைபோலுட்புறனு மெங்கு நிறைந்து மவநமாயிருந்த சிவாநந்தவெள்ளங் காருண்ணியத்தாற் றதும்பி ஞாநாசாரியருபதேசமொழிகளாக கூறுங்காலத்தளவும்.

நின்று - தோன்றிருது போலுமொன்றைச் சுட்டாதுகேட்பவர்கட் கான்றதவம்வேதமது—எ-து- பலிவிடை செய்துநின்றுதோன்றப்பட்ட விருதுகாலம்போலு மதுவிதுவென் றொன்றையுஞ் சுட்டாது பனைப்பறவிருந் ததனைக் கேட்பவர்களுக்கு மாட்சிமைப்பட்ட தவமுடிவும்வேதமுடிவு மங்ஙனநின்றுகேட்குங் கேள்வியாம்—எ-று.

ஆசாரியர் மாணக்கனது பக்குவமறிந்து வலியக்கூறுதலேயன்றி யவனாயுமிவன வலியக் கேட்கலாகாதாகலின் "மோநந்துளும்பிமொழிகாலத்தே" என்றும்—இருதுவிற்பத்திரபுட்பபலாதிகள் தோற்றினு மவ்விருது விகாரமின்றியருதாற்போற் கருவிகளோடுங் கூடியிருந்து மவற்றுட் டாக்கற்றுநின்று கேட்கவேண்டுமாகலின் "இருதும்போலுஞ் சுட்டாது கேட்பவர்கள்" என்றுங் கூறினர்.

மோநந்துளும்பி மொழிகாலத்தென்றமையானும்—ஒன்றைச்சுட்டாது கேட்பவர்களென்றமையானுஞ்— சொல்லாமற் சொன்னதென்றுங் கேளாமற் கேட்டதென்றுமாயிற்று.

சுட்டற நிற்கவந்தது தவப்பயனாகலி னதனைத் "தவம்" என்றும்—அங்ஙன நின்றுகேட்கு மொழியாகலி னதனை "வேதம்" என்றும்—கூறினர்.

அங்ஙனஞ் சொல்லுவது மிங்ஙனங் கேட்பதுஞ் சாம்பிரதாயம்.

இத்திருவெண்பாவா லாசாரிய னுபதேசங் கூறுமாறு மாணாக்க னேற்றுக்கொள்ளுமாறு மறிவித்தவாறுகாண்க. (அ)

ருளிற்சுடரொன்னவிந்திரவியென்ன... ... ... *
வருளைக்கடந்தபராநந்தர் -திருவாக்... ... *

அமுதமழையம்பரச்சொன்னன்னிமித்தமாங்கே...*
மமதையிராதென்றேமதி... ... ... ... ... ...*

இருளிற்சுடரன்ன விந்திரவியென்ன-வருளைகடந்தபரானந் தர்-திருவாக்கு---எ-து-பூதவிருளின்கட்டோற்றும்விளக்குப்போ லுஞ் சந்திரன்போலுஞ் சூரியன்போலும் பிரகாசித் தாலவ் வி ருளைநீக்குந் திருவருளையுங்கடந்துசிவானந்தமயமாயெங்குநிறை ந்துள்ள ஞானாசாரியரது அழகியவசனம்.

அமுத மழையம்பரச்சொன் னன்னிமித்தமாங்கே மமதை யிராதென்றேமதி—எ-து- அமுதமழைபோலு மாகாசவாக்குப் போலு நலநிமித்தம்போலுமாமன்றி யதனகட் சிறிதேனு மக ங்காரமுண்டாகாதென றறிதி—எ-று.

அருட்டோற்றங்கான் மூவிதமாய்த் தோற்றலானு மொன் றற்கொன் றதிகமாய்ப் பிரகாசிக்கையானும் விளக்காதி மூச்சுட ரையு முவமையாகக் கூறினார்.

(உ-ம்) தத்துவப்பிரகாசம் — "பொறிகரணங்களையுயிர்ப் போற்போதம்போதத்தைப் - பொருந்திநடாத்துஞ்செயலாற் போதவுணர்வுணர்ந்தே- யறிவினதுஞ்செயலோநாமெனவுணர்வு ற்றிருப்ப வப்போதுவிளக்கெனவுமருணன்மதியெனவுங்-கதிர விடியுங்காலமெனவொளிவந்துற்பவிக்கும்"— என்பதனாலுங்கா ண்க,

நீர்மழை கைமாறின்றிப் பொழியினு மூறுபடுத்தினாசமுள வாகலி னம்மழையை யுவமைகூறாமல் 'அமுதமழை, என்றும்- ஆகாசவாக் குண்மையறிவித்தல்போ லுண்மையாகிய சிவத்தை யறிவித்தலின் 'அம்பரச்சொல், என்றும்—நல்லநிமித்தங்கேட் டோர்க்குத் தாங்கருதியபொருள் கைகூடல்போ லிதனைக்கேட் டோர்க்குத் தாங்கருதியவீடு கைகூடுதலின் 'நன்னிமித்தம், என் றுங்—கூறினார்.

தற்போதத்தாற்கூறுஞ் சொற்கட்கெல்லா மமதை யிருத் தலின் 'ஆங்கேமமதையிராது, என்றார். (௯)

சாயாபுருடனைப்போலானந்தமேதடித்த... ...*
மாயாவயிரிமநமாண்ட -நேயவுரை ... ...*
பாவேசர்விரர்ரசர்மடலாளர்... ... ... ... ... *
சாவானந்தர்க்குச்சரி... ... ... ... ... ... ...*

வேர்பறித்தமரங்-கொந்தலர்ந்துகாயாதொக்கும்—எ-து- நிலத்திலூன்றியமுதல் வேர்ப்பறிந்தமரம் பூத்துக் காயாதது போலு முன்போதமற்றபோதுகரணவிந்திரியங்களென்றுந்தோ ன்றாதறும்.—எ-று.

“உபாதான„மென்றது மாயை யதுகாரியத்தைக்காரணமாய்க் கூறியது கரணம்போற்றோன்றி மறைதலிற்போதத்தையுமுதி ப்பென்றார்- கரணங்கள்போதமிருந்தபோதிருந்து மிறந்தபோ திறந்தும் வருதலின் (வேர்)க்குவமையாகக் கூறினார்.

இத்திருவெண்பாவா லருளாற் கருவிகளின துண்மையை யறிந்துநீக்கினா னீங்குமென்பதும் போதத்தா லடக்கின் மேன் மேலு மெழுமென்பதுங் கருவிகளை நியதிகளைந்து தற்போதத் தையுமடக்கினான் மீட்டுங் கருவிக டோற்றாதென்பது மறிவித்த வாறுகாண்க. (௰௯)



இங்ஙனங் கருவிகளும் போதமுமிறந்துநின்றவிடத்துவரு மிலாபமென்னையெனின் மேற்கூறுகின்றார்.

சுட்டுப்போதங்கழன்றசுத்தமரைமாத்திரையின்......*
மட்டுத்தானற்றநிட்டைவாய்க்குமாற்-கெட்டேன்...*
றலைச்செய்யுமாநந்தஞ்சற்றேபால்வாரி..................*
மூலைக்கண்ணிற்றோன்றுமுறை ..........................*

சுட்டுப்போதங்கழன்றசுத்தமரைமாத்திரையின்-மட்டுத்தா னற்றநிட்டைவாய்க்குமாற்-கெட்டேன்- றலைச்செய்யுமாநந்தஞ் சற்றே—எ-து-அரைக்கணப்போதாயினுமிதுவதுவென்றுசுட் டியறியுந் தற்போதமொழிந்த வோர்வரம்பின்றிய சுத்தமாகி யநிட்டை வாய்க்குமாயிற் கெட்டேனுண்டுப் பிரவேசிக்கும் பே ராநந்த மற்பமோ.

பால்வாரி- மூலைக்கண்ணிற்றோன்றுமுறை—எ-து-மூலையி னதுசிறியகட்டோரத்திற் பெரியபாற்கட லுதையமான முறை மைபோற் பரிபூரணமாய்த்தோற்றும்.—எ-று.

ஈண்டுச்சுத்தமென்றது பரையோக மிப்பரையோகத்தி லா ன்மபோத மிகவுந்தேய்ந்திருத்தலி னதனை மூலைக்கண்ணென்று மிங்ஙனமிருந்தபோதரைக்கணத்திற் பரையோகநீங்கிப் பரிபூ ரணாநந்த மநுபவமாய்த் தோற்றலினதனைப் “பால்வாரி„ யென் றுங்கூறினார்.

ருவிகளும்போதமு மிறந்த சுத்த
நிலையி னின்ற லாநந்தலாப முணமெடன் றறிவித்தவாறு காண்க.

---

ஆகாயத்தேபலவுந்தோன்றியடங்காதோ............*
நீகாயத்தோடழுந்திநீங்கியரு-ளாகாதோ..........*
வென்றுசலிப்பானேனெதிரற்றபூரணத்தே ............*
யொன்றுமிலைகாணுனக்கு..............................*

நீகாயத்தோடழுந்திநீங்கியரு- ளாகாதோ - வென்றுசலிப் பானேன்—எ-து- நீ காயத்தோடு பொருந்தி யிருப்பதாய்க் கருதி யிக்காய நீங்கியெனக் கோர்காலந் திருவருள்வடிவ மாகாதோவென்று சலித்துத்துயருறுவானேன்.

ஆகாயத்தேபலவுந்தோன்றியடங்காதோ-வெதிரற்றபூரணத்தே-யொன்றுமிலைகாணுனக்கு—எ-து-ஆகாயத்தினிடமாய்ச்சரவசரதேகங்கள் பற்பலவுந்தோன்றிநின் றழியாதோ வதுபோலுன்போத மோர்பொருளையு மெதிரிடாதற்றபோ துன்னை விழுங்கிநின்ற வருட்பூரணத்தி லுனக் கத்தேகாதிப் பிரபஞ்சங்களொன்று மிலலைகாணும்.—எ-று.

ஆகாயத்தி னிடமாய்த் தோன்றி யொடுங்குங் காயங்க ளவ்வாகாயத்திற் கன்னியமானதுபோன் மூன்றேகாதிகளை யானெனதென்று பற்றிநின்ற போதந் திருவருளி லழுந்திப் பூரணமாய்ப்போகத் தேகாதிப்பிரபஞ்சங்க ளன்னியமாய்த் தோற்றமாகவி னாகாயத்திற் பலவுந்தோன்றியடங் காதோவென்றும்பொய்யாய்த் தோற்றலி "னொன்றுமிலைகா„ வென்றுங் கூறினார்.

இத்திருவெண்பாவா லருள்வடிவமா யென்றைக் கிருப்பனென்ற மாணாக்கனுக் கவ்வருள்பூரணமென்றுமுன்சுட்டும்போதமற்ற லதனையிட நீயொரு முதலன்றென்று மறிவித் தவனதுதுயரை மாற்றியவாறு காண்க. (௨௧)

---

அவனி யோகப்பழக்க நீங்கற் பொருட்டுப் பழக்கவிலக்கணமெடுத்து மேற்கூறுகின்றார்.

பழக்கங்கொடியதுபார்பாறையினுங்கோழி.... *
கிழிக்கும்பொலியைக்கிளறும்-விழித்துங்......*

குருடர்க்கொளிபகையாய்க்கூசிக்கோல்போடா...*
ரருளைப்பகுக்குமான்மா....... ................ *

பழக்கங்கொடியதுயார்பாறையினுங்கோழி - கிழிக்கும்பொலியைகிளறும்---எ-து- யாவர்க்கும் பன்னாட் டொன்று தொட்டுவரும் பழக்க நீக்கக்கூடாமையின் மிகவுங் கொடியததனை நீ பார்த்தறிதி யஃதெங்ஙனமெனிற் பன்னாட் குப்பைசெய்தபழக்கத்தாற்கோழி கற்பாறையாயினுஞ் சீய்க்கு' நெற்பொலிமேல்விடிப்பினுஞ் சீய்க்கு மஃதன்றி.

விழித்துங்- குருடர்க்கொளிபகையாய்க் கூசிக்கோல் போடா-ரருளைப்பகுக்குமான்மா—எ-து- காசநோய் படர்ந்த குருடர் கண்மணியைத்தீர்ந்து விழித்த போதுங் கதிரொளியிருட்பகைபோலாய்க்கூசி முன்பிடித்தகோல் கைவிடா ரவர்போ லருளையடையாமுன னதுவிதுவென்று நானாவாய்ப் பகுத்த பழக்கத்தா லிப்போது பகுத்தற் கிடமின்றியெங்குந்தானாயிருந்தவவ்வருளை யடைந்து மான்மாவதனைப் பகுத்துநாடும்.—எ-று.

சீய்க்கக்கூடாதபாறையைச் சீய்த்தல்போற் பகுக்கக்கூடாதவருளைப் பகுத்தலானுங் கிளறவேண்டுவ தின்றிநின்று தின்றும்பொலியைக்கிளறுதல்போற் பகுக்கவேண்டுவ தின்றியிருந்தருளாநந்தத்தைத பருபவிபா தவ்வருளைப் பகுத்தலானுங் காசமிருந்தபோது கூசிப்பிடித்தகோலையக்காசநீங்கிக்கதிரொளிகண்டவிடத்தொளி முன்றோன்றிய விருளாய்க் கூசிக் கைவிடார்போலு முன்ன ராணவமறைப்பானது விதுவென்று பகுத்த போதத்தை யிப்போ தவ்வாணவநீங்கி யருளொளிகண்டு மிவ்வருளொளியை முன்னராணவ விருளொளிபோற் பாவித்து விடா ராகவினு மிங்ஙன முவமைகூறினார்.

தேகாதிபிரபஞ்சங்களையெல்லாந் திருவருளே வடிவாய்க் காண்பதேயன்றி யவற்றை நானாவாய்ப் பகுப்பினு மிவ்வருளைப்பகுப்பதென்பதுங் காண்க. (உஉ)

---

கட்டியநாண்விட்டாலுங்கந்தகலாக்கன்றுகளைத்.......*
தட்டிப்புறப்படுத்துந்தன்மைபோ- லொட்டொழித்து
நின்றாற்போனீசிவமாய்நில்லென்றுநீக்கமறத்...........*
தொன்றாக்கிலொன்றிரண்டாகும்........................*

கட்டியநாண்விட்டாலுங்கந்தகலாக்கன்றுகளைத்-தட்டிப்பு றப்படுத்துந்தன்மைபோல்—எ-று-தறியோடுங்கட்டிய தாம் பைத்தெறித்து விட்டபினு முற்கட்டியிருந்ததுபோற் கருதிய த்தறியைவிட்டுநீங்காத கன்றுகளைக்கரததாற்றட்டியோட்டிவெ ளியிற்புறப்படுத்து முறைமைபோல.

ஒட்டொழித்து-நின்றற்போனீசிவமாய்நில்லென்றுநீக்கம றத்-தொன்றாக்கிலொன்றிரண்டாகும்—எ-று-முற்பந்தமாயி ருந்துள்ள முப்பத்தாறு கருவிகளையும் விடுத்துத் தன்னையுந் தி ருவருளையு மறிவித்தவ்வருளோடுஞ் சேர்த்தி யவ்வருளசைவறநி ன்றற்போ னீயுன்போத மசைவற்றுச் சிவமயமாய்நில்லென்று கூறிச்சிவத்தைவிடத் தாமொரு முதலென்று கருதுந் துவிதபாவ னையைமாற்றி யச்சிவத்தோடொன்றாக்கினும் போதவொழிவா லதம்முடனொன்றான வான்மா போதவசைவா லிரண்டாகுமாக லினதனாற்போத மிருந்தவா றென்னை.—எ-று.

தும்பு செறித்து விடுவித்தபோதே தாயைச்சென்று கூடி ப்பாலுண்ணுங் கன்றுபோ லொட்டொழித்தபோதே தற்போ தமொழிந் தருள்வழிச்சென்று சிவத்தையடைந்து பேரின்பத் தைப்பெறும் பக்குவர்போ லாகாது "கட்டியநாணவிட்டாலுங் கந்தகலா., துநின்ற கன்றுகளைக் கரத்தாற்றட்டி வெளியிற்புறப் படுத்தித் தாயோடுஞ்சேர்த்தி முலையைப்பிடித்துண்ண விட்டபி னுமுண்ணாது மீளுமாறுபோ லொட்டொழித்தனுமன்றி யரு ளோடுஞ்சேர்த்தித் துவிதபாவனையை மாற்றிச் சிவத்தோடொன் றாக்கினு மச்சிவத்தோ டிரண்டற்றிருந் தானந்தப் பேற்றை ய டையாது தற்போதவசைவா லிரண்டாகலா லிவர்க்கக்கன்றுக ளை யுவமை கூறினார். (௨௩)



குரங்கைநினையாதிருமென்றுகூறக்.... ..........*
திரும்பியதுவேதியானம் வருங்கதைபோ....*
னீசிவமாய்நில்லென்றுநீங்கியதுவாய்நினைந்து....*
மாய்வையதுவன்றேமலம்.........................*

குரங்கைநினையாதிருமென்றுகூறத்-திரும்பியதுவேதியானம்- வருங்கதைபோல்—எ-று- ஓர்புருடனோர்பேதைக்குக் குரங்கி னை நினையா திருத்தியென்று கூற வவனங்ஙனங்கூறியமாத்திரத் தின் மீண்டக்குரங்குத்தியானமே யிவனுக்குமனத்திற் குடியா யிருந்ததென் றுலகத்தில் வழங்குங்கதைபோல்.

நீசிவமாய்நில்லென்றுனிங்கியதுவாய்நினைந்து-மாய்வைய துவன்றேமலம்—எ-து-நீயொன்றையுமெதிரிடாது சிவமயமாய் நில்லென்று கூறினலிங்ஙன மெதிரிடும் போதமொழிவதே யச்சிவமயமாய் நிற்பதென்றறியாது போதத்தாற்சிவத்தை யெதிரிட்டுப்பார்த்தியான் சிவமய மாயினே னாயினேனென்று கருதிவருந்துவா யிங்ஙனங் கருதி வருந்தப்பண்ணுவதன்றே மலமாவது—எ-று.

கூரியபுத்தி யுடையோனுக்கு நீருரங்கைநினையாதிருவென்று கூறினலக்கணமே யந்நினைவை யொழித்திருப்ப னதுபோலத் தீவிரதர பக்குவனுக்கு நீசிவமாய் நில்லென்றுலக்கணமேசிவமென்றுந் தானென்றுங் கருதுந் துவிதபோதமொழிந்து சிவமாய்நிற்பனென் றதற்கெதிர் மறையும் வருவித்துக்காண்க(உ௯

—●●●◉●●●—

மணிப்பாம்பிருளின்மறைந்திருக்கத்தேடுங்.....*
கணக்காந்தற்போதத்தைக்காட்டி-புணர்த்துகினு
நீரிற்கிணறுநிழலுயுத்தரும்போலா...............*
மாரித்தைநீகக்கியிருப்பார்....................*

மணிப்பாம்பிருளின்மறைந்திருக்கத்தேடுங்-கணக்காந்தற்போதத்தைக்காட்டி-புணர்த்துகினும்—எ-து-சென்னியின்மீதுமணியையுடைய பாம்புதானிருளிடத்துமறைந்திருப்ப விருளைத்தேடு முறைமைபோலாகும்நீயுன்போதத்தைமுன்னிட்டருளிடத்து மறைந்திருப்ப வருளைத்தேடுமுறைமை யென்றுபோதஞ் சிவிப்பதைக்காட்டி யருளையு முன்னை விட்டு நீங்காத பரிபூரணமென் றறிவிப்பினுந் தெளிந்துகொள்ளாது.

நீரிற்கிணறுநிழலுயுத்தரும்போலா-மாரித்தைநீக்கியிருப்பார்—எ-து-பிரளயமாய்க்கோத்துநின்ற சுத்தசலத்திற் கிணறுதொட்டு நீர்தேடு மொருவனைப்போலுந் தனதுநிழலை யெதிராய்க் கருதியதனோடு யுத்தஞ் செய்யு மொருவனைப் போலும்பின்னரு முன்போதஞ் சீவியாநிற்கு மாகலி னிப்போதத்தை நீக்கிச்சிவமா யிருப்பாரியாவர்.—எ-று.

சென்னியின்மீது மணிச்சுடரை யுடையபாம் பிருளைத்தேடுந்தோறு மவ்விருணீங்குவதன்றி நில்லாததுபோலத் தற்போதத்தை முன்னிட்டருளைத்தேடுந் தோறு மிவ்வருணீங்குவதன்றிநில்லாதென்பதும் பாம்பு சென்னிமணியைப் புளைவழிக்கொண

ர்ந்து வாய்க்குளடக்கி னிருட்டடவேண்டுவதின் றதுபோன் மு ன்னிட்டபோதத்தைப் பின்னிட்டாலருட்டடவேண்டுவதின்றெ ன்பது மவ்விருணிலைறந்தாற்போ லிவ்வரு ணிறைந்திருப்ப தெ ன்பதுநீர்வெள்ளமா யிருக்கவு மந்நீரிற் கிணறு தொட்டுநீர் சம் பாதிக்கத் தொடங்கினேனைப்போ லருளெங்கும் பிறிவற்றபூரண மாயிருக்கவு மவ்வருளூட்டேடி யருளைச்சம்பாதிகக்த் தொடங்கி ஞெனென்பதுந் தன்னேகவவைசவா னிழலவைசவதென் றறியாதத ற்கோரவைசவு வேறுளதென்று கருதி யதனோடு யுத்தஞ் செய்வா னைப்போற் றன்போதவவைசவாற் கருவிகளவைசவதென் றறியாதத ற்கோரவைசவு வேறுளதென்று கருதி யவற்றை யடககததொடங் கினேனென்பது மிவ்வுவமைக் குறிப்புகளாற்காண்க.

இங்ஙனமெழும் போத மொழிப்பா ரியாவராகலி "ஞரித் தைநீக்கியிருப்பா,, ரென்றார்.

மணிப்பாம்பிருளையென்பது-தற்போதத்தைமுன்னிட் ட ருளை நாடுதற் குவமை.

"நீரிற்கிண,, றென்ப தருளை யேகதேசமாக நாடுதற்குவமை.

"நிழலுயுத்த,, மென்பது- தன்னையருளுக் கூறாய்க் கொடுத் து நிற்கவே கருவிகளொழியுமென் றறியாது தற்போதத்தா லவ ற்றை யடக்கத் தொடங்குதற் குவமையெனக்கொள்க.

பழக்கங் கொடியதுபா ரென்னுந் திருவெண்பாமுதலிவை நான்கு திருவெண்பாவானும் அளவில் காலந்தற்போதத்தாலத் துவித நாட்டத்திற்பழகிவருதலின் நின்போதமொழித்துச் சிவ த்தோடிரண்டற் றிருத்தற் குபாய மியாதுகூறினும் நீ அங்ஙன மிருத்தலும் பழக்கமிகுதியா லான்மாக்களத்-துவிதநாட்டமொ ழித்து நிற்றலு மிகவுமரிதென் றறிவித்தவாறு காண்க. (உ௫)



ஆயினிப்பழக்க நீக்குமா றெங்ஙனமெனின் மேற்கூறுகின்றார்.

உட்புறம்பாம்பூசனையுமியோகசமாதிகளுஞ்.........*
சுட்டறிவுகெட்டவர்போற்றூங்குவதும்-விட்டுப்....*
பகல்விளக்குமுச்சிப்படிகமும்போற்பாச..............*
மகலநிற்பார்க்கார்சரியொப்பார்......................*

உட்புறம்பாம்பூசனையுமியோகசமாதிகளுஞ்- சுட்டறிவுகெ ட்டவர்போற்றூங்குவதும்-விட்டுப்—எ-து - அந்தரியாகம்-பகி

ரியாகமாட்செய்யும் பூசைகளு மாறுதார பாவனு யோக சமாதிகூடுதலு மிதுவகுமென்று கூடியதியுந் தற்போதங் கெட்டுப் பரமாநந்தநித்திரை பண்ணு மெய்ஞ் ஞானிகளைப்போன்மனத்தாற் பிராணவாயுவை யுணமறித்துப் பிரமரந்திரத்தி லதனுண் மறைந்து தூங்குவதுமாகிய விவற்றை யெல்லாம் பொய்யென் றுவிட்டுநீங்கி.

பகல்விளக்குமுச்சிப்படிகமும்போற்பாச - மகலநிற்பார்க் கார்சரியொப்பார் — எ-து- பகற்காலத்தேற்றியதீபம்போலுமுச்சிக்காலத்துப் படிகம்போலுங்கருவிகளை முப்பத்தாறுமகன்று போகத் திருவருளி லசைவற நிற்பார்க்கிணை யொப்பாரியாவர். — எ-று.

இருளிற்றோன்றியதுபோலன்றிச் சூரியப் பிரகாசத்தான் முதல்கெடா தொளிகெட்ட பகல்விளக்குபோன் முன்ன ராணவந்தகாரத்திற் றோன்றியதுபோலன்றி யருட் பிரகாசத்தான் முதல்கெடாது போதங்கெட்டுநிற்றலிற் "பகல்விளக்குப்போ" லென்றும் பொழுதேறுங்காலுஞ் சாயங் காலத்தன்றி யுச்சிக்காலத்திற் பஞ்சவன்னங்களையுங் கவராத படிகம்போலச் சகலகேவலத்தன்றிச் சுத்தமாகிய வருணோ கருவிக ளொன்றோடுந் தாக்கற்றுநிற்றலி "னுச்சிப்படிகம்போ" லொன்றும் "பாசமகலநிற்பா" ரென்றுங் கூறினார்.

பகல்விளக்கென்றது தற்போதஞ் சீவியாதருளி னிற்றற்குவமையு "முச்சிப்படிகம்போ" லென்றது கருவிகளொன்றோடுந் தாக்கற்று நிற்றற்கு வமையுமாகக்கொள்க. (௨௯)

இத்திருவெண்பாவானீ யிந்நாட்பழகிய யோகப்பழக்கத்தை விட்டு ஞானயோகத்திற் பழகுதியெனிற் சிவத்தைப் பெறலாமென் றறிவித்தவாறுகாண்க.

---

ஆயி னொன்றையுங் கருதாது சும்மாநிற்பிற் சிவத்தையடைவதெங்ஙனமெனின் மேற்கூறுகின்றார்.

அருட்கேவலத்தின்றெழுப்பியெதிரிட்ட...... ....... ....*
மருட்கேவலசகலமாற்றித் - திரிச்சுடர்போற்... ...*
றன்னறிவுதின்னிக்குத்தானுணவாய்ப்போவதல்லா...... *
லுன்னுதலேயொட்டுதல்காணும்.... ..... ..... .....*.

இருட்கேவலத்தின் றெழுப்பியெதிரிட்ட - மருட்கேவலசகலமாற்றி —எ-து- கருவிகளெழுப்பத்தாறுபிறந் தான்மபோதமுமிறந்தந்த காரமாயிருந்தகேவலத்தி னின்று மிப்போது தனதருட்சத்தியாற் கருவிகளைக்கூட்டப் பண்ணித் தற்போதத்தைதெழுப்பிச் சருதிகுருவாகிய படர்க்கை முன்னிலைபாய் நின்று ஞானசமாதிகூடப்பண்ணியத்தற்போதத்திற் கெதிரிட்ட மருளாகிய கேவலசகலங்களைப் பூரணமாகிய தன்மையாய் நின்றுமாற்றி.

திரிச்சுடர்போற் - றன்னறிவுநின்னிக்குத் தானுணவாய்ப் போவதல்லா-துன்னுதலேபோட்டுதல்காணும் — எ- து- விளக்குத்திரிமேலேறிய சுடர் சிறுகச்சிறுகத் தின்றுவந்து முடிவிலத் திரிமுழுதையும் விழுங்குதல் போலத் தன்னை யருளா லறிவித்தபோது தானிவ்வருள்வழி வரவாச் சிறுகச்சிறுகத்தின்றுமுடிவிற் றனதுபோதமெல்லாம் விழுங்கித் தானுயிருக்குஞ் சிவத்திற்குத்தான்புசிப்பாய்ப்போவதன்றித் தான்வேறொரு முதலாய்நின்றசிவத்தை யெதிரிட்டு நாடுதலே யதனை நீக்குதல். —எ-று.

கருவிகளும் போதமுமிறந்து கேவலவிருளிற்கிடந்தநீ கிஞ்சிக்கியனாகலி னவ்விருளை நீக்கிக் கருவிகளைக் கூடமாட்டாய்கருவிகள் சடமாகலி னுன்னையவைவந்து கூடி யெழுப்பமாட்டாவாகலிற் சுதந்திரமாயுள்ள வருட்சத்தி கருவிகளைக்கூட்டியுன்னையெழுப்ப விக்கருவிகளோடுங்கூடி நீ சுகிர்தனுவை இங்ஙனமுனக்குப் பெத்தத்திசையிற் சுதந்திரமின்மைபோன் முத்தித்திசையினு மின்றாகலி னியுன்போதத்தா லொன்றையு மெதிரிடாதசைவற நிற்றியெனி னச்சிவந்தானே யுன்னை விழுங்கிக்கொண்டு நிற்குமென் றறிவிக்கவேண்டி "யிருட்கேவலத் தின்றெழுப்பி" யென்றுந் "தன்னறிவுதின்னி" யென்றுங் கூறினர்.

இன்றெழுப்பி யென்றதனு லனுதியிலெழுப்பியது மிவ்வாறெனக்கொள்க.

இத்திருவெண்பாவாற் சுட்டற்றிருந்தா லன்றிச் சிவத்தைப்பெறக்கூடாதென்பது மங்ஙனநிற்பிற் சிவந்தானே விழுங்கிக் கொள்ளுமென்பது மறிவித்தவாறுகாண்க. (௨௭)

ஆயினீரிங்ஙனங் கூறியவாற்றான் வேதாந்தி நிலையே நன்றென்றமாணாக்கனை நோக்கி மேற்கூறுகின்றார்.

அறிந்ததெல்லாம்பொய்யென்றவத்துவிதியார்க்கும்*
... றல்விடாது - பிறந்திறப்பை....*

யானுன தொழிவுமாநந்தமாமுதிப்பும் .....................*
போனாற்காணுன்பிறப்பும்போம் .......................*

அறிந்ததெல்லாம்பொய்யென்றவத்துவிதியார்க்கும் - வெ
றும்பாழினின்றலவிடாது-பிறந்திறப்பை-யானால்—எ-து-தம்
மாலெதிரிட் டறிந்த தெல்லாங் கண்ணினாலறிந்த காட்சியெல்லா
ங்கண்ணாகாதவாறுபோ லியாமல்லோ மிவை யித்தையாரூபமெ
ன்றவற்றை நீக்கிநின்ற வேதாந்தியாருக்கு மங்ஙன மெதிரீடாய்த்
தோன்றுவன யாவுமின்றிச் சர்வசூனியமாயிருந்த பிரமம் நா
மென் நிச்சூனியத்திற் றற்போத மொன்றி நிற்ற லவர்க்கும் விடா
தாகலி ஞானியவர்போ லிற்றியாயினுஞ் செனனமரணப்படுவ
ரிங்ஙனநிற்பினு முற்பத்திநாசமுளவென்றீ ரினியுற்பத்திநாசமி
ன்றாய முத்தியாதெனின்.

உனதொழிவுமாநந்தமாமுதிப்பும்-போனாற்காணுன்பிறப்
பும்போம்—எ-து- உனது போத வொழிவாகிய பரையோகமு
மிப்பரையோகத்தின் மேலிடு மானந்தோதயமும் போனா லப்
போதுன் பிறப்பும்போங்காண்.—எ-று.

பரையோகமு மாநந்தப்பேறு மான்மாவிற் கநுபவமாய்த்
தோற்றலானு மவ்விடங்களி லான்மாவிற்குச் சிவத்தோ டத்து
விதமின்றாகலானும் "போனாற்காணுன்பிறப்பும்போ"மென்று
ரைபோனவிடஞ் சுகாதீதம்.

இத்திருவெண்பாவால் வேதாந்திய ரிங்ஙனநிற்றலி னவர்க்
கும் பிறப்புநீங்கா தென்பதும் பிறப்பிறப்பு நீங்குமிட மிவ்வி
டமென்பது மறிவித்தவாறு காண்க. (உ௮)

அறிவுக்கறிவாயகண்டமாய்நின்ற.........................*
நிறைவைக்குறைய நினைந்து- மறவையுமாய்த் .....*
தாமேசிவத்தைப்படைத்தழிப்பார்தற்றோடம்............*
போமாறிலைபிறப்பேன்போம்... ..................*

அறிவுக்கறிவாயகண்டமாய்நின்ற- நிறைவைக்குறையநினைந்
து-மறவையுமாய்—எ - து- உயிர்க் குயிராய் நின்றறிவிக்கு மறி
வாய்கண்டித மெல்லாங் கடந்ததாய்த் திரிவின்றியோ ரியல்பிற்
றாயெக்காலமும் விளங்காநின்ற பரிபூரணசிவத்தை யேகதேசவ
டிவாய்த் தற்போதத்தாற் றியானித் தங்ஙனந் தியானித்த வடி
வைமறந்தும்போந் தன்மையுடையருமாகி,

தாமேசிவத்தைப்படைத்தழிப்பார்தற்றோடம்-போமாறி லைபிறப்பேன்போம்—எ-று- தம்மைப் படைத்தழிக்குஞ் சிவத்தைத்தாமே படைத் தழிப்பாராகலி னிவரிங்ஙனஞ்செய்தலான் வருந்தமதுபாவமேநீங்குமாறிலையெனிற் பிறப்பென்னை நீங்கும் எ-று.

ஜீயானித்தபோது வடிவுதோன்றியும் விடுத்தபோதவ்வடிவுநீங்கியும் வருதலிற் "படைத்தழிப்பா,, ரென்றுஞ் சிவத்தைப்படைத்தழிப்பது தோடமாகலிற் "றோட,, மென்றுங்கூறினர்

இத்திருவெண்பாவாலியோகிபினது கருத்தையெடுத்துக் காட்டி யிங்ஙனம் ஞானபக்குவன் செய்வதுபாவமென் றறிவித்தவாறு காண்க. (௨௯)

---

மறப்புநினைப்புமயக்கும்விகற்பும்.......... .....*
வெறுப்பும்விருப்பும்விடாம-விறப்பேனைப். ..*
பாலுவும்வெதியும்போற்பார்த்தும்பரிசித்தும்....*
ஞானபற்தன்றாக்கினான்..... ..... ....., .....*

மறப்புநினைப்புமயக்கும்விகற்பும்- வெறுப்பும்விருப்பும்விடாம விறப்பேனை—எ - று - மறப்பு நினைப்புயாயுள்ள கேவல மூஞ் சகலமுமாறிமாறி வரலாற் றேகாதி பிரபஞ்சங்கண்மேல் விருப்பும் வெறுப்புஞ் சென்னங்கடோறும் விட்டு நீங்காமற் றுன்பத்தை யநுபவிக்கச்கிதைக்கு மதனை யாணவத்தா னின்பமெனக்கருதி யிறுயாந்து கொண்டிருப்பேனை.

பாலுவும்வெதியும்போற்பார்த்தும்பரிசித்தும்-ஞானபந்தன்றாக்கினான்—எ- று - புதவிருளை நீகற்பபாலுவையுந்தன்னைச்சேர்ந்தசம்பைப்பொன்றாக்கும்பரிசனவேதியையும்போன்று தமது ஞானப்பிரகாச நோக்கத்தாற் பார்த்துங் கரசரணங்களாற் பரிசித்து மூம்மலங்களையு நீக்கித் திருவருளாலெடுத்துத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் தமது திருவடியிலொன்றாக்கினர்.—எ-று.

தானல்லாத தேகத்தை யானென்றுந் தனதல்லாத போகத்தை யெனதென்றுங் கருதப்பண்ணுவது மயக்கமத்தேகபோகங்களில் வெறுப்பும் விருப்பும் ரச்செய்கரு விகற்பமாகலி னிவற்றைத் தொடர்ந்து நின்றிருவினைகளு மிவ்விருவினைகளாற்

பிறப்பிறப்பும்விடாது வரலான் மயக்கும் விகற்பும் வெறுப்பும்
ப்பும் விடாமலென் றிம்முறைவைத்துக் கூறினார்.

ஞானதீக்கைபண்ணும்போது கிருபாநோக்கம்வைத்துத் திருவடிசூட்டவேண்டுமாகலிற் “பார்த்தும்பரிசித்து,,மென்றார்

அங்ஙனம் பண்ணுந்தீக்கையிற் பாவனையு மிருத்தலி னது கூறாராயினு மப்பாவனையாற் றமதோடைக்கம் பண்ணிக்கோடலிற் றுணுக்கிறானென்றார்.

இத்திருவெண்பாவாற் றமதாசாரியார் தீக்கையினாற் றம்மைத்திருவடிகண்ணைக்கியமாக்கிய முறைமை யறிவித்து நீயுஞானதீக்கைபண்ணிக்கொள்ளுதியென் றறிவித்தவாறு காண்க. (௯௰)

மூன்றாவது- இயோகக்கழற்றி

முற்றிற்று.

ஆக திருவெண்பா-௱௨௰௧.

திருச்சிற்றம்பலம்.







திருச்சிற்றம்பலம்.

## நான்காவது.

# கிரியைக்கழற்றி.

த்துவத்தையெல்லாஞ்சடமென்றுதாக்கற்றுச்.......*
செத்தசத்தின்கண்போற்றிரியாது-வைத்தெடுத்தும்*
பூரணமேயென்றழைத்துந்தேடிப்புரண்டழுதுங். ..... *
கோரணிகாட்டும்பேய்க்குவால்.........................*

தத்துவத்தையெல்லாஞ்சடமென்றுதாக்கற்றுச்-செத்தசத்தின்கண்போற்றிரியாது—எ-து - தத்துவங்களை யெல்லா மிது விதுவென்று தன்னாலறியப்படலானுந் தன்னை யவைக ளறியாமையானு மவற்றைச் சடமென் றறிந்தவைக ளொன்றோடுந்தாக்கற்றுச் செத்தாட்டுக்கண்போற் சுட டறிவுகெட்டுச் சும்மாய்த்திரியாமல்.

வைத்தெடுத்தும் - பூரணமேயென்றழைத்துந்தேடிப்புரண்டழுதுங்-கோரணிகாட்டும்பேய்க்குவால— எ-து- தற்போதராசதஇருந்த பூரணசிவத்தை யப்போதத்தா லோர் வடிவிலாவாகனம்பண்ணி யதனைமீட்டுந் தியானம்பண்ணி யிங்ஙனம் பூசனைபுரிந்து மவ்வடிவைப் பரிபூரண சொரூபமேயென் றேவிட்டழைத்து மச்சிவ மெங்கணுமிலை மகாதலங்களி லுண்டென்றுகருதி யத்தலங்களிற் றேடிச்சென்று நிலத்திலவீழ்ந்து புரண்டழுது மிங்ஙனங் கிரியையாளரொன்றும் பேய்க்கூட்டங்கள்கோரணிக்கூத்தாடிக்காட்டும்.—எ-று.

"செத்தசத்தின்கண்,, உயிர் அசத்தின்கண்போ லிருப்பினு மிதனது சுட்டறிவதற் கின்மைபோன் மெய்ஞ்ஞானிகள் பிரபஞ்சிகள்போ லிருப்பினு மிவரது சுட்டறிவவர்கின்றியிருப்ப ரவர்போ லிருமிராதென்னை செய்கின்றீரென் றவரது நடையை யிவர்க்கறிவிக்கவேண்டி யந்நடையின்றிய விவரைப் பார்த்துச் "செத்தசத்தின் கண்போற்றிரியாது,, என்றார்.

சுட்டறிவு கெடுத்துநிற்ப தருள் சுட்டச்செய்வது மருளாக லிவரைப் பேய்க்கூட்டமென்று மிவர் தொழிலைக் கோரணிக்

கூத்தென்று மிவர்க் கான்மலாப மின்மையாற் பிறர்க்குக் காட்டுமென்றுங் கூறினர்.

இத்திருவெண்பாவாற் கிரியை யாளரைப்பார்த்து ஞானிக ளுடையை யெடுத்துக்காட்டி யிவரைப்போனீருஞ்செய்யாதென்செய்கின்றீரென் றிகழ்ந்து கூறியவாறுகாண்க. (௧)

—•••●••—

கிரியைக்கிளைத்துவந்துகேட்டவர்க்குச்சும்மா...*
திரியச்சுகம்விளைத்தசீமான்-குருவன்றிச்......*
சற்றேபதைப்பத்தரினுஞ்சகம்படைக்கக்..........*
கற்றானுங்காலனுமாங்கண்...........................*

கிரியைக்கிளைத்துவந்துகேட்டவர்க்குச்சும்மா- திரியச்சுகம்விளைத்தசீமான்-குருவன்றி — எ-து- மனத்தாற் பாவிக்குந் தொழிலும் வாக்காற் றோத்திரம் பண்ணுந் தொழிலுங் காயத்தாலருச்சனையாகச் செய்யுந்தொழிலுமாகியவிக்கிரியைகளான் மிகவும் வருத்தமெலிந் திவற்றை வெறுத்து ஞானத்தைவிரும்பிவந்தடைந்து கேட்ட வதிபக்குவர்க் கிம்மனவாக்குக் காயங்க ளசைதற் கேதுவாய தற்போதவசைவை யொழித் தருள் வடிவாக்கி யெனக்கின்னது வேண்டுமென்ப தொன்றுமின்றிச் சும்மா சஞ்சரிக்கவைத்துப் பேரின்பத்தையுண்டாக்கிய விவ்வானந்தச் செல்வவனே ஞானகுருவன்றி.

சற்றேபதைப்பத்தரினுஞ்சகம்படைக்கக் - கற்றானுங்காலனுமாங்கண் — எ-து- அப்பக்குவர்க்கோரணுவளவேனுந்தற்போதக் கேதுவாய வுபதேசங்களைக் கொடுப்பினு மக்குரு சகத்தைப் படைத்தற்குக் கற்றுள்ள பிரமனு மிவனாற் படைத்துள்ள சகத்திலுண்டாகிய வுடல்களை யழிக்குங் காலனு மாவனன்றி ஞானகுருவலனென்றறிக.— எ-று.

போதம் பதைத்தற் கேதுவாகிய வுபதேசங்களைக் கூறலிற் சகலகேவலங்க ணீங்கா விவை நீங்காமையாற் பிறப்பிறப் புண்டாமாகலிற் “கற்றானுங்காலனுமாங்கா,, ணென்றார். சீவன்முத்தனாய் நிலத்திற் சஞ்சரித்தலில் திரியவென்றார்.

இத்திருவெண்பாவான் ஞானபக்குவனுக்கு முன்னிருந்த சரிதாதி வாதனைகளை யெல்லாம் போக்கித் தற்போதம் பதையாது மவுனமாயிருக்கும்படி போதிப்பவனே ஞானகுருவென்றும் போதஞ்சிறிதேனும் பதைப்பக்கூறுமவன்குருவலனென்றுமறிவித்தவாறு காண்க. (௨)

அக்கினிதேவற்கசீர்த்தியென்றுசுக்கரைத்து.......*
வைக்கோலான்மூடிமலையடுப்பிற் - றூக்கியாய்...*
நீரைக்கழுவிநிழலைப்புதைத்தளப்பா...................*
ராரைப்போல்வாரொன்னலாம்.........................*

அக்கினிதேவற்கசீர்த்தியென்றுசுக்கரைத்து- வைக்கோலான்மூடிமலையடுப்பிற்-றூக்கியாய்—எ-று-அக்கினிதேவனுக் கசீரணம்பிறந்ததென்று கருதியது போதற்குச் சுக்கரைத்துக் கொடுத்துச் சீதளம் பிறந்ததென்றவனை வைக்கோலான்மூடி யவனுக்கு முன்னரோ யிங்ஙனஞ் செய்யாதிருந்தோ மென்று மலைவந்துதம்மே லடுத்ததுபோலுந் துக்கத்தையுடையவராகி.

நீரைக்கழுவிநிழலைப்புதைத்தளப்பா-ராரைப்போல்வாரொன்னலாம்—எ-று- நீரை நீராற் கழுவித் தமது நிழலை மண்ணுட் புதைத் தந்நிழலைத் தம்மடியா லளந்திவ்வளவென்றளவிடுவாரை யாவரைப்போல்வாரென்று கூறலாம்.—எ-று.

எவரெவர் புசித்த புசிப்புக்களையெல்லா மவரவர் வயிற்றூடிருந்து சீரணிக்கப்பண்ணு மக்கினிதேவனுக் கசீரணம்பிறந்ததென் றுபசரிக்குமுறைமைபோ லுயிர்கட்கெல்லா முயிராயிருந்தூட்டி யுறக்கியுபசரிக்குஞ் சச்சிதாநந்த ரூபமாயுள்ளசிவத்திற்கோர் குறையுள்ளதுபோற்கருதி அட்டவிதார்ச்சனை சோடசவுபசாரங்களைச் செய்தலா "னக்கினிதேவற் கசீர்த்தியென்றுசுக் கரைத்து வைக்கோலான்மூடி" யென்றும்.

இன்றைக்கிந்நாழிகை யளவும் பூசைநைவேத்திய வுபசாரங்களைச் செய்திலமென்று மனத்திற் றுன்புறலாற் றூக்கியாயென்று மசுத்தத்தை யெல்லாஞ் சுத்தமாக்கு நீரைக் கழுவிச்சுத்தமாக்கத் தொடங்குவான்போன்று தன்னைச் சேர்ந்த வுயிர்களினது மும்மலங்களையுந் துடைத்து நின்மலமாக்குஞ்சிவத்தை நீராட்டி நின்மலமாக்கத் தொடங்கினா ராகலி "னீரைக்கழுவி" யென்றும் புதைப்பதற் ககப்படா நிழலைப் புதைக்கத்தொடங்கினாற்போலொன்றிற்கு மகப்படாதபொருளைத் தற்போதத்தா லகப்பட்டதுபோற் பாவித் தாவாகனம் பண்ணலி "னிழலைப்புதைத்" தென்றுந் தனது நிழலை யளந்து செல்லுந் தோறு மந்நிழல்கடந்து கடந்துசேறல்போ லிங்ஙனமிருக்கு மென்று சிவத்தைத் தியானிக்குந்தோறு மத்தியானங் கடக்கப்பா லப்பாற்சேறலி னிழலளப்பாரென்றுங் கூறினார்.

சிவத்தின தன்மையைக் கேட்டிருந்து மிங்ஙனஞ் செய்த வா "ஞானைப்போல்வாரொன்னலா,, மென்றார்.

இத்திருவெண்பாவான் மலரகிதமா யாநந்த வடிவாயிரு ந்தசிவத்திற்கு மாயாகாரியமாகிய நீராதி யுபசாரங்களாற் சுத்த முஞ்சுகமுமுண்டாகாதென்பது மதனைப் போதத்தா லளவிட்ட றியக் கூடாதென்பது மறிவித்தவாறுகாண்க. (௩)

நீர்க்கும்வழிக்குந் துயரில்லை நீந்திநடந்.........*
தார்க்குத் துயரொன்றறிவறியா - மூர்க்கருணை..*
யாற்றுக்குவாய்கட்டியம்பரத்துக்கேணியிட்டுக்....*
காற்றுக்குக்கால்பிடித்தல்காண் .....................*

நீர்க்கும்வழிக்குந்துயரில்லை நீந்திநடந்- தார்க்குத்துயரொன்ற றிவறியா-மூர்க்கருணா—எ-து- வெள்ளமாய் நிறைந்துள்ள நீரி ற்கு மோரூர்க்குச்செல்லும் வழிக்குந் துன்பமேது மிலை லவ் வெள்ளத்தை நீந்திச் செல்வோர்க்கு மவ்வழிநடந்து செல்வோ ர்க்குந் துன்பமென் றறிவதுபோலப் பூரணமாய் மவுனமா யா நந்தமாயிருந்த சிவத்திற்கோர் துன்பமுமின் றதற்கோர்துன்ப முளதுபோற்கருதிப் பூசை நைமித்திய வுபசாரங்களைச் செய் யத்தொடங்கு மெமக்கே துன்பமென்றறிந் திங்ஙனஞ்செய்யும் பூசனையாதிகளைவிட்டு நீங்கி யச்சிவத்தை யறிவித்தற் கேதுவாய ஞானசாரியனையடைந்து திருவருண்ஞானத்தையறியாதகிரியா குருவாகிய தற்சனர் பிறர்க்குபதேசம்போற் கூறுமுரை.

யாற்றுக்குவாய்கட்டியம்பரத்துக்கேணியிட்டுக்- காற்றுக்குக் கால்பிடித்தல்காண்—எ-து- பிரளயமாய்ச் செல்லு மாற்றுக்கு வாய்கட்டி யதனையடக்கச் செல்லுதல்போலு மாகாயத்தின்கண் ணேணிநாட்டி யிதன்மேலேறி யதனைப்பிடிக்கச்செல்லுதல்போ லுங் காற்றுக்குக் கால்பிடித்தன் முதலிய வுபசாரங்களைச்செய் யச்சொல்லுதல்போலுமாங்காண்.—எ-று

மலைக்கணின்று கடலளவு மூடுருவிக் கோத்து நின்ற வாற் றுக்கு வாய்கட்டி யடக்கச் சொன்னதுபோற் பிருதிவிமுதன்மு ப்பத்தாறு கருவிகளையு மூடுருவிப் பேராநந்தக்கடலாய் நிறை ந்திருந்த சிவத்தை யோர் வடிவத்தாவாகனம் பண்ணச் சொல் வதனை "லாற்றுக்குவாய்கட்டி,, யென்றும்.

ஏணிநிற்றற்கு மதன்மேலேறிச் செல் வோனுக்கு மிடங்

கொடுத்துநின்ற வாகாயத்தையவ்வேணிமேலேறிப்பிடிக்கச்சொன்னதும்போ லந்திரியாகபூசைக்குத்தான்சொல்லுந் தானத்திற்கு மத்தானத்திருந்து பூசனைசெய்வோனுக்கு முடபுறம்பாய் நிறைந்துள்ள சிவதத்தை இங்ஙன மிருப்பதென்றறியாதப்பூசனையா லறியென்று சொல்வதனை "லம்பரத்துக்கேணியிட்" டென்று மருவமாயிருந்த காற்றிற்குக்காலையின்றஃதிங்ஙனமிருப்பவு மதற்குக்கால்பிடித்தன் முதலிய வுபசாரங்களைச் செய்யச் சொல்வதுபோலுருவமருவ முருவருவங்களையெல்லாங் கடந்து நின்றசிவத்திற்கு வடிவேயில்லை. இஃதிங்ஙன மிருப்பவு மிதற்குச் சோடசாதி வுபசாரங்களைச்செய்யச் சொல்வதனாற் "காற்றிற்குக்கால்பிடித்தல்" என்றுங் கூறினார். உபசாரஞ் செய்தலை இருவகைப்பூசைக்கும் பொதுவாகக் கொள்க.

இத்திருவெண்பாவாற் கிரியாகுரு வுபதேசத்தாலான்மலாபமின்றென் றறிவித்தவாறு காண்க (௪)

ஆயின்ஞானிக்குக் கிரியைசெய்ய வேண்டாவோ வெனின் மேற்கூறுகின்றார்.

ஆகாயம்போவார்க்குமாவிகையோவாழ்கடலோ....*
மீகாமன்போற்றிரியவேண்டுமோ-யோகிக்குங்....*
கன்மமோபூரணன்காண்காலமுமாகாயமும்போ... ... *
யென்னதொழிலையியற்றும்... ... ... ... ... ...*

ஆகாயம்போவார்க்குமாவிகையோவாழ்கடலோ-மீகாமன் போற்றிரியவேண்டுமோ—எ-று- ஆகாயகமனம் பண்ணுவோர்க்கோர் பற்றுக்கோடோ வவ்வாகாய மாழ்கடலோ விவ்வாழ்கடலிற் செல்லு மீகாமனைப்போற் பற்றுக்கோடு பற்றி யோர்துறை சார்தற்பொருட்டுத் திசைநாடி யிங்ஙனஞ் சுழல வவர்க்கும்வேண்டுமோ வதுபோல.

யோகிக்குங்- கன்மமோபூரணன்காண் காலமுமாகாயமும் போ- யென்னதொழிலையியற்றும்—எ-று - சிவயோகி யானந்த பூரணனாகலிற் றேகாந்தனா யிருந்துள்ள கிரியை யாளனைப்போலவனுக்குங் கிரியைசெய்யவேண்டுமோ வஃதன்றிக்காலமுமாகாயமுந் தாமிருந்தபடி யிருப்பத் தம்மிடத்திற்பிறபொருள்கடொழிற்படுவனவன்றித் தாம்போய்ச்சென் றியாது தொழிலைச்செய்யுமதுபோற் பூரணனாகிய வச்சிவயோகி சந்நிதானத்திற் கருவிக

டொழிற்படுவனவன்றித் தாமொரு கருவிகளோடுங் கூடித்தொழி
ற்செய்யான்——எ-று.

ஆகாயகமனம் பண்ணுவோன் றனிணைத்த தானத்தின் வா
யுவினும் சென்றிருத்தல்போலச் சிவயோகி தான்கருதிய விட்டை
யருளா லடைந்திருத்தலின் "ஆகாயம் போவார்க்கு மாவிலங்க
யோ,, வென்றும் ஆழ்கடலிற்செலு மீகாமனுக்குக கட்டலாகி
யபற்றுககோடுபற்றி யோர்துறைககண் சார்தற் பொருட்டுத் தி
சைநாடிச செல்லவேண்டு மதுபோலக கிரியாவானுக் கோர்வடி
வைச சிவமாய்ப் பாவித்தோர் பதவியை யடைதற்பொருட்டதற்
கு விதிமார்க்கமா யருச்சனை யாதிகளைச் செய்யவேண்டுவதுபோ
லவாக்குச்செய்யவேண்டுவ தின்றாகலின் "மீகாமன்போற்றிரிய
வேண்டுமோ,, வென்றுங்கூறினார்.

சிவயோகி தானறிவாயு மானந்தஞ் சிவமாயங் கண் டறிவா
கியதா னுனந்தமாகிய சிவத்திற் கலந்திருப்பன்-கிரியாவான்றான்
றேகமாயஞ் சிவஞ் சிலையாதிகளாற் செய்யு மோர் வடிவாயுங்கண்
டதனைத் திரிகரணங்களால் வழிப்பட் டினிமேலோர்பதவியை ய
டையக்கருதி யிருப்பனாகலி னிவ ரிருவருக்கு மிங்ஙன முவமை
கூறினார். (௫)

நெருப்பில்விறகுதியாநெய்யிற்பாறேன்று... ... *
வருக்கனிருளையடர்த்தாற்போன்- மருட்கெடுத்த *
ஞானத்தின்பேர்கிரியைநாசமெனின்ஞானிகளு... ......*
மூனத்தொழிலுஞாப்பாரோ... ... ... ... ... ... ...*

நெருப்பில்விறகுதியாநெய்யிற்பாறேன்று - வருக்கனிரு
ளையடர்த்தாற்போன்- மருட்கெடுத்த - ஞானத்தின்பேர்கிரியை
நாசமெனின்——எ-து-நெருப்பின்கண் விறகு தோன்றாததுபோ
லு நெய்யிற் பால தோன்றாததுபோலு மாதித்தன் புறவிருளை
யழித்தெழுந்தாற்போன் மும்மலமாகிய விருளையழித்தெழுந்த
ஞான மவற்றினது காரியமாகிய கிரியையுந் தோன்றாதழிக்கு
மாகலி னிந்த ஞானத்தின்பேர் கிரியா நாசமென்று வேதாகமங்க
ள்கூறுமெனின்.

ஞானிகளு-மூனத்தொழிலுஞாப்பாரோ——எ-து- இந்தஞா
னத்தைப்பெற் றிதுவே வடிவாயிருந்துள்ள மெய்ஞ்ஞானிகளுங்
குற்றம் பொருந்திய கிரியைத்தொழிலைச் செய்வாரோசெய்யார்
——எ-று.

விறகைப் பழித்தெழுந்த நெருப்பில் விறகும் பாலைப் பழித்தெழுந்த நெய்யிற் பாலுந் தோன்றாததுபோற் கிரியை யழித்தெழுந்த ஞானத்திற் கிரியை தோன்றாதாகலினிங்ஙனமுவமைகூறினார்

கிரியைப் பிறவித்துன்பத்துக் கேதுவாகலானு மதனாலான்மலபாகமாகிய வாதநாதமின்மையானு "மௌனத்தொழி" லென்று "மௌனமுப்பாமோ" வென்றுங் கூறினார்.

இவையிரண்டு திருவெண்பாவானும் ஞானிகளுக் கிரியை செய்யவேண்டுவ தின்மை றன்னறிவித்தவாறு காண்க. (௬)

---

கிரியையான்ஞானங்கிடைத்தாலுங்கேடு... ... *
கருவால்வருவதுபோற்காணு- மொருகோடி...*
சூரியரைக்கூரிருளாலேசுருட்டனீரகில...... ......*
காரணனைத்தீண்டநினைக்கை... .. ... ... .. ...*

கிரியையான்ஞானங்கிடைத்தாலுங்கேடு-கருவால்வருவதுபோற்காணும்—எ-து- கிரியைத்தொழிலான் ஞானங்கிடைத்ததாயினு மந்த ஞானத்திற்குக் கெர்ப்பத்தின்கணுற்பத்தியாய் வரும்பொருள்கள்போற் கேடுண்டா மென்றவாறு.

ஒருகோடி- சூரியரைக்கூரிருளாலேசுருட்டனீரகில-காரணனைத்தீண்டநினைக்கை—எ-து- ஒருகோடி சூரியரை யிருந்தவிருளிற்சுருட்டிப்பிடித்தல்போலுஞ் சடசித்துக்களாயுள்ளபிரபஞ்சங்களையெல்லா நீங்கடந்துநின்று மவற்றை நடத்துங் காரணனாகி யிருந்த சிவனை நீ நமது கிரியையாற் றொடர்ந்து பற்றக் கருதுவது —எ-று.

சரியை கிரியா யோகங்கள் ஞானசாரியரை யடைதற்குப் பக்குவமாக்குவனவன்றி ஞானத்தைக் கொடாதாயினு முன்விட்டகுறையாற் கிரியை யநுட்டிக்குங்காலே யோர்கால் ஞானந்தோன்றிற்றாயினு மந்த ஞானம் ஞானசாரியராற் பெருமையானுந் தான் செய்யுங்கிரியை மேலிட்டானுநிலைபெறுதலையுமாகலிற் "கிரியையான்ஞானங்கிடைத்தாலு" மென்றுங் "கருவால்வருவதுபோற் கேடுண்டா" மென்றுங் கூறினார்.

ஞானத்தாற் சிவத்தைப் பெறவேண்டு மென்ப தறியாது மாயாகாரியமாகிய கிரியையா லதனைப் பெறத்தொடங்கலின் "ஒருகோடி சூரியரைக்கூரிருளாலேசுருட்டலென்" றுவமைகூறினார்.

கிரியையேதுவான் ஞானம் வந்ததாயினு நண்டிப்பி முதலி யதமதுகருவா னாசமாவனபோ லந்தஞான மேலிட்டாற்கிரியை கெடுமென்பதுமாம்.

இத்திருவெண்பாவாற் கிரியை யநுட்டிக்குங்காலைத் தெய்வ கதியாய் ஞானந் தோன்றிற்றாயினு மக்கிரியைமேலிட்டா லந்த ஞானம் நிலைபெற்றுநில்லாது மறையுமென் றறிவித்தவாறு காண்க. (எ)



சுகாதீதம்வேண்டிற்றொழில்செய்வோமென்றா...*
னகரோதுயில்வார்நடந்தோ - விகாரமெனச்..*
சாத்திரமும்பூசைச்சமாதிகளுஞ்சார்போதக் ......*
கோத்திரங்காண்மாயக்குழாம் .. ... ... ... ... *

சுகாதீதப் வேண்டிற்றொழில்செய்வோமென்றா -னகரோதுயில்வார்நடந்தோ—எ-து - ஆநந்தாதீதமாகிய வீட்டையவிரும்பி னதனை யறிவிக்கும் ஞானாசாரியனையடைந்தருண்ஞானம்பெற்றிவ்வருணஞானத்தா லவ்வீ டடையாது விடுத்துக் கிரியைத் தொழிலான் அவ்வீட்டையடையலாமென்றுகருதியக்கிரியைகளைச்செய்வோமெனின் மெய்ஞ்ஞானிக ணகையாரோ அஃதென்னெனி னித்திரை பண்ணவேண்டினோ ரோரிடத்துப் படுத்துக்கொண்டுநித்திரைபண்ணுவதன்றி யோரூர்வழிநடந்து சென்றோ நித்திரைபண்ணுவா ரஃதன்றி.

விகாரமெனச்- சாத்திரமும்பூசைச்சமாதிகளுஞ்சார்போதக்- கோத்திரங்காண்மாயக்குழாம்—எ-து- ஞானிகளோடு மாறுபட்டதுபோன்று நீரோதுஞ்சாத்திரமு மந்திரியாக பூசையிலோர் வடிவைத் தியானித்து நீர் சமாதி கூடுதலு முமது சார்போதத்தின்கூட்டமு மாயைக்கூட்டமு மவைகாண்—எ-று.

போதவொழிவினின்ற சுகாதீதத்தை விருப்பினோர் கருவிகளொழிந்தபோது மசைவறுத போதமவைகளோடு கூடித்தொழிற்செய்தா லப்போத நெய்சொரி தழல்போன் மேன்மேல்வளர்தலிற் "சுகாதீதம்வேண்டிற் றொழிலசெய்வோமென்று" லென்று மித்தொழிலா லச்சுகாதீதம் பெறாத லரிதென்பதுஞ் ஞானிகளறிவா ராகலி "னகரோ" வென் றுங் கூறினார்.

தேகமசைந்து செல்லும்போது நித்திரைவரினு மவ்வசை வந்நித்திரையை வரவொட்டாது தடுத்தல்போலக் கருவிகளசை

ந்து தொழிற் செய்யும்போது தெய்வகதியா லாநந்த நித்திரை உறினு மித்தொழி லந்நித்திரையை வரவொட்டாது தடுக்குமாக லிறந்தேக மனைவற வோரிடத்துக் கிடந்தபோது நித்திரானந் தம் வருவதுபோற் கருவிக டொழிற் செய்யா தடங்கியபோ தா நந்த நித்திரா நந்தாய் வருமாகலினுந் "துயில்வார் நடந்தோ,, வென்றார்.

போதமொன்றாயினு மடுத்த கருவிகடோறு மதனதன்மைய மாய்ச் செல்லி நத்தலிற் "சார்போதகோத்திர மென்று,, பன் மையாக் கூறினார். "மாயக்குழாம்,, என்றது கருவிகளைப்போத மூங் கருவிகளுங் கூடிச்செய்தலா னிரண்டையுங்கூட்டிக்கூறினார். பாசஞானம்-பசுஞானமென்றுமாம்.

இத்திருவெண்பாவாற் கருவிகளையும் போதத்தையுங் கடந் துநின்ற சுகாதீதமுத்தியையடைவற்றாற் செய்யுங்கிரியைகளானடை யக் கூடாதென் றறிவித்தவாறு காண்க (அ)

தொழிலிறுதிதானே சுகவுதையமென்றாற்[ல்செயினும்
றொழிலுதயந்துக்கமெனச்சொலலோந் - தொழி
லந்திப்போகம்போலவுண்டுடுத்தன்மாத்திரமாய்ச்... .. *
சிந்திப்பாரைப்பேணிச்செய்... ... ... ... ... ... .....

தொழிலிறுதிதானே சுகவுதையமென்றாற் - றொழிலுதயந் துக்கமெனச்சொல்லோம்—எ-து- இம்மையைக் குறித்துச்செ ய்யு முழவாதி யறுவகைத் தொழில்களு மறுமையைக் குறித்துச் செய்யுஞ் சரியாதி தொழில்களும் வீட்டைக் குறித்துச்செய்யுங்க ருவிகளை நிபசிகளை ஊதாகிய தொழில்களு மதற்குமேல் ஞாதுரு ஞானஞேயமாய் நிற்கும் போத வசைவுகளு மற்ற விடந்தானே சிவாநந்தோதயமென்று வேதாகமங்கள் கூறுமெனி னுள வேனுந்தொழிலுதயமாவவிடத்துத் துன்பமுண்டாமென்றியா ங்கூறுகிலோ மாண்டுத் துன்பமுணடென்பது தொழிலிறுதிதா னே சுகவுதைய மென்ற மொழிதானே விளக்கலின் ஆயினீரிங்ஙு னங் கூறியவாற்றாற் றொழில் சிறிதேனுஞ் செய்ய வேண்டாவோ வெனில-

தொழில்செயினும் - வந்திப்போகப்போலவுண்டுடுத்தன் மாத்திரமாய்ச் சிந்திப்பாரைப்பேணிச்செய்—எ-து- இன்றியமை யாத சிற்சில தொழில்களை நீ செய்யினு மினிமேலக்கு வேண்டு

மென் றென்றையுங் கருதா தாண்டுமிக்கும் வந்திப்போகம்போ லிம்மை மறுமைப் போகங்களி லொன்றையுங் சிந்தியாதுகாடு கூடிழினுங் கிடைத்ததையு நடலுங் கரித்தாண்கந்தைபாம்நனுங் கிடைத்ததையுடுத்தலுமாகிய விடமாத்திரமே சிந்திக்கும் பெரி யோரைப் பார்த் தவரைப்போல நீயுஞ்செய்தி—எ-று.

ஓர்தொழிலுஞ் செய்யாது நிழற்கண்ணிருப்பது சுகமென் றெழுந்து வெய்யலிற்சென்று தொழிற்செய்த றுன்பமென் பது சொல்லவேண்டுவ தின்றாகலிற் "ஏறுழிலுதயந் துன்பமெ னைச்சொலவல்லா,, மென்றார்.

வந்த சுகத்தைச் சுதரின்மையான் மேலகொன்றையுங் கு றியாதாம்பான் ஞானிகட் கிபரங்க ளெல்லாம் பொய்யாகலி னிவரு மொன்றியையுங் குறியாராகலினு மவ 'ஞானமுடித்தன்மா த்தராயிருத்தலபோ லிவரு "பூண்முடித்தன மாத்திரமா,, யி ருத்தலினு மநவன மூவமை கூறினர்.

"சித்திப்பாரைப்பேணிசெய்,, யென்பது நீ தொழில்செ ய்தியாயினும் ஞானிகளையைப் பார்த்தவர் செய்யுந் தொழி னமாத்திரமேயன்றி யதிகஞ்செய்யற்க வென்பதெனக் கொள்க.

இத்திருவெண்பாவான் ஞானக்கிரியைமாத்திர மேலேப்பய ன்குறியாது செய்கவென் றறிவித்தவாறுகாண்க (௯)

சும்மாதிருக்கவைத்தசூத்திரமாஞ்சாத்திரத்தை... .....*
விம்மாக்கதறுவதும்வேலைகளுந்- தம்மறிவா ........*
னீட்டிப்பிடித்திருக்குநிட்டைகளுஞானிகண்முன் ... ...*
காட்டும்பரியாசகம்... ... ........ .. .. ..... .........*

சும்மாதிருக்கவைத்த சூத்திரமாஞ்சாத்திரத்தை - விம்மா க்கதறுவதும்வேலைகளும்- தம்மறிவா - னீட்டிப்பிடித்திருக்குநி ட்டைகளும்—எ - று - தம்போதத்தை யொழித் தானந்த மவுன மாயிருக்க ஒரிலைச்சுவுபாயமாகிடசாத்திரங்களைவிம்மியழுதோ தலும் நீராடலாதி கிரியைகளைச் செய்தலுஞ் தமது போதத்தா லோர்வழிவைத் தியாநித் துடலை நீட்டிப் பிடித்தாசனங் கட்டி யிருக்கு நிட்டைகளுமாகிய விவையெல்லாம்.

ஞானிகண்முன் - காட்டும்பரியாசகம்—எ-று-இவைகளொ ன்றுமின்றி மவுனானந்தமாயிருக்குமெய்ஞ்ஞானிகண்முன்னர்க் காட்டப்பட்ட பரியாசகமாம்,—எ-று.

வேதாகமவழிகூறு ஞானசாத்திரங்களெல்லாந் தற்போதத்தை யொழித்துச் சிவமாயிருத்தற் குபாயங்கூறுமாகலிற் "சும்மா இருக்கவைத்தசூத்திரமாஞ்சாத்திரத்தை" யென்றும் ஞானசாத்திரத்தி னருத்தங்களை நாடிக் கலுழ்தலான் விம்மா வென்று மவ்வருத்தப்படி நில்லாமையாற் - கதறுவதென்றுங் கிரியைகளியாவு மறிவன்றாகலின் மூலகர் வேலைமேலாடுதுவ மோர்வேலையாகலினும் வேலைக ளென்றுந் தற்போதத்தாற் கூடி நிட்டை ஞானநிட்டையன்மையா "னிட்டிப்பிடித்திருக்கு நிட்டை" யென்று மிவையெல்லாம் ஞானிகட்குப் பரியாசகமா யிருத்தலிற் பரியாசகமென்று கூறினார்.

"தம்பறிவா னிட்டிப்பிடித்திருக்கு" மென்றமையா னருளறிவானிட்டை கூடாத னிட்டை யெனப்படாதாயிற்று.

இத்திருவெண்பாவாற் போதமிறந்து நிற்பதே நிட்டையென்றாய் போதத்தோடுங் கூடிச் செய்வது நிட்டையன்றென்று மறிவித்தவாறுகாண்க. (௯)

குடையுஞ்செருப்புங்கொடுநடப்பதல்லாற் ...*
படியும்விசும்பும்பரப்பி- யிடையாடு ...., *
மாத்திரம்போலேசமயவாதமனம்போதாத .. *
சாத்திரங்கற்றார்விடேற்றார் .. ... ... ... ... ..*

குடையுஞ்செருப்புங்கொடுநடப்பதல்லாற் - படியும்விசும்பும்பரப்பி - யிடையாடு - மாத்திரம்போலே — எ-று - ஒரூருக்குச் செல்லவேண்டினோ னுடம்பின் மழைவெயி லாதிகள் படாது கையிற் குடையும் பிடித்துக்கொண்டுகாலிற்கன்முளையண்டாக் காது செருப்புந் தொட்டுக்கொண்டு நடப்பதேயன்றி யாகாய மெங்குங் குடை பரப்பிப் பூமியெங்குந் தோல்பரப்பி - யவற்றிற் கிடையேசெல்லு மாத்திரம்போலே.

சமயவாதமனம்போதாத- சாத்திரங்கற்றார்விடேற்றார் — எ-று- சமயிக ளனைவராகக் கூறுந்தருக்கவாதங்களையுமத்தருக்க வாதத்தா லநந்தபேதமாய்த் தோற்று மனேகயுத்திகளையு மளவு கூறினு மவ்வளவு போதாத சாத்திரங்களைக் கற்று விடடைந்தாரியாவர். — எ-று.

ஒரூரடையக் கருதினோன் மேனுக்குங் காலுக்குந் துன்பமு றாவகை குடையுஞ் செருப்பும் பிடித்திட்டுக் கொண்டு சென்

றவ்வூரடைவதுபோல் வீட்டையக் கருதினோ ராசாரியார் கூறு
முபதேச மொழிகளு மவர் கொடுக்குமோர் சாத்திரமுங் கொ
ண்ட வற்றி னருத்தப்படி திரிகரணங்களாலெண்ணறையும்வருந்தி
ச்செய்யாது தற்போதத்தையே யொழித்தவ்வீட்டை யடையா
தளவிடப்படாத வாகாயத்தினும் பூமியினுங் குடையந் தோறு
ம்பரப்பி நடுவிடை செல்லத் தொடங்குமானைப்போலுந் தருக்
கவாதங்களையு மவ்வாதத்தாலெழு மனேவுத்திகளையு மளவிடுது
மளவிடப்படாத சாத்திரங்களைக கற்று நீர் வீட்டையத தொடங்
குவதென்பதுஞ் சிலகற்பினு மதனல் வீடு கூடாதென்பதுமி
தனற்காலங்க சாத்திரங்களை மிகவுங் கற்றோர்களுத் தருக்கவாத
மு மனேவுந்தியு மிகவும் விரியுமாகலிற் சாத்திரங்கட்களவு கூறு
வார் வேறுகூறு தவற்றையே யளவு கூறினர் வாதமென்பதுமன
மென்பது மாகுபெயர்.

இத்திருவெண்பாவால் அபரஞானத்தால் வீட்டையக் கூடா
தென்றறிவித்த வாறுகாண்க. (௰௧)



அறிவாலேபற்றியனுபவித்துவிட்ட... ... ... ... *
கிறியால்வருமோகெடுவீர்- றறிவாய்நீ... ... ... *
ராம்போதறிவிப்பான் றுஞபவையிரண்டும்... ... ... *
போம்போதும்வாராப்பொருள்... .. ... ... ... ... *

அறிவாலேபற்றியனுபவித்துவிட்ட- கிறியால்வருமோகெ
டுவீர்—எ-து- தற்போத வறிவாலொன்றைப் பாவித்துப் பற்றி
யிஃதிங்ஙன மிருப்பதென் றப்போதத்தா லனுபவித்தறிந்து மீ
ட்டு மப்பாவனையைவிடுத்த பொய்யினல்வருமோ கெடுவீர்காள்

அறிவாய்நீ-ராம்போதறிவிப்பான் றுஞயவையிரண்டும்-
போம்போதும்வாராப்பொருள்—எ-து- கருவிகண் முப்பத்தா
றையு நீக்கி யவற்றின் முடிவினின்ற வறிவியாமென் றவ்வறிவாய்
நீராகும்போ தும்மையுந் தன்னையு மறிவிப்பான் றுஞயந்த வ
றியுமறிவு மறிவிக்கு மறிவுமாகிய விவையிரண்டு நீங்கியபோதும்
வாராதசிவனுகிய மெய்ப்பொருள்.—எ-று.

பாவனையிற் றோன்றும் வடிவுமாயை யவ்வடிவி லிதம்பிற
த்தல் கருமமவ்வடிவை மெய்யாகக் கருதப்பண்ணுவ தாணவமா
தலிற் "கிறியால்வருமோகெடுவீர்" னெனுர் அருணுமான்மபோ

தமு நீங்கியபோ தான்மா சிவமயமா யிருக்கு மாகலி னவையி ரண்டும் "போம்போதும்வாராப்பொரு" ளென்றார்.

இத்திருவெண்பாவா லருளையும்போதத்தையுங்கடந்துநி ன்ற சிவம்போதத்திற் ககப்படாதென் றறிவித்தவாறுகாண்க.

அழிப்பேயவனுக்குமிச்சையதுவாறு... ... .......*
விழப்பேயுனக்கிசசைசையென்று- யிழப்பை........*
யறியாததுகாணறியாவஞ்ஞானங் .. ... ... ... .. .*
கிறிகேளுனபோதங்கெடல்... ... ... ... ....... ... *

அழிப்பேயவனுக்குமிச்சையதுவாறு-விழப்பேயுனக்கிச் சையென்றுய் --எ-து-உன்போதத்தை யொழிப்பதே சிவனுக் குமிச்சை யவன திச்சா சத்தித் தொழிலுமதுவாறுலவரதிச்சை போ லுன் போதத்தை யொழிப்பதே யுனக்கு மிச்சையாக் கருதுவாய் நீவீட்டடைய விரும்பினை யெனின்-ஆயினீரிங்ஙனங்கூ றிய வாற்று லஞ்ஞானங்கெடுதல்வீடன்றென்பதும்போதங்கெ டுதல் வீடென்பதுமாயிற் றினி அஞ்ஞானமாவதியாதெனின்.

இழப்பை- யறியாததுகாணறியாவஞ்ஞானங் - கிறிகேளு ன்போதங்கெடல்---எ-து- அப்போத விழப்பை யறியாது கிரி யையாதிகளை நீ செய்தலே யறியாமையாகிய வஞ்ஞான மென் றறிதியாயி னப்போதவிழப்பை யறிதற் குபாய மெங்ஙன மெ னின் பொய்யனே யினி யுன்போதங் கெடுதற் குபாயஞ் சொ ல்லுது நீ கேட்டி—எ-று.

சிவன் சத்திசையி னுடலையொழித்து மாயையில்லை த்தளப்பாற்றுதலபோன் முத்திதிலைசயிற் போதத்தையொழி த் தாநந்தக் கடலில்லவத் திளப்பாற்றுவனுயினு மவனொழிக்கு மிச்சைபோற் றன்னையிழக்கு மிச்சை வைத்த வான்ம போத த்தை யொழிப்பனன்றி யப்போதத்தை யொழிக்கு மிச்சையி ன்றிய வான்ம போதத்தை யொழியானுகலி "னிழப்பேயுனக் கிச்சையென்று" யென்றார்.

இத்திருவெண்பாவாற் றற்போத நாசத்தை விரும்பினோ ர்க்கு மெய்ப்பொருள் கிடைக்குமென் றறிவித்தவாறு காண்க.

மருந்துபிணியோடேமாண்டுபகைதீ... ... ...*
பெரிந்தவிறஞோடிறக்கில் - விரிந்த...... .....*

தொழின்மனத்தின்மட்டே நீதோயுமதென்றூடி...*
நிழல்புலத்தாற்போலெதிர்போய்நில் .. ... ...*

மருந்துபிணியோடேமாண்டுபுகைதீ - யெரிந்தவிறகோடிறக்கில்—எ-து- பிணிமாண்டபோ தது நீங்கற்பொருட்டுண்ட மருந்துமப்பிணியோடு மாண்டுபோமெனி னெரிந்த விறகிறந்தா லவ்விறகோடும் புகையுந் தீயுமிறக்குமெனி னவைபோலுன்போத மிறந்தா லப்போதத்தோடுங் கிரியை யிறக்குமென்றாங் கிரியை யிறந்தா லதனோடு கருவியும் போதமுமிறக்குமென்றுமறியா துன்போதத்தாற் கிரியை செய்யா நின்றனை.

விரிந்த- தொழின்மனத்தின்மட்டே நீதோயுமதென்றூடி- நிழல்புலத்தாற்போலெதிர்போய்நில்—எ-து - நாறுவாய்விரிந்துவுளது கிரியைத் தொழில்கண் மனத்தினளவேயன்றி வேறின்றாகலிற் கருவிகள் முப்பத்தாறையும் போதத்தையுங் கடந்துநின்றசிவத்தைக் கிரியை யேதுவாகக்கொண்டப்போதத்தானூடி யச்சிவத்தை யடையத் தொடங்குமுன் கருத்தென்னை நீயக்கருவிகளை நியதிகளோந் தவற்றின் முடிவினின்ற வுன்னை யருளாலறிந்து பெரியநிழலிற் சிறியநிழன் மறைந்தாற்போ னியதநிருவருளின் மறைந் தெதிரீடெல்லாம்போட்நிற்றி யிங்ஙன நிற்றியெனிற் போதமொழித்தற் குபாயமுஞ் சிவத்தைப்பெறுதற்குபாயமுமிதுவேயாம்—எ-று.

போதந்தோன்றிய போது கிரியை தோன்றுமப்போதுஞ்சிவத்திலிறந்தபோ தப்போதத்தோடுங் கிரியை யிறக்குமாகலிற் போதத்தைப் பிணியாகவுங் கிரியையை மருந்தாகவும் வைத்துக் கூறினார்.

விறகெவ்வளவிருந்த தவ்வளவும் புகையுந்தீயு மிறவா தவ்விறகிறந்தபோ ததனுடனே புகையுந் தீயு மிறக்கு மவைபோற்கிரியை யெவ்வளவிருந்த தவ்வளவுங் கருவிகளும் போதமுமிறவா தக்கிரியை சிறிதுந் தோன்றா திறப்பி னதனோடு மிக்கருவிகளும் போதமு மிறக்குமாகலின் "புகைதீயெரிந்த விறகோடிறகி,,

கிரியை யிறந்தபோது கருவிகளும் போதமு மிறக்குமென்ற தெங்ஙனமெனிற் கிரியை யிருந்தபோது போதம் வளர்வதேயன்றி யிறவா தக்கிரியை யிறந்தாற் போதத்திற் கலைசவின்றிக்கெடு மிப்போதங்கெடவே யிதனைத் தொடர்ந்துநின்ற கருவிகளுங்கெடுமாகலி னிங்ஙனமென் றறிதி.

பெரியநிழலிற் சிறியநிழற் படம்போகா தடங்கின் மறையுமதுபோற் பூரணமாகிய சிவபோதத்திற் கிஞ்சிக்கிய மாகிய வான்மபோத மெதிரிட்டடையா தடங்கி னதின் மறையுமாகலி "னிழல்புனைதத்தாற்போ," லென்றார்.

நீங்கிநின்ற கருவிகளையு மடைந்துநின்ற திருவருளையுமெதிரிடாது நிற்கவேணடு மாகலி "னெதிர்போய்நில்," லென்றார்.

இத்திருவெண்பாவாற் போதமடக்குதற் குபாயங் கூறியவாறு காண்க. (௰௪)



காணுமறிவுநீகாட்டறிவுநாமவற்றைக்...... ...*
காணக்கழலுங்கழற்றியிலே-நாணி.........*
தமைத்திரும்பிப்பாராதேநான்றானென்றதே .. *
யமிழ்த்துகரகம்போனிற்பாய் .. ... ..........*

காணுமறிவுநீகாட்டறிவுநாமவற்றைக் - காணக்கழலுங்கழற்றியிலே -எ-து- கருவிகளை பிறவிதுவென்று காணுமறிவு நீயவற்றை யுணர்துயிர்க்கருவியாயிருந் துனக்குக்காட்டு மறிவு நாமக் கருவிகளினது குணங்களை நீகாணக்காணவவைகளெல்லாமுனக் கன்னியமாய் நீங்கு நீக்கத்திலவற்றின் முடிவினின்ற வுன்னைக் கண்டபின்னர்.

நாணி - தமைத்திரும்பிப்பாராதேநான்றானென்றதே-யமிழ்த்துகரகம்போனிற்பாய்—எ-து- அக்கருவிகளையறிந்து நீக்கவுமெண்ணுமுள்ளபடியறியவும் வல்லானைக் காணு மறிவாகலி னெனக்குச் சுதந்திர மில்லையென்று நாணி யெனக்குக்காட்டு மறிவொன்றுளதென் றெம்மை மெதிரிட்டுப் பாராதே யங்ஙனங் காணு மறிவுங் காட்டு மறிவுமாயிருந்ததோ மாயினுங் கண்ணொளியுமாதித்தவொளியும் பிரிப்படாத தும்போற் பிரிப்படாதிருப்போ மாகலி னெம்மைத்தன்றி யிங்ஙனம் பிரிப்படாதிருந்த பரிபூரணத்தை நான் றானென்று கருதாதே கடலிலமிழ்த்தகரகஞ் சலத்தையுள்ளே கொண்டக்கடலின் மறைந்தாற்போ னீயுமப்பரிபூரணத்துக்குள்ளே யமிழ்ந்தி நீதானாகு ததனுண் மறைந்து நிற்பாய்-எ-று.

கருவிகளினது குணங்களை யெதிரிட்டறியாதபோதகைகளான்மாவிற் கன்னியமாய் நீங்காதாகலிற் "காணக்கழலு," மென்றார். கருவிகளையெல்லா நீக்கி யான்மா வருள்வடிவாயபோத வருட் பூரணமெல்லாந் தானாய்த்தோற்று மாகலி "னான்றானென்றதே," யென்றார்.

இத்திருவெண்பாவாற் கருவிகளீங்குதற் குபாயமு மவற்றைநீக்கித் தன்னையருளா லறிந் தருட்பூரணம் விளங்கியபோது போதஞ் சிவியா தருளின்மறைந்து நிற்றற் குபாயமு மறிவித்தவாறு காண்க. — (௰௫)

**வ**துவைச்சடங்கதனைமைதுனமாக்கொண்ட.. *
புதுமைச்சிவாநந்தம்போதும் - பைதயா....*
விளக்கொளியிலெண்ணெய்வியாபியாநற்போற்.*
கொளக்கொடுத்தல்சத்தியமாககொள்...........*

வதுவைச்சடங்கதனைமைதுனமாக்கொண்ட - புதுமைச்சிவாநந்தம்போதும் —எ-து - தன்புருடனைக்கூடியின்புறுதற் கேதுவாய்ச்செய்யுங் கலியாணச் சடங்கினை யவனோடுங்கூடியின்புறுதலாகக் கருதிக்கொண்ட பேதைப் பெண்போற் சிவனாகியபுருடனை ஆன்ம நாயகி கூடியின்புறுதற் கேதுவாச் செய்யுங் கிரியைத் தொழிலை யவனோடுங்கூடி நீ யின்புறுதலாகக் கருதிக்கொண்ட விந்தப் புதுமையாகிய சிவாநந்த மமையு மினிக் கிரியையைச் சிவாநந்த மாகக்கருதுங் கருத்லைவிட்டு.

பைதயா - விளக்கொளியிலெண்ணெய் வியாபியாநற்போற்-கொளக்கொடுத்தல்சத்தியமாககொள்—எ-து - அசையாதுநின்று விளக்கொளிக்குள் ளெண்ணெய் வியாபியாநற்போ னீசிவத்தில் வியாபியா யசைவறநின் றதுவிழுங்கிக் கொள்ள வுன்னைக்கொடுத்த லுண்மையா யுள்ள முத்தியென் றறிந்துகொள்ளுதி —எ-று.

விளக்கொளியி லெண்ணெய் வியாபித்துக் கொண்டு நிற்க விவ்வெண்ணெய்யை யவ்வொளி விழுங்கித் தான் பிரகாசித்தல் போலச்சிவபூரணத்திலான்மாவியாபித் தசைவறநிற்கவே யச்சிவபூரண மிவ்வான்மாவை விழுங்கிக்கொண்டு தான் பிரகாசிக்குமாகலின் "விளக்கொளியி லெண்ணெய் வியாபியாநற்போற் கொளக்கொடுத்த,, லென்றார்.

தன்னைக்கொடுப்பது சத்தியமெனவே தன்னாற்செய்யுங்கிரியை யசத்தியமென்பது தானேயாயிற்று.

இத்திருவெண்பாவாற் போதத்தாற்செய்யுங் கிரியை முத்திக்கேதுவன்றென்பதும் போதத்தைச் சிவனுக் கூணாகக் கொடுத்து நிற்றலே பேறுவென்பது மறிவித்தவாறுகாண்க. (௰௬)

நான்காவது-கிரியைக்கழற்றி முற்றிற்று.
ஆ- திருவெண்பா - ௱௯.

உ

ற்றம்பலம்.

ந் தா வ ரு

# சரிதைக்கழற்றி.

நடந்துங்குளித்துமிது நல்லநாளெனே...... ... ... *
விடுந்தொழிலான்மெய்வருந்திவிட்டேன் - மடங்காதார்
என்றுசுகமேயிருப்பரிப்போதே துக்கமிவர்க்... ... ...*
கென்றெதிர்போயின்பழுதிக்கும்...... ...... ........*

நடந்துங்குளித்துமிது நல்லநாளெனே - விடுந்தொழிலான் மெய்வருந்துவிட்டேன்-மடங்காதார் — எ-து- பூப்பிரதெக்கணமாய் நடந்துஞ்சென்றுங் கங்கைமுதலிய தீர்த்தங்களாடியு மிது நல்ல நாளென்ன வூணைவிடுத்து மிவைமுதலியன செய்யுஞ் சரிதைத் தொழிலான மெய்வருந்து மிங்ஙனஞ் செய்வனவே விட்டென்று துணிந்து தற்போத மடங்காதார்.

என்றுசுகமேயிருப்பரிப்போதே துக்கமிவர்க்- கென்றெதிர்போயின்பழுதிக்கும் — எ-து- யெக்காலமோர் தொழிலையுஞ் செய்யாது சுகமே யிருப்பரித்தொழில்களாலிவர்க் கிம்மைக் கண்ணே துன்பமித்தொழில்வாசனை மறுமைக்கண்ணுந் தொடருமாகலி னெக்காலந் தானென்றுஞ் சிவமென்று மெதிரிட்டுப் போதமொழிந் தானந்தந்தோன்றும் — எ-று.

தாங்குறித்தது வீட்டின்பமாயிருந்து மதனைப்பெறுதற் கேதுவல்லாத சரிதைத்தொழிலை மிகவு மெய்வருந்திச் செய்த லாலவ்வின்பத்தைப் பெறுதற் கேதுவாய்த் தற்போதத்தையு மெளிதிலொழித் ததனை யெக்காலம் பெறுவரோவென்னுங் காருண்ணியத்தா "லென்றெதிர்போ யின்பழுதிக்கு" மென்றார்.

இத்திருவெண்பாவால் வீடடையத் தொடங்கினா ரறியாமையா லித்தொழிலைச் செய்து வருந்துகின்றா ரந்தோவென் றிரங்கிக் கூறியவாறுகாண்க. (௬)

உடலாலுழைத்தாலுடலொழியுமென்று... ...*
கெடுவீரிதையெங்கேகேட்டீர்-உடலே......*
நடையாடியபிணம்போலுன்போய்த்திரியக்......*
கிடையாதோவென்றுகேளீர் ..................*

உடலாலுழைத்தாலுடலொழியுமென்று-கெடுவீரிதையெங்கே கேட்டீர்—எ-து- உடலால்வருந்தி யாத்திரை சேறன் முதலிய விச்சரிதைத் தொழிலைச் செய்தாற் பிறப்புநீங்குமென்று கெடுவீர்கா ளிந்த வுபதேசத்தை யெந்தக் குருவினிடத்துக்கேட்டீர்

உடலே- நடையாடியபிணம்போலுன்போய்த்திரியக் -கிடையாதோவென்றுகேளீர்—எ-து- இந்தவுடலுமேனை நடையாடியபிணம்போலத் தற்போதங்கெட்டு நிலத்தின்கண் ணுலாவ வெமக்குண்டாகாதோவென்று ஞானசாரியரைக்கேளாதநீங்கள்-எ-று

ஞானசாரியரை யடைந் தனுக்கிரகம்பெற்ற மெய்ஞ்ஞானிகட்குக் கருவிகண் முப்பத்தாறுந் தற்போதமுங் கெடலானக்கருவிச் சேட்டையும் போதச் சேட்டையு மின்றுமாகலினவரது திருமேனி புறனும் புறனும்வறுங் கடத்தாகாயம்போற்சிவமே நிறைந்திருக்கு மவர் நிலத்திற் சரிக்கும்போதுமக்கடமாகாயத்திற் செலவதும்போற் றோற்றமாகலி "னடையாடியபிணம்போலுன்போய்த்திரிய" வென்றார்.

"கேளீ" ரென்கேகேட்டீரெனமுடிக்க வீடடையத் தொடங்கி யிங்ஙனஞ் செய்தலாற் "கெடுவீ" ரென்றார்.

இத்திருவெண்பாவா லவர்கேட்ட வுபதேசத்தை மறுத்தவாறுகாண்க. (உ)

—

எந்தவூர்நீரென்றாலிப்போதிருந்தநாம்.........*
வந்தவூர்தன்னைமறந்தோமே- வந்தவூர்க்......*
கின்றுநாம்போம்வழியேதென்னிலுமக்கேழுலகு.*
மொன்றுபோலொன்றுதோன்றும்...............*

எந்தவூர்நீரென்றாலிப்போதிருந்தநாம் - வந்தவூர்தன்னைமறந்தோமே—எ-து- இயாமிந்த வூரிலிருந்து மற்றோரூருக்குச் சென்றபோ தவ்வூரிலிருந்தா ரொருவ ரெந்தவூர் நீ ரென் றெ

கைக்கேட்டா லிப்பொழு திருந்துவந்த வூர் தன்னை யவனுக்கி ன்னவூரொன்று சொல்ல மறந்தோமெனின்.

அந்தவூர்க் - இன்றுநாம்போம்வழியே தென்னிலுமக்கேழு லகு-மொன்றுபோலொன்றுதோன்றும்—எ-து-முன்னிருந்து வந்தவூருக் கிப்போது நாம்போதற்கு வழி யாதென்று நீர் நாடி னுமக் கேழுலகு மொன்றுபோற் றோன்றி யந்தவூருக்குச் செலலும் வழிபோன் மற்றோரூருக்குச் செலலும்வழி தோன் றுமெனி னிங்ஙனங்கேட்டோலுக் கூர்ப்பெயருஞ்சொல்லமறந் தவ்வூருக்குச்செல்லும் வழியுந் தெரியாது மயங்கிய விப்போ தங்கொண்டோ திரிகரணங்களையுங்கடந்துநின்ற பூரணசிவத்தை நீரடையத்தொடங்கினீர்—எ-று.

அவர்க்குத் தம்மைப்போ லிவருந் தோற்றலா னவனா யி வர் தம்மோடுங் கூட்டி "மறந்தோமே,, லென்றார்.

ஊர்ப்பெயர் சொல்ல மறந்து போவது தூலபுத்திபாற் றெரியா தியா மங்ஙன மறப்ப திலமென் றவரைத் தம்மைவிட ட்பிரித்துநோக்கி உமக்கேழுலகுமொன்றுபோலொன்றுதோ ன்றுமெனத் தூலமாகியவழித்திகைப்பையெடுத்துக்காட்டினார்

நெறிக்கட்டிசை தப்பியபோது முன்போ னன்குதிசையும்பி ரிந்து தோன்றா தாகலி "னேழுலகுமொன்றுபோ,,லென்றார்.

இத்திருவெண்பாவான் ஞானசாரியராலன்றி யான்மாக்க ள் சுதந்திரத்தால் வீடடையக்கூடாதென்று சுதந்திரவினை மறி வித்தவாறுகாண்க. (௯)

---

வேட்டியுந்தாழ்வடமும்வெண்ணீறும்வெண்பல்லுங்,
காட்டிவதுஞானக்களவுகாண் - தேட்டமற்றோன்
பூரணன்காண்சிற்றறிவன்பொய்ப்பாசமென்றறிந்தார்க் *
கோர்வடிவும்வார்த்தையுமுண்டோ..... ..............*

வேட்டியுந்தாழ்வடமும்வெண்ணீறும்வெண்பல்லுங்-காட் டிவதுஞானக்களவுகாண்—எ-து- காவிவேட்டியு முருத்திராக்க த்தாழ்வடமு மெய்முழுதும் பூசும் வெண்ணீறு மடைக்காய் தி ன்றாத வெண்பல்லு மிவை முதலிய சிவவேடங்களைமெய்யிற்கா ட்டுவது ஞானத்திருட்டுக்காண்.

தேட்டமற்றோன்- பூரணன்காண்சிற்றறிவன்பொய்பாச மென்றறிந்தார்க் - கோர்வடிவும்வார்த்தையுமுண்டோ --- எ-று- ஓர்பொருட்கண்ணும் விருப்ப மற்றோனாகிய சிவன பரிபூரண ன்-சீவன் சிற்றறிவன் பாசம்பொய்யென்றறிந்த ஞானிகட்கோ ர்சமையவேடமுஞ் சமைய வபிமான வார்த்தையு முளவோவில் ---எ-று.

அகத்து ஞானமின்றிப் புறத்து வேடத்தானும் வசனத்தா னும் ஞானிபோற்காட்டின மையான் "ஞானக்களவுகா", ரெ ன்றார்.

அகத்து ஞானமும் புறத்து வேடமு முளவெனின் ஞான க்களைவன் றுயிற்று-சிவ: மனுத்திரன் முதலிய பொருள்கட்கெ ல்லா முட்பறனாகிய பரிபூரண வறிவாகலி னதற்கோர் சமைய மில்லை சிற்றறிவு பொய்யாகிய பாசத்தைவிட்டு நீங்கி யப்பரிபூ ரண வறிவோ டிங் கலந்தபோ தப்பரிபூரண வறிவாய்நிற்குமன் றியதுவிது வென் வுப்பதுப்பில்லை யாகலி னோர்வடிவும் வார்த் தையு முண்டோ வென்றார்.

இத்திருவெண்பாவால் வேடத்தான்மிகவுஞ் சிறப்புளராயி னு மகத்துஞான மிலரெனிற் சிறப்பிலரென்பதும் வேடமியா து மிலராயினு மகத்துஞான முள்ளார் சிறப்புளரென்பது மறி வித்தவாறு காண்க. (௪)



கல்வியாப்புத்தகமாய்க்காவிகடுக்குட்கட்டாய்ப்... ..*
பல்லின்வெளுப்பொத்தபசுமார்க்க-மெல்லை... ... *
கழன்றதியானத்திற்கண்சிமிட்டுமாங்காண் ... ... ...*
சுழன்றபெருமாயைத்தொழில்.............................*

கல்வியாப்புத்தகமாய்க்காவிகடுக்குட்கட்டாய்ப்-பல்லின் வெளுப்பொத்த பசுமார்க்கம்—எ - று - தாங்கற்ற கல்விகளைப் பேசுவதாய்ப் புத்தகங்கையிற்கொள்வதாய்க் காவிவேட்டியுடுப் பதாய்த் திருமேனிக் கடுக்கன் காதில்லே யிடுவதாய்க் கண்டத்திற் கெவுடங் கட்டுவதாய்ப் பேச்சிற்கும் வேடத்திற்குமொப்பமே றிபல் வெளுப்பு மொத்திருந்த பசுஞான நெறியினையுடையார்

எல்லை- கழன்றதியானத்திற்கண்சிமிட்டுமாங்காண்-சுழன்ற பெருமாயைத்தொழில்---எ-று- பிருதிவிமுதல் நாதமீறென் றளவு கூறப்பட்ட கருவிகண் முப்பத்தாறையுங் கழன்ற சிவத்தியானம்

த்தை யுடையனைப்போலக் கண் மேற்செருகி யாசனங் கட்டிக் கொண்டிருப்ப ரிவ ரிங்ஙன மிருப்பதாங்காண் கறங்குபோற்சுழலா நின்ற பெரிய மாயையினது தொழிலாவது—எ-று.

ஞானமின்றி வேடங்கொண்டோர் வேடதாரிகளோ டொப்பாகலிற் "பசுமார்க்க" மென்றார். அகத்துப் பரிபூரண ஞானமின்றிக் கண்சிமிட்டிப் பத் திந்திரியங்களையு மப்போதடக்கி யாசனங்கட்டி யிருப்போர்க்கு முன்னர் ஞானேந்திரியங்களா லறிந்து கன்மேந்திரியங்களாற் றொழில் செய்யுமனமப்பத்திந்திரியங்களு மடங்கலி னவற்றின் வாசனையோடு முன்னோறிய வாசனையோடு முள்ளே சுழலுமன்றி யடங்காதாகலிற் "சுழன்றபெருமாயைத் தொழில்" என்றார்.

இத்திருவெண்பாவான் ஞானநிட்டையன்மையா னவரது நிட்டையை மறுத்தவாறுகாண்க. (௫)

---

ஞானக்கிரியைநடிப்பவர்க்குநாடோறும் ... *
போனத்தளவேபுசிப்பன்றி - யேனுந் ... *
துறவாயவாவறுத்துமெய்யுணர்ந்ததூய ... ...... *
வறிவார்க்கறியாவின்பம்............ ..............*

ஞானக்கிரியைநடிப்பவர்க்குநாடோறும்-போனத்தளவேபுசிப்பன்றி—எ-து-அகத்துஞானமின்றிப் புறத்து ஞானசாரமாய்நடிப்பவர்க் கெக்காலமு மன்ன பானத் தளவு வரும் விடயாநந்தாநுபவமன்றி.

துறவாயவாவறுத்துமெய்யுணர்ந்ததூய-வறிவார்க்கறியாவின்ப-மேனும்—எ-து- துறவினை யுடையராகித் துறந்த வப்பொருள்கண்மேன் முன்னர் வாசனையாலேறு மவாவினை மறுத்துமெய்ப்பொருளையுணர்ந்த நிருமல ஞானிகட்குந் தோன்றாத சொரூபாநந்தாநுபவ மேனுமுண்டாம்—எ-று.

இவர்செய்யு மாசாரத்தைப் பிறர்கண்டு பெரியரெனப்போனகங்கொடுத்தலிற் "போனத்தளவே புசிப்பன்றி" யென்றார்.

பேரின்பம் போதநாசத்திற் றோன்றுமதற்றோன்றலா"னறிவார்க்கறியாவின்ப" மென்று மிவ்வின்பம் பெறுதற் கேதுவாயஞானமின்மையா "லேனு" மென்றுங் கூறினார்.

துறவு புறப்பற்று நீங்குத லவா வறுத்த லகப்பற்று நீங்குதலவ்விருவகைப்பற்று நீங்கவே சகலகேவலங்களுநீங்குமிவைநீ

ங்கழிவ மெய்யுணர்வு தோன்றுமாகலிற் "றுறவாயவாவறுத்து மெய்யுணர்ந்ததாய வறிவா,, லென்றார். போலவை மென்பது போலவையென்றாயிற்று.

இத்திருவெண்பாவான் ஞானமின்றி ஞானசாரமாத்திரஞ் செய்வோர்கட்குப் பிறப்பின்பமேயன்றி வீட்டின்ப மிலையெனன் றறிவித்தவாறுகாண்க. (௬)

இந்தவின்ப மியாவரா லறியக்கூடுமென் றிரங்கிக்கேட்ட மாணாக்கனை நோக்கி மேற்கூறுகின்றார்.

இன்பெயறிவுக்கிடம்புள்ளினைர்த்துபோற்......[தாற்
றுன்பயனுப்பொருப்பாய்த்துக்கிக்கு-நன்குணைத்
பேரின்புக்கிச்சைபிறந்தவனிக்கேளுனகுட்..........*
பேரின்பந்தேடிப்பெறாய்..............................*

இன்பெயறிவுக்கிடம்—எ- து - இந்தப்பேரின்பம் பரிபூரணமாகலி னிவ்விண்டமேயான்மா விருத்தற் கிடம் ஆலுலவ்வின் படிங்ஙன மிருகளுமெனி னிதனையா னிப்போதடையவேண்டு மினிப்பிறவித் துன்பஞ் சிறிதும் படமாட்டேனென்ற மாணாக்கனை நோக்கி மேற்கூறுகின்றார்.

புள்ளினைத்ததுபோற்- றுன்பேயனுப்பொருப்பாய்த்துக்கிக்கு- நன்குணைத்தாற்- பேரின்புக்கிச்சைபிறந்ததினிக்கேளுனக்கு-ப்-பேரினபந்தேடிப்பெறாய்—எ- து - உடப்பொலி சிறிது தோன்றினு மதனைப் பேரொலியாகக்கண் டஞ்சப்புள் வருந்தியதுபோ லியித்தேகாதிப் பிரபஞ்சங்களான்வருந் துன்ப மனுவளவாயினு மதனைப் பொருப்பளவாகக்கண்டு துன்புறு நற்குணத்தா லுனக்கிப்போது பேரின்பத்தின்மே லிச்சை செனித்ததாகலி னினி யதனை யடைதற் குபாயஞ் சொல்லுதுங் கேட்டி யப்பேரின்பத்தையாங்கூறியவுபாயப்படிதேடிப்பெறுதி-எ-று

விடயசுகத்தைத் துன்பமெனக் கூறிறுலிதனை யிங்ஙனங் கண்டோர்க்குச் சொரூபசுகத்தின்மே லிச்சை செனிக்குமாகலிற் "றுன்பே யனுப்பொருப்பாய்த் துக்கிக்குநன்குணத்தாற்,, பேரின்புக்கிச்சை பிறந்ததென்றார்.

இத்திருவெண்பாவாற் பேரின்பம் விரும்பிக்கேட்டமாணாக்கனுக்கு விடைகூறியவாறு காண்க. (௭)

பேரின்பமுன்னைப்பிரியாதுன்னுண்மையது..*
மோரின்பமாய்விடயத்தூடுதிப்பும்-பேரின்
பழிவிலேதோன்றுமறிவுமயலா....................*
மொழியுமிரண்டின்பமும் ......................*

பேரின்பமுன்னைப்பிரியாதுன்னுண்மையது—எ-து- அந்தப் பேரின்பமுன்னைவிட்டெக்காலமு மோரணுவளவேனும்பிரியா திருப்ப தவ்வின்பமே யுனக்குரித்தாயமெய்ம்மையா யுள்ளது அங்ஙன மென்னைவிட்டு நீங்காதெனக்குரித்தாயமெய்ம்மையா யிருப்ப தெனக்குத் தோன்றா திருப்பானேனெனின்.

ஓரின்பமாய்விடயத்தூடுதிப்பும்- பேரின்-பழிவிலேதோன்றும்—எ-து உன்னாலறியப்பட்டோ ரின்பமா யனித்தவிடயத்தூடேதோன்றுவது நியாங்கூறிய வந்தப் பேரின்பமு மெதிரீடற்ற விடத்ததே தோன்றும்.

அறிவுமயலா மொழியுமிரண்டின்பமும்—எ-து- ஆணறிவும் பெண்ணறிவு மெதிரிட்டபோ தவ்வறிவுகளு மயலாமறிவு மயலா மென்றவும்மையா லாண்குறியும் பெண்குறியு மெதிரிட்டபோ திக்குறிகளு மயலா மிவைகளயலாகவே யிவ்விருவகைக் கூட்டரவுகளால வரு மிரண்டின்பங்களு மயலா மொழியும்—எ-று.

ஆண்குறியும் பெண்குறியுங் கலந்தெதிரிட்டழிந்தபோது மாணறிவும்பெண்ணறிவுங்கலந் தெதிரிட் டழிந்தபோது மவ்வின்பமு மிவ்வின்பமுந் தோன்றலா “னழிவிலேதோன்று„மென் றிருமைக்கும் பொதுவாகக் கூறினர்.

குறிகளு மறிவுகளு மெதிரிட்டபோ தின்ப மின்மையா லொழியு மிரண்டின்பமு மென்றார்.

இருவகைக்குறிகளுங் கலந்தபோ தவையிருந்துந்தோன்று தழிதலானு மாண்குறி பெண்குறிகளுள்ளீடாயிருத்தலானுமின் பந்தோற்றலானு மவற்றினது கூட்டரவை யிவற்றினது கூட்டரவிற் குவமையாகக் கூறினார்.

“அழிவிலேதோன்று„மென்றமையா னழியா தெதிரிட்ட போதென்பதும் வருவிக்கப்பட்டது - விடயாநந்த மேலிட்டாற் பரவச மாவதுபோற் சொரூபாநந்தமேலிட்டாற் பரவசமா வதுங் கொள்க.

'இத்திருவெண்பாவாற் பேரின்ப மான்மாவை விட்டு நீங்காதென்பது மதனைப் பெறுதற் குபாயமுங்கூறியவாறுகாண்க



விடயா நந்தமறிதல்போ லவ்வாநந்தமுமறியக்கூடாதோ வெனின் மேற்கூறுகின்றார்.

விடயமுதித்துநின்றுவிட்டவிடங்கிழ்மே......*
விடைவிடாதேநிறைந்தவின்பந்- தொடுவரோ
தோன்றியழிவதுவேதுக்கசுகமுன்னுண்மை ..... *
தோன்றுவடங்காச்சுகம் ......................... *

விடயமுதித்துநின்றுவிட்டவிடங்கிழ்மே - விடைவிடாதேநிறைந்தவின்பந்- தொடுவரோ—எ-து- ஓர் விடயத்தின்கட்டோன்றிநின் றழியப்பட்ட வின்பங் கீழாய வின்பம் வெவ்வேறு வகைப்பட்ட பொருள்களினு மிடையறாது பரிபூரணமாய் நிறைந்த வின்ப மேலாய வின்ப மாகலி னிவ்வின்பததைப் பெற்றுள்ளார் தற்போதத்தா லதனைப்பற்றுவரோ வஃதெங்ஙனமெனின்

தோன்றியழிவதுவேதுக்கசுகமுன்னுண்மை- தோன்றுவடங்காச்சுகம்—எ-து- போதத்தாற் பற்றி யறிந் தநுபவிக்கு மவ்வின்பந் தோன்றி யழிவ தங்ஙனந் தோன்றி யழிவதுவே சுகமுந் துன்பமு மாகலினு முன்னுண் மெய்ம்மையா யிருந்த வின்ப மோர்காலங்களினு மூற்பத்தி நாசமின்றுடவிட்டின்பமாகலினும்—எ-று.

அவ்வின்ப மோர்விடயத்திற் றோன்றி யழிதலாற்பற்றி விடப்பட்ட திவ்வின்பம் பூரணமாகலானு முற்பத்திநாசமின்மையானும் பற்றுதல் விடுத லிதற் கின்மை யாயிற்று.

தோன்றியபோது சுகமு மறைந்தபோது துன்பமும் வருதலிற் "றோன்றியழிவதுவேதுக்கசுக,, மென்றார்.

இச்சுகதுன்பங்களால் விழைவு வெகுளியு மிவ்விழைவுவெகுளிகளா லிருவினைகளு மிவ்விருவினைகளாற் பிறப்பு முண்டா

அவ்வின்பம் பற்றியபோது தோன்றும் விடுத்தபோது மறையு மிவ்வின்பம் பற்றியபோது மறையும் விடுத்தபோது தோன்று மென்பதுங் காண்க.

இத்திருவெண்பாவா லிவ்வின்பம்போ லவ்வின்பம் போதத்தா லறியக்கூடாதென் றறிவித்தவாறுகாண்க. (௬)

ஆயினவ்வின்ப மித்தலத்திற் றோன்றுவ திலலையாகலின் மற்றோர்தலத்திற் சென்றிருந்து தவத்தைப்பண்ணி யதனைப்பெறு கின்றேனென்ற மாணாக்கனை நோக்கி மேற்கூறுகின்றார்.

எங்கும்பரிபூரணமென்னிலீதல்ல ... .... .... .... ❋
வங்கங்கா மென்னும்போதங்கிலையோ- பங்காகேள் .❋
ஆகாயந்திண்டிவிடமற்பவறிவழிவி... ... ... ... ... ❋
லேகாண்பேரின்பமுதிக்கும் ... ... ... ... ... .... ❋

எங்கும்பரிபூரணமென்னிலீதல்ல - வங்கங்கா மென்னும் போதங்கிலையோ- பங்காகேள்—எ-து- அப்பேரின்ப மிருநூற் றிருபத்துநாலு புவனமெங்கு முட்புறமாய் நிறைந்துள்ளபரிபூரணமென்று வேதாகமங்கள் கூறுமெனி னவ்வின்பம்பெறுதற் கேது இத்தலமன்று காசிமுதலிய வந்தந்தத் தலங்களிற்பெறலாமென்று நீ கூறும்பொழுது நீ யிருந்த வத்தலத்தி லவ்வின்ப மின்றாயதோ பகுப்பறிவு நீங்காதவனே கேட்டி.

ஆகாயந்திண்டிவிடமற்பவறிவழிவி- லேகாண்பேரின்பமுதிக்கும் —எ-து- பணாயோகமாகிய ஞானாகாசத்தைப் பெற்றவிடத் ததற்குமேற் றோன்று மநுபவததைநாடித் தானின்ற நிலையை வழுவு மற்பவறிவழிந்த விடத்திலே யுனக்குப் பேரின்பந் தோன்றுமென் றறிது—எ-று.

பணாயோக நிட்டைபெற்ற காலை யதற்குமேற் றோன்றுஞ்சிவத்தை நாடா தவ்வருளையு மறவா திருப்பிற்சிவதரிசனந்தானேதோன்று மதுவேதானறவே கிஞ்சிஞ்சியம்பாத மழியு மஃதழியவே பேரின்பந் தோனறுமாகலி "ஆகாசந்திண்டிவிடமற்பவறிவழிவி லேகாண்பேரின்பமுதிக்கு„மென்றார்.

(உதாரணம்) சித்தியார் - வாடாதேகுறைந்திருட்பையாகிற் பிறியாதசிவந்தானே பிறிந்துதோன்றும் பிரபஞ்சபேதமெல்லாந்தானாய்த்தோன்றி நெறியாலேயிவையல்லா மல்லவாகிநின்றென்றுநதோன்றிலைவநிராதாரனு 'ய, என்றுந்,

(திருவாசகம் இறைதேர்கொக் கொத்திரவுபகலேசற்றிருந்து வேசற்றேன்,கலைசேரடியார்களிசிறப்பக் காட்சிகொடுத்துன்னடியேன்பாற், பிறைசேர்பாலினெய்போலப் பேசாதிருந்தாலேசாரோ. என்றுமற்றும் வருவனவற்றாற் காண்க.

இத்திருவெண்பாவாற் பூரணவின்ப முறுதற்குத் தலமிடமின்றென்றும் போதநாசமிடமென் று மறிவித்தவாறுகாணக,

அப்பேரின்ப மடைதற் கிச்சிற்றின்பமாகிய விடயத்தடை யாகலி னிதனையொழித் ததனை யடைவே னென்ற மாணாக்கனை நோக்கி மேற்கூறுகின்றார்-

உடம்புள்ளமட்டும்விடயமொடுங்கா...........*
வொடுங்குகிலோகேவலமாமும்ப-ரிடம்புட்..*
பறந்தாற்கலங்குமோபாசத்தினுண்மை... ... ... *
யறிந்தாற்சுடாத்தடைபோலாம் ............... ..*

உடம்புள்ளமட்டும்விடயமொடுங்கா-வொடுங்குகிலோகேவல மாம்—எ-து- விடயசுகங்க ளநுபவித்தற்கேதுவாய வுடம்பிருக் குமளவு மவ்விடயங்க ளொழியாவுடம்போ டொற்றுமையாயிரு ந்த ஞானேந்திரியங்க ளைந்திற்கு மெதிரீடாய் விடயங்கடோன்று ந்தோறு மவற்றை யொழிப்பேனெனி னங்ஙன மொழிக்கிற் க ருவிகளெல்லா மொழியு மவையொழியிலோ கேவலம்வந் தடுக் கும் ஆயினவற்றை யொழிக்குமா றெவ்வாறெனின்.

உம்ப-ரிடம்புட்-பறந்தாற்கலங்குமோபாசத்தினுண்மை-யறி ந்தாற்சுடாத்தடைபோலாம்—எ-து- ஆகாயத்திலிடமாய்ப் புட் பறந்தா லவ்வாகாய மசையாததுபோ லிம்மாயா வடிவத்தை யானலனென்று நீங்கி யருள்வடிவா யிருத்தியெனி னப்போது விடயங்கள் வந்தடுப்பினு நீ யசையாதிருப்பையாயின் மாயாவ டிவமாயிருந்தபோது வருத்தியவிடயந் திருவருள் வடிவாயிரு ந்தால் வருத்தாதிருப்பதெங்ஙனமெனின் அசுத்தந் துக்கமனித் திய மன்னியமென்று பாசத்தி னுண்மையைத் திருவருளா லறி ந்தனையாயி னக்கினிச்சூட்டைத் தடுக்கு மந்திரம்போ லவ்வறிவு கருவிச்சேட்டையைக் கெடுக்குமாகலி னக்கினியிருந்துஞ்சுடா ததுபோற் கருவிகளிருந்து முன்போல வாதியாதாகும்—எ-று.

தான் கருவிகட் கன்னியமாய்ப் பிறிந்துநின் றருளா லடக் கா தக்கருவிகளோடுங் கூடிநின்று போதத்தா லடக்கினமையா ற் "கேவலமா" மென்றார்.

அருள்வடிவாயிருந்தபோது கருவிக ளசைவதே யன்றித் தானசையா னாகலி "னும்பரிடம் புட்பறந்தாற் கலங்குமோ" வென்றார்.

இத்திருவெண்பாவாற் கருவிகளை யுள்ளபடி யருளா லறிந் து நீங்கி யவ்வருளின் மறைந்துநின் றன் மீட்டு மவைகள் வந்து வாதியாவென் றறிவித்தவா றுகாண்க. (௰௪)

விடயங்களை யிந்திரியங்களா லறிந்தநுபவித்தற்கேதுவாயவி
வ்வுடலை யொழித் திவ்வின்பத்தைப் பெறுவே னென்னின்மேற்

உடலிருந்தென்போ யென்னுருவருவமொன்று... ...*
மடைவர்தொழிலுமறுதி- குடமுடைத்து .. ... ...*
மண்ணென்னவேண்டுமோமாயாவயிந்துவத்து... .... *
முன்னின்றுபார்த்தியிப்போதும் .. ... ... .... ...*

உடலிருந்தென்போ யென்னுருவருவமொன்று-மடைவர்தொ
ழிலுமறுதி—எ-து- இவ்வுடலிருந்ததனாலவ்வின்பம் வருதற்குத்
தடையென்னை யிதுபோய தனாலவ்வின்பம் வருமாறென்னையவ்
வின்பம் வருதற்குத் தடை யிவ்வுடலாலியாது மின்றுருவமு ம
ருவமு மருவுருவமு மாகிய விம்மூன்று வடிவத்தினையு முடை
யசர்வஞ்ஞ ரனாதியிலே யாணவமலத்திற் கிடந்தவுன்னைக் காரு
ணியத்தா லெடுத்துமாயையிற் றநுகரணபுவனபோகங்களை
க்கொடுத்திருவினை யொப்பு மலபரிபாகம் வருவித்துவிடடை
விகளும் பொருட்டுச் செய்யும் பஞ்சகிருத்தியங்களு மறுதியா
கினி யிக்காயத்தை யொழிப்ப லெனக்கருதற்க.

குடமுடைத்து- மண்ணென்ன வேண்டுமோ மாயாவயிந்
துவத்து- முன்னின்று பார்த்தியிப்போதும்—எ-து -ஒருவரு
க்குக்கடத்தை மண்ணென் றறிவிப்பதேயன்றி யக்கடத்தையு
டைத்து மண்ணென்றறிவிக்க வேண்டுமோ வதுபோலுனக்கிவ்
வுடம்பை மலமென் றறிவிப்பதேயன்றியிதனையழித்து மலமென்
றறிவிக்க வேண்டுமோ வாகலினிதனு ளிருந்தே யிவ்வுடம்பையு
மற்றுமுள்ளனவாயகருவிகளையுமாயாமலமென்று முனக்கன்னி
யமென்றுங் கண்டுநீங்கி வயிந்தவ மாயையாகிய சுத்ததத்துவத்
தின் முடிவினின் றுன்னை யருளாற் கண் டவ்வருளி லசைவறவி
ருத்தி யப்போது மவ்வாநந்த முதையமாந் தேகமுடிந்த வப்
போது மவ்வாநந்தமயமே யாவை—எ-று.

பெத்தத் திசையிற் பஞ்சகிருத்தியத்தாற் பஞ்சாவத்தைக
ளையு முண்டாக்கி நடத்தாநின்ற சர்வஞ்ஞ ரிப்போது முத்தித்
திசையினு முனக்குப் பஞ்சாவத்தைகளையு நீக்கித் தமதுதிருவ
டியாநந்தத்தைக் கொடுப்பர் நீயுடலை யொழிக்கவேண்டுவதே
னுக்கென் றறிவித்தற் "கடைவர்தொழிலுமறுதி" யென்றார்.

இப்போது மென்றமைபா னப்போதுமென்பது வருவி க்கப்பட்டது.

இத்திருவெண்பாவா லவ்வின்பம்பெறுதற்குடலொழித்தலேது வன்றிவ்வுடலாதிகளை யெலலாந் தனககன்னிய மெனவருளாற் கண்டு நீங்கி யவ்வருளி னிற்றலேதுவென்றறிவித்தவாறுகாண்க.

---

வேதாந்த முத்தியோ சித்தாந்த முத்தியோ வுண்மையெ ன்ற மாணாக்கனைநோக்கி மேற் கூறுகின்றார்.

> ஆயிற்றரவுங்கட்டையினிற்கள்ளனும்போன்மாயா.. ...*
> மயக்கமற்றவேதாந்தவாழ்வு- முயற்சிகெட்ட........*
> வாநந்தாதீதத்தேயாணவராமாகமமுந் ... ... ... ... *
> தாநந்திஞர்க்குச்சமன்... ... ... ... ... ... ... ...*

கயிற்றரவுங்கட்டையினிற்கள்ளனும்போன்மாயா - மயக் கமற்றவேதாந்த வாழ்வும்—எ-து - உள்ளகயிற்றினிடத்திலாத பாம்பு கற்பிதமாத்தோற்றுதல் போலு முள்ள கட்டையி னிடத் தில்லாத கள்வன் கற்பிதமாத் தோற்றுதல் போலும் உள்ளபிரம த்தி னிடத்தில்லாத மாயை கற்பிதமாத் தோன்றுகிறதென் றறி த் திம்மாயாமயக்கஞ்சிறிதுந் தோன்றாதிறந்தவிடம்வீடென்று கூறும் வேதாந்தச் செல்வமும்.

முயற்சிகெட்ட - வாநந்தாதீதத்தேயாணவராமாகமமுந்- தானந்திஞர்க்குச்சமன்—எ-து- தற்போதமுயற்சி சிறிதுந்தோ ன்றாதிறந்த வாநந்தாதீதத்திற் பெத்தத் நிலையிலாணவராகி யி ருப்பாரைப்போலு மிருப்பதே வீடென்று கூறுமாகமச்செ ல்வமுந் தானென் றெதிரிட்டெழும் புல்லறிவு கெட்டார்க்குச்ச மனும்—எ-று.

அவித்தியா கதமாயிருந்த சீவனது புன்மை யறிவாயிருந் து நானென்றெதிரிடு மவ்வறிவுகெட்டபோ தச்சீவ சாட்சியாயி ருந்த பிரமந் தானுகலானு மாணவ மயமாயிருந்த வான்மாவி னது புன்மை யறிவாயிருந்து நானென் றெதிரிடு மப்போதங் கெட்டபோ தவ்வான்மா தனக்கு முதலாகிய சிவமயமாதலானு மிங்ஙன மாயபோதிருவர்க்கு மாநந்தாநுபவ மிருத்தலானுந் "தாநந்திஞர்க்குச்சம„னென்றார் தாநந்தாதவபர ஞானிகட்கு ச்சமனன் றென்பது தானேயாயிற்று.

வெண்பாவால் வேதாந்த சித்தாந்த முத்தியிரண்டுந் தற்போத மொழிந்தோர்க்குச் சமமெனன் றறிவித்தவாறு காண்க. (௰௫)

என்றனையென்றனையென்றனையேகபிரான் .. ... ✻
டென்றாமற்சும்மாதிருவென்று- சொன்னான்... ...✻
திருஞானசம்பந்தன சீகாழிநாட.... .. .. ... ... ..✻
னருளாளன்ஞானவினோதன் ... ... ... ...... ... ....✻

என்றனையென்றனையென்றனையேகபிரான்- டென்றாமற்சும்மாதிருவென்று-சொன்னான்—எ-து-முக்காலுந்தமதுபேரிற்றிருவாணைகூறி முத்தியில் வேதாந்திகளைப்போ லேகமென்றும் பேதசித்தாந்த வாதிகளைப்போ லிரண்டென்றுங் கூறா திங்ஙனங் கூறுதற்கேதுவாய வுன்போதத்தை யொழித்து நீமவுனந்தமா யிருத்தி யென்றருளிச் செய்தார்.

திருஞானசம்பந்தன்சீகாழிநாட- னருளாளன்ஞானவினோதன்-எ-து திருஞான சம்பந்தப் பிள்ளையாரென்னு நாமதேயத்தையுடையார் சீகாழிநாட்டிற் கதிபதியான வருளாட்சியுடையார்ஞானத்திருவிளையாட்டினையுடையார்—எ-று.

ஒன்றெனிற்பெறுவானும் பெறுமின்றாமாகலினு மிரண்டெனிற்பதமுத்தியேயன்றி யயிக்கியமுத்திகூடாதாகலினும் போதவறிவிலிரண்டாயும்போதவொழிவிலொன்றாயுமிருத்தலினும்என மிரண்டென்னாமற்,, சும்மாதிருவென்றுசொன்னா,,னென்றார்.

இத்திருவெண்பாவான் முத்தி நிச்சய மீதென் றறிவித்தவாறுகாண்க. (௰௪)

ஐந்தாவது - சரியைக்கழற்றி

முற்றிற்று.

ஆக திருவெண்பா - ௱௫௧.









திருச்சிற்றம்பலம்.

## ஆறுவது

# விரத்திவிளக்கம்.



இங்ஙனஞ் சரிதாதிகளை நீத்து நின்றாராயினு முட்டுறவில்லார்க்கு ஞானம்விளங்காதாகலி னிவ்வதிகாரத்தினுட் டுறவிவிளக்கங்கூறி யுட்டுறவி னிலக்கண மறிவித்தாராகலி னிவ்வதிகாரத்திற்கு விரத்திவிளக்கமென்று பெயராயிற்று. விரத்தியெனினுந் துறவியெனினுமொன்று.

அறிந்தவிடத்தின்பதுன்பமாகாதனவு ... ...*
மறந்தவிடத்தின்பமயக்கு - மறிந்த....... ..*
வலியறிவுநீயென்றானத்துவிதாநந்த... ...... ...*
முலையமுதமுண்டமுனி.................. .......... ..*

அறிந்தவிடத்தின்பதுன்பமாகாதனவு- மறந்தவிடத்தின்பமயக்கு-மறிந்த-வலியறிவுநீயென்றான்—எ-று- கருவிகண்முப்பத்தாறையுங்கடந் தருளை யறிந்த விடத்தாண் டின்பமுந் துன்பமுமுண்டாகா தவ்வருளைமறந்தவிடத்து முன் னீங்கிநின்ற கருவிகள்வந்து கூடலானத்துன்பமும் மின்பமு மவந்தீண்டு மயக்குமாகலிற் பதியறிவோடுங்கூடி யின்பதுன்ப மின்றிய வப்பதியறிவாயும் பாசவறிவோடுங்கூடி யின்ப துன்பமாயுநின் றதனையுமிவற்றையு மறிந்த வலியறிவு நீயென்றெனக்கருளிச்செய்தார்

அத்துவிதாநந்த- முலையமுதமுண்டமுனி—எ-று- இரண்டற்றவத்துவிதத்திற் றோன்றும் பேராநந்தமாகிய திருமுலையமுதத்தை யம்மை பொற் கிண்ணத்தோடுங் கொடுப்ப வாங்கியுண்ட திருஞானசம்பந்தப்பிள்ளையார்,—எ-று.

பதியறிவு-ஆணறிவு- பாசவறிவு- பெண்ணறிவு-இவ்விருவகையறிவும்போலன்றிப்பதியறிவோடுங்கூடிப்பதியறிவாயும் பாசவறிவோடுங்கூடிப் பாசவறிவாயுமாண்வடிவும் பெண்வடிவுந் தழுவிநின்ற வலிபோலிருத்தலிற் பசுவறிவை யலியறிவென்றார்

"அம்மை,, யாநந்த வடிவமாகலி னவளது திருமுலைப்பா லையாநந்தவமுத மென்றார்.

அறுவுமென்பதனை யத்துன்பமு மின்பமு மயக்குமெனக் கூட்டுக.

இத்திருவெண்பாவா லான்மாவொன் றுண்டென் றறிவித்தவாறு காண்க. (௧)

அறுசமையத்தோர்க்குமறுதியிட்டகூடம்.....*
றுறவாயவாவறுத்தறூய்மை - பிறவா......*
முடிகளைசமுசத்தி முயற்சியெல்லாமூத்த........*
கடைகருமநாசமிதுகாண் .........................*

அறுசமையத்தோர்க்கு மறுதியிட்டகூடற்-றுறவாயவாவறுத் தறூய்மை—எ-து- அறுவகைச் சமையத்தோர்க்கும் வீடடை தற்கு மட்டிட்டு வைத்தபொது நெறியாமெனிற் கூடற்கட் சங் கப்பலகையி மேலிருந் துப்பற்றுப் புறப்பற்றென்னு மிரு வகைப்பற்றினையுந் துறப்பதாகிய துறவுகளான் மெய்ப்பொரு ளையுணர்வதாய்ப் பிராரத்துவ வாசனையா னேர்காலையி னுள்ள தீமைதரு மவாவினையு மறுத்த றூய்மையாய்க்கூறிய விம்மூவகை யதிகாரங்களி னெறிகளேயாம்.

பிறவா- முடிகளைசமுசத்தி முயற்சியெல்லாமூத்த- கடைகரும நாசமிதுகாண —எ-து- அஃதன்றியும் பிறவாமைக்கேதுகூறிய பலவாற்றுள்ளுஞ் சிரசாப கருவிகண் முப்பத்தாறையும் போக் கப்பட்டவீடுந் தற்போத முயற்சியெல்லா முதிர்ந்த கடையாகி ய கருமநாசமு மிம்மூவகை யதிகாரத்திற் கூறிய நெறியாங்கா ண்—எ-று.

சமையிகளறுவரும் வீடடைதற்கு மட்டு வேறுவேறுகூறி னாராயினு மொருவர் கூறிய தொருவர்க்குச் சம்மதமன்று துற வாய் மெய்யுணர்ந்து அவாவறுத்த லனைவர்க்குஞ் சம்மதமாமா கலின் "அறுசமையத்தோர்க்குமறுதியிட்டகூடற்றுறவா யவா வறுத்த,, லென்றார்.

துறவு மவாவறுத்தலுங் கூறினமையானிடையின் மெய்யு ணர்வு வருவிக்கப்பட்டது.

இங்ஙனஞ் சங்கப்பலகையின் மேலேறிக்கூறிய மூன்றதிகாரங்க ளென்றது-(திருக்குற)ளுட்டுறவாதி மூன்றதிகாரங்களையு மாமென்றறிக.

இம்மூவகை யதிகாரங்களி னெறிகளி னொழுகுத லுயிர்ச்சுத்தி-யிங்ஙன மூயிர்ச்சுத்தி பண்ணுவோர்க டேர்சுத்தி பண்ண வேண்டுவ தின்மையாற் "கூட கருமநாசமிதுகா,, னென்றார்

இத்திருவெண்பாவா னுட்டுறவு புறத்துறவுடையவரைச் சமயிகளெல்லாரும் ஞானிகளென் றங்கீகரிப்பரென் றறிவித்தவாறுகாணக. (உ)



வாசிக்குச்சாவீரர்வைதாற்பொறுத்துபோ.........*
லாசைகேடர்க்கிதுவாமட்டதென-நேசித்த...*
வொட்டையைப்போலவார்க்காமுடப்பாரவுண்டபழகும்..
பெட்டருக்கிதோகாப்பிலை.........................*

வாசிக்குச்சாவீரர்வைதாற்பொறுத்துபோ-லாசைக்கேடர்க்கிதுவாம்—எ-து- வாசியென்றவார்த்தைக்குமனம்பொறுதிறந்துவிடத் துணிந்த வீரரை வைதாலு மனம்பொறுத்துபோற் பெண்ணாசை யாகாதென் றோர்வார்த்தை கூறிய மாத்திரத்தி னவ்வாசை மனத்தின் கண்மீட் டெழா தடக்கு மவ்வாசை நாகர்க்கே யிவ்வதிகாரத்தி னருத்தஞ் சம்மதமா மன்றி.

அட்டதென-நேசித்த- வொட்டையைப்போல் வார்க்காமுடம்பாரவுணபழகும் பெட்டருக்கிதோகாப்பிழை—எ- து - அறுசுவையடிசில்போல் வேப்பந்தழையாதி கைப்பினை யிச்சித்த வொட்டகத்தைப்போற் காடி கூழ் களி முதலியவற்றைச்சுவையாய் விரும்புவோர்க்குஞ் சம்மதமா முடல் பருக்கும்படிய றுசுவை யடிசில்களை நன்றாதிதென்று பருத்தூணபழகும் பேடிகளுக்குங் காமிகளுக்கு மிதனருத்தஞ் சம்மதமாகாதி குற்றமாம்—எ-று.

மற்றநூலின்கண் ணோரிடத்துப்பெண்ணாசை யாகாதென்றுகூறக்கண் டதனை விரித்தோர்க்கே யவ்வாசை யுடையோரை மிகவுமிகழ்ந்துகூறு மிதனருத்தஞ் சம்மதமா மாகலின் "வாசிக்குச்சாவீரர்வைதாற்பொறுத்துபோலாசைக்கேடர்க்கிதுவா,, மென்றார்.

அருந்தலாசை வைத்துக் கூறினமையா லாசைக்கேடர்க்
கென்றதைப் பொருந்த லாசையாகக் கொள்க.

இத்திருவெண்பாவா லருந்தல் பொருந்தல்களி லாசையற்
றோர்க்கே யிந்நூலாமென் றறிவித்தவாறு காண்க. (௫)

நீரிங்ஙனங் கூறியவாற்றா லாசையறுதலோ முத்தியெனின்
மேற்கூறுகின்றார்.

பாசங்கழன்றற்பசுவுக்கிடம்பதியா.........*
மூசல்வடங்கழன்றதொவ்வாதோ - நேசித்த*
பற்றற்றகண்ணேபிறப்பறுக்கும்பாட்டுமக்கோ...*
மற்றச்சமையமெங்குமாம்.........................*

பாசங்கழன்றற்பசுவுக்கிடம்பதியா-மூசல்வடங்கழன்றதொ
வ்வாதோ---எ-து- உயிர்ச்சார்வு பொருட்சார் வாகிய விருவகை
ச்சார்வு மிசைசார்வுகளை நீங்கியபோது மிவற்றின்மே லெழாநி
ன்றவவாவு மிவ்வவா நீங்கியபோதுங் கண்ட பொருள் கண்மேற்
சென்று பற்று மிந்திரியங்களு மிவ்விந்திரியங்க ளடங்கியபோதுமு
ன்னேறியிருந்த வாசனையா லுள்ளெழு மனநினைவுகளு மிவை
முதலிய பாசங்க ளெல்லாங் கழன்றபோ திவற்றினின்ற பசுவுக்
குப்பதியேயிடமா மஃதெங்ஙனமெனி னந்தரமாநின்றவூசற்க
யிற்றிலிருந்தோனுக் கவ்வூசற்கயி றற்றபோது நிலமிடமாமது
போ லஃதொவ்வாதோ வதனைநீயறிதி யஃதன்றி.

நேசித்த-பற்றற்றகண்ணேபிறப்பறுக்கும்பாட்டுமக்கோ-ம
ற்றச்சமையமெங்குமாம்---எ-து- தம்மா லிச்சிக்கப்பட்டபற்று
க்களெல்லா மற்றபோதே யப்பற்றறுதி பிறப்பினை யறுக்குமெ
ன்று (திருவள்ளுவநாயனார்) கூறிய குறள் வெண்பாப்பாட்டும
க்குமாத்திரமோ சம்மதம் மற்றைய சமையங்களுக் கெல்லாஞ் ச
ம்மதமாம்---எ-று.

ஊசலிருந்தபோது மொழிந்தபோது மதனு ளிருந்தோ
னுக் கசைவு மசை வின்மையு முண்டானதுபோற் பாச மிருந்த
போது மொழிந்தபோது மசைவு மசைவின்மையு மான்மாவிற்
குண்டாமென்பதுங்காண்க.

இத்திருவெண்பாவா லான்மாவிற்குப் பாச முழுதும் நீங்
கிற்பதியைத் தேடவேண்டுவ தின்றென் றறிவித்தவாறு காண்க.

உனக்குமெய்யாய்த்தோன்றியொழித்துவிடும்பாசம்*
வினைச்சடமேயென்னில்விடப்பேர் - றுனைச்சுழற்று*
மாறுந்தன்னையறியாததுன்னறிவு.................*
தானுறுஞானத்தடை ..................................*

உனக்குமெய்யாய்த்தோன்றி யொழித்துவிடும்பாசம் - வி
னைச்சடமேயென்னிலவிடம்போ - றுனைச்சுழற்று - மாறும—
எ-று- உனக்குத் தோன்றும்போ தியல்லென மெதன்று கருதும்
படி மெய்யாகததோன்றி நீங்கும்போ துன்னைப் புறம்பாமயொ
ழித்து நீங்கிவிடுந் தேகபோகங்களாகிய பாசம் வினைக்கீடாய்வ
ரு மாயாகாரியமாகிய சடமென்றறிவிப்பினும் நீயிங்ஙனமறியா
மையானின்னைவிடம் புசித்தவனைமயக்குதல்போனமயக்கு மெ
னினுமப்பாசம்ஞானத்தடையன்றினிஞானத்தடையாவதியாதெ
னின்.

தன்னையறியாததுன்னறிவு - தானுறுஞானத்தடை—எ-று-
தனுவாதிகளையெல்லா மிதுவிதுவென்று நானாவாய்ப் பகுத்தறி
ந்து மவற்றையறிந்த தன்னை யறியாததனது புல்லறிவாகலி னி
வ்வறிவே ஞானத்திற்குத் தடையாகும்—எ-று.

ஆணவத்தான் மறைபட்டிருந்த வான்மாவிற்குச் சிவன்மா
யையிற் றனுகரண புவனபோகங்களைக்கொடுத் திச்சாஞானக்கி
ரியைகளை விளக்குவித்தலானு மித்தனுவாதிகளாற் சுருதிகுரு சு
வானுபூதிகளை யறிந்து விடுதற் கேதுவாகலானு மிவற்றை
ச்சடமென்றுந் தனக்கன்னியமென்று மறிந்தபோது மயக்கா
மையானு முனைச்சுழற்றுமாறு மிவை ஞானத்தடை யலவெ
ன்றுந் தானென்றுந் தனதென்றுந் தன்றா லறியப்பட்ட தேக
போகங்களைத் தானுந் தனதுமலவென் றவற்றைத் தனக் கன்
னியமாக் கண்டு தன்னையுள்ளபடி யறியமாட்டா ததனதறிவே
ஞானத்தடையாகலி னுன்னறிவு "தானுறுஞானத்தடை" யென்
றுங் கூறினார்.

தனுவாதிநான்கினுட் டனுவோடு கரணமும் போகத்தோ
டு புவனமுமொற்றுமையா யிருத்தலிற்றேகபோகமென் றிரண்
டாகக் கூறப்பட்டது.

இத்திருவெண்பாவாற் றனுவாதிகளைத் தனக்கன்னியமாக்

காண்ம் திருவருடோற்றமென் றறிவித்த வாறுகாண்க. (௫)



ஆன்மாவிற் கிவையுருவ மன்றாயி னிவற்றின் மயமாயிருப் பதெனனை யெனின் மேற்கூறுகின்றார்.

சிற்றறிவனாய்மறைப்பைச்சேர்ந்தவடிவொண்படிகம்.. *
பற்றுகினு மொன்றாகாப்பான்மைபோ- லுற்ற...... *
வுருவசொரூபசுபாவமுனக்கு... ... ... ... ... ..... *
வருமடைவுசொன்னேமதி... ... ... ... ... ..... .. *

சிற்றறிவனாய்மறைப்பைச்சேர்ந்தவடிவொண்படிகம்- பற்றுகி னு மொன்றாகாப்பான்மைபோல்—எ-து- கிஞ்சிக்க வறிவனாய்ச் செம்பிற்களிம்புபோன்ற வாணவமறைப்பைச் சேர்ந்தவடிவான் மாவினது சுபாவம் படிக மடுத்த வன்னமயமா யிருப்பினுந் த ன்னிற மந்நிறத்தோ டொன்றாகாத முறைமைபோலத் தானடு த்த கருவி மயமா யிருப்பினுந் தன்னறிவக் கருவியறிவோடொ ன்றாகா திருப்பதான் மாவின தருவம் படிகம்பற்றகினுமொ ன்றாகா வென்வேயொன்றையும் பற்றாதிருந்தபடிகநிருமலமா யிருத்தல்போ லான்மா மும்மலங்களையும் நீங்கி நிற்றல் தனது சொரூபம்.

உற்ற- வுருவசொரூபசுபாவமுனக்கு - வருமடைவுசொன் னேமதி—எ-து- இங்ஙன முனக்குற்ற சுபாவ வுருவ சொரூபங் கள் வருமுறைமையைச் சொன்னே மிவற்றை நீயறிந்து கொள்ளு தி.—எ-று.

ஆணவஞ்சககசமலமாகவி னதனைச்சேர்ந்தவடிவுசுபாவமெ ன்றும் படிகத்திற்குச் சிவப்பு வன்னமுதலிய செயற்கையாய் வந்ததுபோ லான்மாவிற்குக் கருவிகள் செயற்கை யாய்வந்து பொருந்தலி னிதனை யுருவமென்றும் படிகம்வன்னங்களை நீங்கி யபோதுதனதுசுபசொரூபத்தோ டிருத்தல்போலான்மாகருவி களையெல்லாம் நீங்கியபோதுதனது சுப சொரூபத்தோ டிருத் தலி னிதனைச் சொரூப மென்றுங் கூறப்பட்டது

இத்திருவெண்பாவா லான்மாவின துருவசொரூப சுபாவ மறிவித்த வாறுகாண்க. (சா)

நினைப்புமறப்பற்றுநிறைந்தவறிவா... ... ... ... *
யனைத்துடனுநின்றம்பரமாய்த்- தனக்கருளித் .. ..*
*
யன்னுனுக்கின்னவைமூன்றாம்... ... ... ... ... ... *

நினைப்புமறப்பற்றுநிறைந்தவறிவா - யனைத்துடனுநின் றம்பரமாய்த்-தனக்கருளி—எ-து-நினைப்புமறப்பாகிய சகலகே வலங்களை யறுதியிலே நீங்கியெங்கும் பரிபூரணவறிவாயெல்லா வற்றோடுங் கூடி நின்று மாகாயம்போலொன்றோடுந் தாக்கற்றி ருப்பதா யான்மாவிற் கருள்செய்து மும்மலங்களையும் நீக்கி.

தன்னாநந்தத்தைத் தனக்களித்தசர்க்கரையே -யன்னுனுக்கின் னவைமூன்றாம்—எ-து-தனதுபேராநந்தத்தையவ்வான்மாத னக்குக் கொடுத்தருளிச் செய்த நாவிற்கு சர்க்கரையே யன் னசிவனுக்கு மின்னவுருவ சொரூப சுபாவமூன்று முண்டாம். —எ-று.

“நினைப்புமறப்பற்றுநிறைந்தவறிவா„ வெனவேசிவனது சுபாவ மறுதியிலே நின்மலமா யிருத்தலெனவு “மனைத்துடனு நின்றம்பரமா„ வெனவே யிங்ஙனமிருப்ப தருளாகலி னவ னதுருவ மிச்சா ஞானக்கிரியைகளெனவுந் “தன்னாநந்தத்தை த்தனக்களித்த„ வெனவே யாநந்தமவனது சொரூப மெனவுங் காண்க.

இத்திரு வெண்பாவாற் சிவனதுருவசொரூப சுபாவ மறி ராறுகாண்க. (௭)

—•••••—

அறிந்துபற்றிநின்றழுந்துமற்பவறிவை... ... .... *
யறிந்துசுத்தியேபோறிவாய்- நிறைந்துசிவந் ... *
தோயாமனின்றதுபோற்றோற்றமுதலைந்துடனுந்... ...*
தோயாமற்சுத்தத்துறவு... ... ... .... .... ... .... *

ரபற்றுநின்றழுதுமற்பவறிவை- யறிந்துசுத்தியே போறிவாய்—எ-து- பஞ்சவிடயங்களையும் ஞானேந்திரியங்களா லறிந்து கன்மேந்திரியங்களாற் பற்றி யந்தக்கரணங்களா லவற் றுளழுந்துங்கிஞ்சிக்கபோதத்தையான்மாவின தியற்குணமன் றென்று மதுபானங் கொண்டோனுக் குலகிரி தோன்றியது

போ லவ்விருவகை யிந்திரியங்களையுங் கரணங்களையுங் கூடியவி டத்துத்தோன்றிய விடயபோத மீதென் றறிந் தவ்விந்திரியங் கர ணங்களோடு மப்போதத்தை நீத்துத் தன்னை யுள்ளபடி யறிந்த ங்ஙனந் தன்னை யறிந்தபோது தலைக் கிந்திரிய கரணங்களையும் வேருக்கித் தன்னையு மறிவித்த தருளெனக் கண்டவ்வருளே வ டிவாகி யிருந்துதான் மலமுமாகாமற் சிவமுமாகாமற் சிவானு போகத்தி லிரண்டற வழுந்தி நிற்ப தான்மசுத்தி யிந்தவான்மசு த்தியே சிவத்தில் வியாபகமாகிய பேரறிவாகலினிப்பேரறிவாகி.

நிறைந்துசிவந்- தோயாமனின்றதுபோற் றேற்ற முதலைந் தொடனுந்- தோயாமற்சுத்தத்துறவு—எ-து-தனக்கு வியாத்திய யிருந்தசிவமெல்லாவற்றேம் பூரணமாய்நிறைந்திருந்து மொ ன்றேடுந் தோய்வற்றுநின்றாற்போலச் சிருட்டியாதி லயந்தொ ழில்களோடுந் தோயாம னிற்பதே பரிசுத்தமான துறவு.—எ-று.

இச்சா ஞானக் கிரியைகள் சிவதத்துவங்களைச் செலுத்தச் சிவதத்துவங் கலாதிகளைச் செலுத்தக் கலாதிக ளான்மாவினிச் சா ஞானக்கிரியைகளை யெழுப்ப வான்மாவினிச்சை யந்தக்கர ணங்களி னிடத்தும் ஞானம் ஞானேந்திரியங்க ளிடத்துங் கிரி யை கன்மேந்திரியங்களிடத்துநின்று விடயங்களையறிந்து பற்றி யழுந்துமாகலி னிவ்விருவகை யிந்திரியங்களுங் கரணங்களும் நீ ங்கவே ஆன்மாவினிச்சா ஞானக்கிரியை நீங்குமிவை நீங்கவே கலாதிகணீங்கும் இவை நீங்கவேசிவதத்துவ நீங்கும்இவை நீங்கவே தன்னையறியப்படுமாகலி "னறிந்துபற்றி நின்றழுந்து மற்பவறி வையறிந்,, தென்ருர்.

அவனவளது மூன்னிலையாயி தாகிதங்கள் வருதலையுமவற் றைத்தான்பெறுதலையுந் திருவருட்கண்ணாற்பார்த்தழித்துப் பே ய்ப்பிடியுண்டவனைப்போற் சிவத்தன்மலமறந்து நின்றமையாற்ரு ன்மலமுமாகாமலென்று மங்ஙனநின் றழியாத வாநந்-போகம் பெறுதலாற்ருன் சிவமுமாகாமலென்றுங் கூறப்படு மிங்ஙனமி ருப்ப தான்மசுத்தியாகலிற் "சுத்தி,,யென்ருர்.

ஒன்றையும் பகுத்துக்காணுது வியாத்தியாய் நின்ற சூரியு ஞெளியில் வியாபகமாகிய கண்ணொளியு மொன்றையும் பகுத் துக்காணுது நிற்பதுபோலொன்றையும் பகுத்தறியாது நின்ற சிவவியாத்தியில் வியாபகமாகிய வான்மாவும் பஞ்சகிருத்தியங்க ளால்விளங்கும் பிரபஞ்சங்களொன்றையும் பகுத்தறியாது நிற்

கவேண்டுமாகலின் "சிவந்தோயாமனின்றதுபோற்றோற்ற முத லந்துடனுற்றோயாமற்சுத்தத்துற" வென்றார்.

பஞ்சகிருத்தியங்களாவன வோரிந்திரியத்திற் பிரவேசித்தல் சிருட்டி யவ்விந்திரியத்தினின்றோர் விடயத்தைப் பற்றுதறிதி நிற்பவிடயத் திரண்டற வழுந்துதல் சங்கார மதிலிதம் பிறத்தறி வோரா பாவமதனைத்தெளிந்து கோட லநுக்கிரகமிங்ஙனமோரிந் திரியத்திற் பஞ்ச கிருத்தியங்களும் வரலாலைந் திந்திரியங்களினுந் தோயாமனிற்பதே யைந்தொழிலினுந் தோயாம னிற்பதென வறிக.

அறிந்துபற்றி நின்றழுந்துதலை விடயபோத மென்றறித லான்மரூபக மவற்றை நீங்கித் தன்னையருளாற்கண்ட விடமான் மதரிசனந் தான்மலமு மாகாமற் சிவமுமாகாமற் சிவதோடி ரண்டறக்கலந்து நிற்பதான்ம சுத்தியெனக்கொள்க.

இத்திருவெண்பாவாற் பரிசுத்தமாகிய துறவிதுவென் றறி வித்தவாறுகாண்க. (௮)

ஞானிகளிங்ஙனம் பிரபஞ்சத்திற் றோயாமனிற்பரோவெ னின்மேற்கூறுகின்றார்.



**கூரிருளின்மின்மினியின்கூட்டம்போல்வாழ்சகத்தை.**
யாரறிவாரந்தவறிவுதயஞ்-சூரியன்கா.............*
னுன்னிமலைக்கெடுத்தவுச்சியிலேலூனமறச்... ....... ...*
சொன்னாரவத்தைகளைந்தும்......... ......... .........*

கூரிருளின் மின்மினியின் கூட்டம்போல் வாழ்சகத்தை- யாரறிவாரந்த வறிவுதயஞ் - சூரியன்கான் —எ-து-மழைக்கால த்தணையிருளின் மின்மினிப்புழுக்கூட்டம் போன்றணவாந்தகா ரத்திலான்மாக்கள் கிஞ்சிக்க போதத்தோடுங் கூடிப் பொய் மையாய் வாழாநின்ற விப்பிரபஞ்சத்தை ஞானிகளாயினறியா வாறிவார் அவர்சகத்தோடுங் கூடியிருக்கச் சிதேயும் தனையறி யாமொன்று நீர்கூறியதென்னை யெனினவர்க்கந்த ஞானோதயஞ் சூரியோதயம் போற்றோற்று மாகலினச்சகத்தை யறியார் ஆ யினிந்த ஞானத்தையடியேன் பெறுமாறெங்ஙன மெனின்.

உன்னிமலைக்கெடுத்த வுச்சியிலேலூனமறச்-சொன்னாவத் தைகளைந்தும்—எ - து - காலையினுமாலையினு நீருமூனத்தி

லைக்கெடுத்த வுச்சிகாலத்தைப்போற் சகல கேவலங்களிற் செல்லுமுன்போத மடங்கியவிடத் துனதாணவக் குற்றமறவும் ஞானசஞ்சலமும் வரவுமேதுவாகச் சுத்தாவத்தைகளைந்தினையுஞ் சொன்னார் பெரியாரலற்றை யாஞ்சொல்லக்கேட்டு நீயறிதியென றவாறு.

இருளைப்போலாணவ மின்மினிபோற்கருவிப்போதத்தோடுங் கூடியவான்மாக்கள் மின்மினிமின்னிய வாறேதோன்றுது மறைந்து மறைந்து மின்னல்போ லான்மாக்களினது மறப்புநினைப்புகளாகலிற் "கூரிருளின்மின் மினியின்கூட்டம்போல்வாழ்சக" யென்றார்

சூரியோதயத்திற் பூதவிருளு மின் மினியொளியுந் தோற்றாததும்போல் ஞானோதயத்தி லாணவவிருளுங் கருவிப்போதமுந் தோற்றாதாகலின் "னறிவுதயஞ்சூரியன்கா" வென்றார்.

இந்தியங்கள்பத்தும் பஞ்சபூதங்களிடமாய் நின்றுவிடயங்களை நேரேயபகரித்து விசற்சிக்கப் பொருந்தியபோத மிறக்கவிருந்தவிட நின்மலசாக்கிரமவ் விந்தியங்களிடமாய் விடயங்களைப் பகுத்தறிபப்பட்ட வான்மாவினிச்சா ஞானக்கிரியைகளுக் கிடமாகிய மனம்புத்தியாங்காரங்களின் வியாத்தி யறுமிட நின்மலசொற்பன மான்மாவை தன்னியத்திற்கதிட்டானமான சித்தவி கற்பமொடுங்கின விடநின்மல சுழுத்தியச்சை தன்னியவாகன மானபிராணவாயுநீங்கின விடநின்மலதுரிய மூசல்வடமற்ற போததற்த வீழ்ந்தவிட மாதாரமாறுற்போ லிங்ஙனங் கருவிப்போத மெல்லாங் கழிந்தவிடத்தான்மாவருளா தாரமாய்நின்ற சுத்தாவத்தை நின்மலாதீதமிக்கருவிப் போதங்கழன்ற சுத்தாவத்தையிற் சுடர்காட்டக்கண்ட கண்போலருளாற் றன்னையறிவது நின்மலசாக்கிர மிங்ஙனந்தன்னை யறிந்தவிடத் துத்தனக்கொருசேட்டையற் றந்தவருளை தனக்காதாரமா யவ்வருளிற் றனைசைவறநின்ற விடமவ்வருட்டரி சனமிங்ஙன மிவ்வருளைத்தரிசிப்பது நின்மலசொற்பன மிச்சாஞானக் கிரியைதோன்றுது நின்றவிடம்பராயந்தப்பனாயினது நின்மலமெல்லாந் தனதிச்சாஞானக்கிரியை தோன்றுதுதனதாகி யெதிரிடுசிறிது மின்றியிப்பனாயே தானுகியிருந்தவிட நின்மலசுழுத்திதா னிப்பனாயாகிய விடத்துக்கதிரொளி நேரேநின்றகண்ணைக்கதிரிடத்ததிதப்படுத்தறுவாயிலிகக்கண் ணுக்கதக்கதிரினது வட்டப்பளபளப்புமாத்திரந்தோற்றுவதுபோற்பனானை நீங்கியாநந்த சத்திநேரே

நின்றுதான்சிவத்திலதீதப்படுந்தறுவாயிலாநந்தாநுபவம்பெறுவது நின்மலதுரிய மக்கதிரினது வட்டப்பளபளப் பாகியசோபையைக் கண்டகண்ணைக் கதிராகாதிருக் கச்சிதேயுந்தன் பார்வையுமிழந்து தன்றாற்காணப் பட்டமுதலையு மிழந்தக்கதிர் தானாய்மிகவு மதீதப்பட்டாற்போ லவ்வணமானந் தாநுபவம்பெற்ற வான்மாவுந் தவாநந்தமாகாதிருக்கச்சிதேயு மவ்வாநந்தாநுபவத்தை யறிந்ததானு மின்றியாநந்தமாய் நின்றமுதலுமின்றி யுவ்வாநந்தமே தானா யதீதப்பட்ட விடநின்மலாதீத முன்சொன்னவைந்துங் கருவிகண் மூப்பத் தாநுநீங்குதற்கேதுபின்சொன்னவைந்துந்தற்போதங் கெட்டுச்சிவத்தி லதீதப்படுதற்கேது "சொன்ன வவத்தைகளைந்து," மென்றதினை யெனக்கொள்க.

"உச்சிமேல்சொன்ன வவத்தைகளைந்து," மென்றமையானவ் வுச்சிமேநர்படுதற் கேதுவாகிய வவத்தைகளைந்தினையுஞ் சொல்லப்பட்டது.

இருளைப்போற்கேவல முடுக்களைப்போற்சகலமுமுடிவின்றி யிருளைமாத்திரங்காணுங்கண் போலவுமிருளிடத்துடுவாற்காணுங்கண் போலவுங்கேவல சகலங்களையறியு மான்மாசூரியவுதயத்திலிருளு முடுவுமின்றிச் சூரியப்பிரகாச மாத்திரங்கண்ட கண் போலருட்டோற்றியகாலத்துமுன் றோன்றியகேவல விருளுங்கருவிக கூட்டங்களுந் தோன்று தவ்வருளை மாத்திரங் கண்டுகொண்டிருப்ப தருட் டரிசனஞ் சூரியப் பிரகாசத்தைக்கண்ட கண் புடைபெயர்ந்து நோக்காதச்சூரியப் பிரகாசத்திலேயே பாவமாய் நிற்பதுபோலருளென்றுந் தானென்றுஞ் சிறிதுந் தோன்று தவ்வருளேதானாய் நிற்பது பலா தரிசனம்.

சூரியப்பிரகாசத்தை விட்டுச் சூரியனது வட்டப் பளபளப்பைப்பார்த்தகண்போ லான்மாவருளை நீங்கி யாநந்தம்போகம்பொருந்தல சூரியனது வட்டப் பளபளப்பைப் பார்த்தகண்டன் பார்வையுமிழந் தப்பளபளப்பாகிய காட்சியையு மிழந்தச் சூரியனுள ளதீதப்பட்டதுபோலாநந்தயோகத்தைப்பெற்றவான்மாவதனைப் பெற்றதானென்பது மவ்வாநந்த மென்பது மின்றி யவ்வாநந்தந்தானா யதனு ளதீதப்படுவதீண் டிருவகையாய்க்கூறியவவத்தைகட் குவமையிதனானுங்காண்க.

இத்திருவெண்பாவால் ஞானிக ளுலகத்தையறியாவொன்றும்- ஞானம் நின்மலாவத்தையி னின்றுற் பெறலாமென்று மறிவித்த வாறு காண்க. (௧)

அந்த ஞானத்தைநீர் கூறிய நின்மலாவத்தையினின்று பெறுவதேயன்றித் துறவின்கண்ணின்று தவத்தைப்பண்ணிப் பெறக்கூடாதோவெனின் மேற்கூறுகின்றார்.

மெய்யாகத்தோன்றிவிடும்பொய்யைவிசாரிக்கிற்...*
பொய்யாய்ச்சுவர்ப்பாம்பாய்ப்போமன்றி-யையா
தொழிலைச்செயிற்றாணுச்சோரனைப்போற்றோன்றிக்...*
கழலப்பறையறைதல்காண்.......................*

மெய்யாகத்தோன்றிவிடும் பொய்யைவிசாரிக்கிற்- பொய்யாய்ச்சுவர்ப்பாம்பாய்ப்போமன்றி - யையா - தொழிலைச்செயில்—எ-து - விசாரியாதபடியினாலே மெய்யாகத் தோன்றும்- பொய்யாகிய கருவிக்கூட்டங்களது தன்மையை நின்மலாவத்தையினின்று விசாரித்தறியிற் சுவரிலெழுதிய பாம்பு போலாய்ப் பொய்யாய்த்தோன்றுமஃதன்றியவற்றை யங்ஙனம் விசாரித்தறிந்து நீக்காது வைத்துக்கொண்டவை போம்படிக்கு மாணாக்கனே நீதவத்தொழில்களைச் செய்தியெனினதுதான்.

றாணுச்சோரனைப்போற்றோன்றிக்-கழலப்பறையறைதல் காண்—எ-து- சடமாகிய கட்டையைத் தீபத்தாற் பாராதபடியினாற் கள்வனைப்போற் றோன்றக்கண்டு வெருண்டகள்வனீங்கும்படிக்குப் பறைபறைதலேயொக்குமென்றவாறு.

சுவரிலெழுதிய பாம்பிற்குத் தோற்றரவு மாத்திரமேயன்றிச் சேட்டையின்றாயதுபோற் கருவிகளை யெதிரிட்டறிந்தபோது பிரபஞ்சத் தோற்றரவு மாத்திரமேயன்றி முனைபோற் சேட்டியாதாகலினங்ஙனமுவமைகூறினார். நின்மலாவத்தையினின்றருட் கண்ணாலெதிரிட்டுப் பார்க்கும்போது சடமாய் நீங்குங் கருவிகளை மெய்யாகக் கருதிக்கொண் டவைநீங்கும் படிக்குத் தவத்தொழிலைச் செய்யத் தொடங்கினமையா லிங்ஙன முவமைகூறினார்.

இத்திருவெண்பாவாற்- கருவிகளினதுண்மையைக் காணினெல்லாம் பொய்யாய்விட்டுஞானந்தோன்றுமன்றித்தவத்தினங்ஙனம்விடுதலுஞானந் தோற்றலுமின்றென்றறிவித்தவாறுகாண்க.

---

கருவிகளதுண்மையை யறிந்தா லெல்லாம் பொய்யாய்ப் போமென்றீரப் பிரபஞ்சமுந் தேகமும் பரிச்சேதமின்றாய்ப் போமோ வெனின் மேற்கூறுகின்றார்.

பொய்யென்றவார்த்தையுணாயற்றுமெய்யானுன் - மெய்யென்பதுந்தடம்வரைமோ —எ-து - கருவிகளெல்லாம் பொய்யென்று நீசொன்ன வார்த்தை போற்குற்ற மற்றுணர்தறிவிற்கவை பொய்யென்ப துண்மையாய்த்தோற்று மெனின மெய்யாகிய ஞானமென்பது வேறு தேட வேண்டுமோ வவத்தையைப் பொய்யாய்த் தோற்றுவித்தது தானே ஞானமன்றோவா யினிங்ஙனந் தோற்றுவித்த ஞானத்தை யானகண்டு கொண்டிருக்க வேண்டாமோ வெனின்.

கைப்பிருளைத்- தீர்த்தவெயிலைத்திரும்பிபசைத்திமைத்துப் பார்க்கிலெனசந்தைபம் வைப்பாய் —எ-து- மயக்கமாகிய விருளையிருளைத் தீர்த்த ஞானப் பிரகாசத்தையுன் போதத்தாலே திரிட்டகசத்துப் பார்த்து மங்ஙனம்பாரா தொழிந்து மந்த ஞானப் பிரகாசத்தை யிகழ்ந்தாமோ வன்றோவென்று நியைச் சினையை யுறுகின்ற வங்ஙனமையுற்ற ததனு ளைசவற நிற்றி —எ-து.

சூரியப் பிரகாசத்தா லிருளினீங்கி யப்பிரகாசத்தைக்கண்டகண்ணவீதப் பிரகாசமோவன்றோ வென்ற தன்மேலே யுறுதல் வெளியிலே போவதாய் நிற்பதுபோ லருளிலசைவற நிற்கவேண்டுமாகலின ங்ஙன முவமை கூறினார்.

இத்திருவெண்பாவாற் கருவிகளனைத்தும் பொய்யாக வுள்ளபடி யறிதலே ஞானமென் றறிவித்தவாறு காண்க. (௰௨)



தேகாதிப் பிரபஞ்ச மெல்லாம் பொய்யென்றும் பிறவி துன்ப மீதாகாதென்றும் ஞானிகளு ஞானிகளெல்லாருங் கூறுகின்றா ரிவருண் ஞானிகளை யறிவதெங்ஙன மெனின் மேற்கூறுகின்றார்.

வேண்டாம்பிறப்பென்றவார்த்தையினின்மெய்விடயந் ..*
தீண்டாததிலேதெரியாதே- காண்டு .. ... ... ...*
குடம்புமிகைபொன்றிலாமையேநோன்பென்... ... ... ...*
றடங்கவடங்கினரோ... ... ... ... ... ... ... ... ... ... *

வேண்டாம்பிறப்பென்றவார்த்தையினில் —எ-து - பிரபஞ்சம் பொய்யென்றும் பிறவியாகாதென்றும் மெய்ஞ்ஞானிகளும் பொய்ஞ்ஞானிகளுங் கூறிய வார்த்தையினலவர்களைப் பிரித்துக் காணக்கூடா தாயினும்.

௱௫அ    விரத்திவிளக்கம்.

உடம்புமிகைபொன்றி லாமையேநோன்பென்-றடங்கவ டங்கினை-மெய்விடயந்- தீண்டாததிலேதெரியாதோ-காண்பீ ர்—எ-து-உடம்பைச் சத்துருவென்று மோர்விடயங்களினும் ப ற்றிலாமையே நோன்பென்றுமறிந்தத்தேகபோகங்களையானெ னதென்று கருதும் புறத்து நின்றபோத மடங்கவுண் ணின்ற போதமடக்கிய மெய்ஞ்ஞானிகளை யவர துடம்புவிடயங்களைப் பற்றாததனாற் றெரியுமாகலி னிக்குறிப்பாற் கண்டு கொள்வீர் —எ-று.

மெய்யாற்காண்டீ ரென்றமையால் வார்த்தையிலே காண க்கூடாதாயினு மென்பது வருவிக்கப்பட்டது.

மெய்யோடிந்திரியங்க ளொற்றுமையா யிருத்தலின் "மெ ய்விடயந்தீண்டாதென்,, றுகு பெயராகக் கூறினர்.

என்று என்பதனை- யுடம்புமிகை- யென்றதனோடுங் கூட்டுக.

இத்திருவெண்பாவால் வாசகஞானிகளையும் அநுபவஞானிக ளையு மறிதற்கேது கூறியவாறு காண்க. (௰௬)

ஆறுவது- விரத்திவிளக்கம்

முற்றிற்று.

ஆ-திருவெண்பா - ௱௩௪.

→.*.←

திருச்சிற்றம்பலம்.





உ

திருச்சிற்றம்பலம்.

ஏழாவது



# துறவு.

எத்தனை யுட்டுறவுடையா ராயினும் புறப்பற்றோ டிருப் பினிப் பற்றோரார் காலையறிவை மயக்கு மாகலிற் புறத் துற வும் வேண்டுமென் றிதனுட் புறத்துற விலக்கணங் கூறினாராகலி னிவ்வதிகாரத்திற்குத் துறவென்று பெயராயிற்று.

தேடப்படும்பொருளைச்சிக்கனவாகப்புதைத்துக் ...*
கோடிக்கொருநிமிடங்கொள்ளுகினுங் - கூடாத..*
வாணாளைவீண்கழிக்குமானிடரைப்போன்மயக்கம் .....*
பூணார்பொய்கண்டுதுறப்போர்... .. ... ... ... ... *

தேடப்படும்பொருளைச்சிக்கனவாகப்புதைத்துக்-கோடிக் கொருநிமிடங்கொள்ளுகினுங்- கூடாத-வாணாளைவீண்கழிக்கும் —எ-து- தம்மாற்றேடப்பட்ட திரவியங்களை யெல்லாஞ் சிலவ ழியாது பத்திரமாகச் சேமஞ்செய்து வைத்துக்கொண்டு தா முடலைவிட்டுப்போங்காலை நிமிடகால மவ்வுடலிலிருக்கக் கோடி திரவியத்துக்குப் பிறர்கையிலாயுள்வாங்கிக்கொள்ளுவோமெனி னுங் கூடாத விவ்வுடலோ டுயிர் வாழ்நாளைத் தவத்திற்கழியா த வத்திற்கழிக்கும்.

மானிடரைப்போன்மயக்கம் - பூணார்பொய்கண்டுதுறப் போர்—எ-து- பேதை மானிடரைப்போற் றேகாதி பிரபஞ்ச ங்களை மெய்யாகக்கண் டிவற்றின் மயக்கம் பூணார்க ளிவற்றைப் பொய்யாகக்கண்டு துறப்போர்—எ-று.

கடவுளராயினு மங்ஙன மாயுட் கொடுக்கவுங் கொள்ளவுங் கூடாதாகலிற் கூடாதவென்றார்.

இத்திருவெண்பாவா விளமைக்கண்ணே வனிதாதிபோகங் களைத்துறந்து ஞானசாரியரை யடைந்து வீடடைய வேண்டு மென்று கூறியவாறுகாண்க. (க)

ஊர்க்குருவியும்வளர்த்தகுஞ்சுமொருமனையிற்.... *
பாக்கனையும்பார்த்திருந்தம்பற்றென்னொ மூர்க்க*
ரரிபிரமரிந்திரர்கள்வாழ்வனித்தநம்வாழ்..............*
வொருபொருளோவென்றொழிவாரோ...... .... .. ...*

ஊர்க்குருவியும்வளர்த்தகுஞ்சுமொருமனையிற் - பாக்கனையும்பார்த்திருந்தம்பற்றென்னொ மூர்க்கர்—எ-து - ஓர்மனையில் வாழாநின்ற ஊர்க்குருவியு மதுவளர்த்த குஞ்சுகளு மம்மனையிற் பூனையு மப்பூனையினது குட்டிகளு மிளமையினல் வினைக்கீடாய்த் தம்மு ளுறவாய்க் கூடியிருந்ததையு முதிர்ந்தபோது தீவினைக்கீடா யுறவாயிருந்த தாமே தம் முட்பகையாய்ப் பிரிந்து போனதையு மம்மனையுளிருந்து நாம் பார்த்திருந்து மந்நயனம் வினைக்கீடாய்வரு மனைவி மக்கண் முதலிய விப்பிரபஞ்சத்தினைத் துறவா திதன்மேன் மனதுபற்றி யிருத்தலிதென்னைகொலோ ஆயினவற்றைப்பார்த்திருந்து மெல்லோரு மில்வாழ்க்கையோ டிருக்கவில்லையோ நீரிங்ஙனங் கூறிய தென்னை யெனின் அம் மனைவிமக்கண் முதலிய விப்பிரபஞ்சம் வினைக்கீடாய் வந்ததென் றறியா தப்பிரபஞ்சத்தோடுங் கூடி வாழ்பவர் மூர்க்கர்.

அரிபிரமரிந்திரர்கள்வாழ்வனித்தநம்வாழ்-வொருபொருளோவென்றொழிவாரோ—எ-து - அப்பிரபஞ்ச மிருவினைக்கீடாய் வந்ததென் றறிந்த உத்தமராயினா ரியாவர்க்கு மேலாயவ ரிபிரமரிந்திரர் முதலிய தேவர்கள் வாழ்வு மனித்தியமென்று வேதாகமங்கள்கூறுதலான மதற்பவாழ் விதோர் பொருளோ வென்று கருதி யப்பிரபஞ்சத்தைத் துறவாதொழிவாரோ-எ-று

ஒருவனல்வினை யநுபவிக்குங்காலத்துத் தாய் தந்தை மனைவி மக்கள் சுற்றம் நட் பிவர் முதலியோ ருறவாயிருந் திதஞ்செய்வ ரவன் றீவினை யநுபவிக்குங்காலத் தங்ஙன முறவாயிருந்த வர்தாமே பகையாயகிதஞ்செய்வாராகலி னிவரிருவினைக்கீடாய் வந்தவரென் றறிந்து துறக்கும்படி க்கவைகளை யுவமைகூறினார்

இத்திருவெண்பாவான்மனைவியாதிகுடும்பம்வினைக்கீடாய் வந்ததன்றித் தமக்குறவன்றென்பது மனித்திய மென்பது மறிவித்தவாறுகாண்க. (ல)

இங்ஙன மெல்லாவற்றையுந் துறந்தவ ரியாவரெனின் மேற் கூறுகின்றார்.

பட்டினத்துப்பிள்ளையைப்பத்திரகிரியைப்பரவி....*
விட்டுவிடமாட்டார்வெறுவிடர்-வெட்ட... ........*
வெறுவெலும்பைநாய்கறண்டவேந்தர்வரநாய்பார்த்...*
துறுமுவதைக்காட்டுவோமோ... ... ... ... .........*

பட்டினத்துப்பிள்ளையைப்பத்திரகிரியைப்பரவி - விட்டு விடமாட்டார்வெறுவிடர் - எ-து- அளவற்ற செல்வராயிருந்து மச்செல்வங்களெல்லாந் துரிசறத்துறந்த பட்டினத்துப்பிள்ளை நாயனாரையும் பத்திரகிரிநாயனாரையுந் தோத்திரம்பண்ணி மனைவியாதிய பற்றுகளைவிடுத் துறக்கமாட்டார்கண் மிகுந்தமிடியராயிருந்தாராயினு மனைவி மக்கண் முதலாயினாரை யாம் விடுத்துத் துறந்தோமேலவரை யயலார் கைக்கொண்டுபோகாரோவெனின்.

வெட்ட-வெறுவெலும்பைநாய்கறண்டவேந்தர்வரநாய்பார்த்-துறுமுவதைக்காட்டுவோமோ — எ-து- ஊன்சிறிது மின்றிய வெள்ளெலும்பையோர்நாய் தனது பற்கொண்டு கறண்ட வந் நாய் முன்னரசரையெதிர்வர வந்தா யவ்வெலும்பையவர்கவர்ந்து கொள்வரென்று கருதியவரைப்பார்த் துறுமுவதைப்போலியாமுங் காட்டுவோமோ--எ-று.

அளகேசனைப்போன்ற செல்வத்தினையு மருந்ததிபோன்ற கற்பினையுடைய மனைவியையுங் காமனைப் போலுங் கட்டழகினையுந் துறந்தோர் பட்டினத்துப்பிள்ளை நாயனாரும் பத்திரகிரிநாயனாருமாகலி னவரைத் துறந்தோரென் றெடுத்துக்காட்டியது மவ்வகையு மொன்றேனு மில்லா ருமவரைப்போற் றுறக்கமாட் டாமையால் ''விட்டுவிடமாட்டார்வெறுவிடர்,, என்றார்.

எலும்புகறண்டு நாய்க்குத் தனதெயிற்றிலது வுதைத்ததன் பற்றெரியா தின்பமாத் தோற்றல்போ லவனிதாதிபோகங்களா கிய துன்பத்தை யாணவமின்பம்போன்மாறுபடுத்திக்காட்டவி ன்பமாகக்கருதலான் "வெறுவெலும்பை நாய்கறண்ட,, வென் றார். தான்பற்றிய வெலும்பை யரசர்கவர்வரெனக்கருதி யவ ரைப்பார்த் துறுமுவது போற்றாம் பற்றிய குடும்பத்தைப்பிற ர்கவர்வரெனக்கருதிக்கூறலாது 'துறுமுவதைக்காட்டுவோமோ,, வென்றார்.

இத்திருவெண்பாவாற் செல்வமிளமை யழகு முதலானவ ற்றுட் சிறந்திருந்த மலத்திற் பற்றோ ரணுவளவு மின்றி யவற் றையெல்லாந் துன்பமென்று முரிசறக் கைவிட்ட பட்டினத் துப்பிள்ளை நாயனார் பத்திரகிரிநாயனார் போன்று துறந்தோ ரோ டெல்லாவற்றையுந் துறந்தோராவ ரென்பதும் அச்செல்வ முதலியவற்று ளொன்றேனு மின்றாகவுந் துன்பந் தருதற்கிட மாகிய மனைவியாதி குடும்பத்தை யின்பமெனக்கருதிக் கைவிட ற்கஞ்சுவாரோ ஆணவத்தான் மறைப்புண்டவராவரென்பதுமறி வித்தவாறுகாண்க. (௯)

---

நீரிங்ஙனங் கூறியவாறே துறந்தோர் பிறப்பு நீங்குவரோ வெனின் மேற்கூறுகின்றார்.

நாடுநகர்வீடுடையாடாய்தந்தைநட்புமக்கள்......*
மாடுகுலம்பொன்னுடம்பின்வாதனைகள்-கூடத்...*
தொடுத்தவலைக்கண்ணித்துடக்கிதனையிப்போ.........*
விடப்பெறுவாரென்பிறப்பார்மேல்.............*

நாடுநகர்வீடுடையாடாய்தந்தைநட்புமக்கள் - மாடுகுலம் பொன்னுடம்பின்வாதனைகள்—எ-து - நாடு நகரும் வீடு மனை வியுந் தாயுந் தந்தையும் நட்பு மக்களு மாடுஞ் சாதியுந் திரவி யமு மிவைமுதலிய வுடம்பு வாதனைகளுந்.

கூடத்- தொடுத்தவலைக்கண்ணித்துடக்கிதனையிப்போ - வி டப்பெறுவாரென்பிறப்பார்மேல்—எ- து- நாயகப்படப் பிணி த்தவலையுங் கண்ணியுமாகிய தொந்தனையென்றறிந் திந்தொடர் னையிப்போது விடப்பெறுவா ரினிம்மேலென் பிறப்பார்-எ-று.

உடம்பின்வாதனைகளென்றமையா லாடையாபரணமியா னைகுதிரை கவிகை சிவிகை சாமரை முதலியவுங் கொள்க.

இங்ஙனங்கூறிய வெனதென்னும் போகப்பற்றை நீத்துத் தவஞ்செய்வோர்க ளியானென்னுந் தேகப்பற்றுமறு மித்தேகப் பற்றறவே யவற்றை யானெனதென்று புறத்துநின்ற போதம றுமிப்போதமறவே யுண்ணின்ற போத மசுத்தவாசனையன்று சுத்தவாசனையணுறு மிவ்வாசனையான் ஞானங் கிடைக்கு மி ஞ்ஞானத்தால் விடுவாமாகலின் "என்பிறப்பார்மேல்"லென்றார்

இத்திருவெண்பாவாற் போகவாதனைக ளெல்லாம்பற்றறத் துறந்தோர் தேகவாதனையாதிகளற்று ஞானத்தால் விடையவ

துமெய்ம்மையாகலி னவர்க்கினி யென்றும் பிறப்பின் றென்ப தறிவித்தவாறுகாண்க. (௮)

---

நீர்கூறிய மனையாதிய பற்றுக்களையெல்லாந் துறந்துபொன்னைமாத்திரம் பிடித்துக்கொண்டு தவஞ்செய்பலாகாதோவெனின்மேற்கூறுகின்றார்.

தின்னிற்றிமிரில்விடம்பிடித்துத்தீர்ந்துவிடும்..*
பொன்னை நினைக்கப்பொறாதுகாண்-பின்னை..*
மருந்தானுமந்திரத்தினாலுந்தவிராப்... ..........*
பெரும்பாவம்பெண்ணிற்பெரிது............ ....*

தின்னிற்றிமிரிலவிடம்பிடித்துத்தீர்ந்துவிடும்-பொன்னைநினைக்கப்பொறாதுகாண்- பின்னை - மருந்தானுமந்திரத்தினாலுந்தவிராப்-பெரும்பாவம்—எ- து- கோபாதிகளாகிய திமிரினால் விடமுண்டா லவ்விடஞ் சிறதும்பாது தாழ்த்துத்தலை மீக்கொண்டு பின்னர் மணிமந்திர ரவிடதங்களாற் றீர்ந்துபோம் பொன்னைக் கரத்தாலும் பற்றாதுவாக்காலுங் கூறாது மனத்தா னினைக்கவே யப்பொன்னாசையாகிய விடமனைக் கணமேனுந் தாழாதற்றினை வினும் விரைந்துதலை மீக்கொண்டு பின்னர் மணியானு மருந்தானு மந்திரத்தானுந் தீராதபெரும்பாவமாகலின்.

பெண்ணிற்பெரிது—எ-து-நீவிடுக்கின்றேனென்ற பெண்ணாசைவிடத்தைப்பற்ற விப்பொன்னாசைவிடமிகவும்பெரிதுதனை மனத்தானும் நினையாது விடவேண்டும்—எ-று.

துறந்தோர்பொன்பிடித்தா லதனைப் பாதுகாத்தற் கிடம் பிடிக்கவேண்டு மஃதன்றி யப்பொன்னை வளர்த்தற் கவாத்தேசன்றி அபக்குவர்க்கு ஞானசாத்திரங்களைக் கூறிப்பொன்கொடுத்தார்மேல விழைவுங் கொடாதார்மேல் வெகுளியுந் தோன்றுமிவைதோன்றவே துறவான்வருந்தவப்பயனுமின்றி முன்பெண்ணோடுங்கூடிச்செய்த வில்லறப்பயனு மின்றிக் கேடுவருமாகலிற் "பெரும்பாவம்பெண்ணிற்பெரி,, தென்றார்.

இத்திருவெண்பாவாற் பொன் மனத்தா னினைப்பினு மாறாமயக்கந் தருதலானும் ஈட்டலாதியான் விழைவு வெகுளியாதிகளடுத்துத் தவப்பயனன்றி யில்லறப்பயனு மழிதலானும் பெண்ணாசையினும் பெரும்பாவந் தருவதாகலினதனைப்பற்றலாகா தென்பதறிவித்தவாறுகாண்க. (௯)

இங்ஙனந் தேகாதிப்பிரபஞ்சமெல்லாம் பொய்யென்று நீ
ர்சொல்லக்கேட்டதேயன்றிமற்றியாவருஞ்சொல்லக்கேட்டிலே
னென்ற மாணாக்கனைநோக்கி மேற்கூறுகின்றார்.

செல்வமிளமையுடம்புபேய்த்தேரொன்று..........*
சொல்லுவதென்காணாரோசுட்டதுபோ-லொல்லை
விடுவோர்பிறப்பிறப்பின்மீளார்கணமீண்டாற்..........*
றொடுமோசிவனைத்தொடா... ................... .. .....*

செல்வமிளமையுடம்புபேய்த்தேரொன்று-சொல்லுவதென்
காணாரோ—எ-து- செல்வமு மிளமையு முடம்பு மிவை முதலி
யபிரபஞ்சங்களுங் கானற் சலம்போலப் பொய்யென் றியாங்
கூறவேண்டுவதென்னை யவை மெய்ப்பாற்றென்றி யழிவனவற்
றைத் தாங்காட்சிப்பிரமாணமாகக் காணார்கொலோ ஆயினெல்
லோரும் ஞானத்தாற் பிறப்பறுமென்று கூற நீர் துறவாற் பிற
ப்பறுமென்று கூறியதென்னையெனின்.

சுட்டதுபோ- லொல்லை-விடுவோர்பிறப்பிறப்பின்மீளார்க
ண்மீண்டாற் றொடுமோசிவனைத்தொடா—எ-து-தேகாதிப்பிர
பஞ்சங்களை யெனதியானென்று சுட்டி யறியுமிச்சுட்டுப்போத
ம்போல யப்பிரபஞ்சத்தைச் சீக்கிரத்தில் விட்டுத் துறப்போர் பி
றப்பிறப்பின் மீண்டுவாரார்கள் ஞானக்குறைவினால் மீண்டா
ர்களேனு முற்றுறத்து தவம்பண்ணிய வாசனையா லப்பற்றுங்க
ளைகடந்து நிற்பரோயன்றி யவைப்பற்றுத் தீண்டுமோ தீண்
டாதாயினும் பிறப்பின்மீண்டோரைத்தீண்டாதோவெனினவர்
சிவனைப்போலு மொன்றோடும் பற்றற்றுடையா ராகலிற் றீண்
டாது—எ-று.

அனித்தியவிவேகந் தோன்றிய வக்கணமேதாழ்த்திராதெல்
லாவற்றையும்விடவேண்டுமாகலி“னொல்லைவிடுவோ„ரென்றார்.

முற்பிறப்பிலவாவுடையார்க் கிப்பிறப்பினுமதுதொடர்த
ல்போல முற்பிறப்பி லவாவறுதியுடையார்க் கிப்பிறப்பினு மவ்
வவாவறுதியே தோற்றுமாகலிற் “சிவனைத்தொடா„ வென்றார்

இத்திருவெண்பாவா லுடம்புமுதலிய பிரபஞ்சந் தோன்
றியழிவது பிரத்தியக்கமாக விருத்தலிற் கானற் சலம்போன் ற
ழிவதென்று ஒருவர்கூறக் கேட்கவேண்டுவதின்றென்பதூஉம் இங்
ஙனம் பிரத்தியக்கமாயிருப்பினு மறியா ரஞ்ஞானிகளென்பதூ
உஞ் சுட்டறியும்போதப் பிரபஞ்சத்தை யநித்தியமென் றறிந்து வி

னாந்துவிட்டுத் துறப்பதேஞானமென்பது மித்துறவுடையோ
ரீண்டுமீண்டும் பிறவாரென்பதூந் தவக்குறைவான் மீண்டாரா
யினு மொன்றினும் பற்றுதலற் றிருப்பரென்பது மறிவித்தவர்
றுகாண்க. (௬)



இந்தவவாவறுதியினுல் வரப்பட்டவின்பமென்னையென்று
மாணுக்கனைநோக்கி மேற்கூறுகின்றுர்.

ஆசையினுலற்பசுகமாயழிந்தாற்பேரின்ப..........✻
மாசையின்போக்கென் றறியலாகாதோ-வாசை...✻
நளிகைக்கழுக்குவந்தநாசமெனநாடித்... .. .. .. .. ...✻
தெளியப்போமற்றிவையைந்தும்...... ... ... ........✻

ஆசையினுலற்பசுகமாயழிந்தாற்பேரின்ப-மாசையின்போ
க்கென்றறியலாகாதோ—எ-து- ஆசையினுலே போதஞ் சகமு
கமா மென்று விடயங்களிலழுந்தத் தமககவற்று லற்பமாய
சுகா கியழியுமாறுவிவ்வாசை நாசமேசிவத்திற்றேன்று
பேரின்பம் பெறுதற்கேதுவென் றறியலாகாதோவாயி னவ்
வாசைபோமா றெங்ஙனமெனின்.

ஆசை-நளிகைக்கிழுக்குவந்தநாசமெனநாடித்- தெளியப்
போமற்றிவையைந்தும்—எ-து- அவ்வாசை போதத்தின்கண்
ணே றவத நெய்யாதிவார்த் தடைச்கு ழுங்கிற்குழாய்க் கழுக்
குவந்தநாசம்போலத் தமக்கு நாசமாமென விசாரித்தறிய வ
வ்வாசையின் போதமாய விடயங்களிற்பிரிந்துசெல்லு மிவ்வை
ந்தவாவ நீங்கும்—எ-று.

ஆன்மாவாசையினுல் விடயத்தி லழுந்திச் சிற்றின்பம் பெ
றுதல்போ லவ்வாசை நாசத்தாற் சிவத்தி லழுந்திப் பேரின்பம்
பெறுமாகலிற் "பேரின்பமாசையின் போக்கென் றறியலாகா
தோ,, வென்றுர்,

தேனெய் யெண்ணெயாதிவார்க்கு ழுங்கிற் குழாய்ச்சிறு
துவாரத்தின்கண் மாவட்டைமுதலிய நுழைந்தா லதிற் சுழல்வ
தேயன்றி யழுக்கினுன் மீளமாட்டாதாகலின் மூற்போற்றேனு
திவார்த் தங்கிகரியாததனைப் புறம்பாய் விடப்படு மதுபோ லா
சைபோதத்தினேறி யிருந்தபோ தெவ்விதத்தாலு மீளா ததனு
லப்போதத்தில் வீட்டின்பத்திற்கேதுவாய துறவு மெய்யுணர்வு
முதலிய நற்குணங்களேறு திக்குணங்களேறுமையின்முன்பேர
ற்பிறவித்துன்பத்தையேபெறுமாகலினங்ஙன-மூவமைகூறினுர்

நளிகையின்மரவட்டையாதி நுழையும்போ தின்பம்பேர லெளிதி னுழைந்து மீளமாட்டாததுபோற் போதத்தின்கணுழை யேழும்போ தின்பம்பொற்றோன்றி யெளிதின்மீளாமைக்குங் கொள்க. நளிகையென்பது மூங்கிற்குழாயது-திசைச்சொல்.

இத்திரு வெண்பாவா லவாவினு லற்பவின்பம் பெறுதல் போ லவாவறுதியாற் பேரின்பம் வருமென்பதூஉம் அவா வினு ற்றடைகது நேரிம் மநர்த்தத்தை யுண்மையாய் விசாரித் தறியி லவ்வவா வறுதி வருமென்பது மறிவித்தவா றுகாண்க. (எ)

---

இனித் துறவினது முடிவுந் துறந்து செய்யுந் தவத்தினது முடிவு மடிப்பேற் கருளிச்செய்ய வேண்டு மென்ற மாணுக்கனை நோக்கி மேற் கூறுகின்றார்.

உதயந்தொழப்போவார்க்குள்ளும்புறம்பும்... ... .*
புதையவொளிவீசுமாபோலே பதிமோகி. .. ....*
தீக்காட்டிலேகொடுக்கச்சென்றவாகண்டக்காற் ... ... *
றுக்காததன்றோதவம்... ... ... .. ... ... ... ... *

உதயந்தொழப்போவார்க்குள்ளும்புறம்பும் -புதையவொளிவீசுமாபோலே—எ-து- சூரியவுதயந்தொழச் செல்வோர்கதுள்ளும்புறம்புமிருண்மறையவொளிவீசுமாறுபோலே மனைசுதர் முதலிய பற்றுகக ளெல்லாவற்றையும்விட் டவற்றின் மேலுளத்தெழு மவாவினையு மறுத்துக் கணடவிடயங்கண்மேற்சென்றுபற்று மிந்திரியங்களையு மடக்கி யுள்ளும் புறம்பு மாசையாகியவிருளற நிராசையாகிய வொளிவீச நிற்றலே துறவினது முடிவு.

பதிமோகி - தீக்காட்டிலேகொடுக்கச்சென்றவாகண்டக்காற்-றுக்காததன்றோதவம்—எ-து- தனது புருடன்மே லதிமோகியாயிருந்தவளா ளவன் மரித்தகாலை யவனுக்குத் தன்னைக்கொடுக்கச் சுடுகாட்டிற் சென்றவாறு கண்டவளைப்போலுந் தற்போதத்தைச் சிவனுக்கூணாகக் கொடுத்துத் தாமொன்றோடுந் தாக்கற்றிருத்தலன்றோ தவத்தினது முடிவு—எ-று.

உதயந்தொழுவார்க்குக்கண்விழித்தபோ துமிமைத்தபோது மொளி வீசுதல்போலுந் துறந்தோர்க்குப் பொறிகளால் விடயங்களைக் கண்டபோதுங் காணாதிருந்தபோது "முள்ளும்புறம்பு நிராசையொ டிருக்க வேண்டுமாகலி,, னிங்ஙன முவமைகூறினர். "தவமென்றமையாற்,, றுறவுவருவிக்கப்பட்டது.

இத்திருவெண்பாவா லுள்ளும்புறம்பு நிராசையோடிருப் பது துறவினது முடிபென்பதும் போதமொழிந் தொன்றும் தாக்கற் றிருப்பது தவமுடி பென்பது மறிவித்த வாறுகா ண்க. (அ)



இங்ஙனநிராசையோடிருந்தோர்க்குத்தப்போதமறுமோ வென்ற மாணாக்கனை நோக்கி மேற் கூறுகின்றார்.

**உள** மைமணியாட்டுகினுமோசையழிந்தாற்போல...*
வாமதுபோனிற்கவரிதுகா - ணுமாய்... ... ...*
வளர்ந்தவசத்தையெலாமாளமரக்காலா... ... ... ... *
லளந்தெறிந்துபோட்டதும்போலாம்... .. ... ... ...*

உளமைமணியாட்டுகினுமோசையழிந்தாற்போல-வாம்— எ-து-நாவிழந்தமணியைப்பிடித்தசைப்பினுமோசையொழிந் துநின்றாற்போலப் பஞ்சவிடயங்களும் வலியவந்தடுப்பினு மதி தீவிரபக்குவர்க்குப் போதங் கலங்காது நிராசையே யுண்டாம்.

அதுபோனிற்கவரிதுகா - ணுமாய் - வளர்ந்தவசத்தையெ லாமாளமரக்காலா-லளந்தெறிந்துபோட்டதுபோலாம்—எ-து அவரங்ஙன நிற்குமதுபோனிற்க மற்றைய பக்குவர்க்கு மிகவு மரிதுகாணுநாவுபாயத்தானு மங்ஙன நிற்கவருமாயி னாசையா னமுன்னர்ப்போத மேலிட்டு மேன்மேல்வளர்ந்தவதனதுசேட் டையெல்லாமிறந்து போம்படி யறிவாகிய மரக்காலா லிவ்வள வென்றளந்து புறம்பா யெறிந்துபோட்டதும்போலாம்-எ-று.

நிராசையோ டிருப்போரைக் கருவிகள் சேட்டியாது நீங் குமக்கருவிகணீங்கவே திருவருடோன்றுமத்திருவருளாற்போ தத்தை யீதென் றளவிட்டறிந் தொழிக்கலா மாகலி னிங்ஙன மு வமைகூறினார்.

இத்திருவெண்பாவா னிராசையுடையோரை வலித்துவிட யங்க ளடுக்கினும் போத மசையா தாகலி னிராசைவரிற் போத வொழிவுதானேவருமென்பது மிங்ஙன மிருத்தல் பக்குவர்க்கரி தென்பது மங்ஙனமாயினு மவர்க்கு முபாயத்தா னவாவறுதிவ ருமாயி னப்போதச்சேட்டை யளவிட்டெறியப்படு மென்பது மறிவித்தவாறுகாண்க. (கூ)

தநுகரணபுவனபோகங்களிற் சிறிதேனும் பற்றின்றி நிற்குபாய மெங்ஙனமென்ற மாணாக்கனை நோக்கி மேற்கூறுகின்றார்.

தநுவாதிநான்கினுக்குஞ்சார்வழிந்துசற்று.....*
நினையாதிளைப்பாறிநின்றான் - மனையாமோ...*
காந்தக்கடத்தூசிகாற்றற்றதீபமென.. ...........*
வாந்தத்துவங்களயலாம்... ... ... ... ... ... *

தநுவாதிநான்கினுக்குஞ்சார்வழிந்துசற்று - நினையாதிளைப்பாறிநின்றான் - மனையாமோ—எ-து- போகமு நானல்ல புவனமு நானல்ல தநுவுநானல்ல கரணமு நானல்லவென் றுள்ளபடியறிந்து நியதிகளாந் தநுவாதி நான்கினிடத்து மியானெனதென்று சார்ந்துநின்ற போதச்சார்புமகட்டவற்றை மீட்டுஞ் சற்றும் பற்றாதருளி லிளைப்பாறி யசைவற நின்றான் மனையாகிய புவனத்திடத்து மம்மனைவியைப்பற்றியிருந்த வனிதாதிபோகத்திடத்து முன்போற் பற்றுண்டாமோ ஆயிற் பல போகங்களிற் பற்றியற்றுநிற்பினுந் தநுகரணங்களிற் பற்றின்றிநிற்பதெங்ஙனமெனின்.

காந்தக்கடத்தூசிகாற்றற்றதீபமென - வாந்தத்துவங்களயலாம்—எ-து - காந்தக்கடத்திற் கெதிர்முகமாயபோது பற்றியுமதனுட்கிடந்தபோது பற்றாதுமிருந்த காந்தக் கடத்தூசிபோலுங் காற்றிலிருந்தபோதசைந்துங் காற்றின்றியபோ தசையாதுமிருந்த காற்றற்ற தீபம்போலு மத்தநுகரணங்களைத் தனக்கன்னியமாய்க்கண்டு நீங்கிநிற்பி லவற்றோடுந் தாககற்றுநிற்பதுண்டா மவற்றோடுந் தாககற்றுநிற்கவே மற்றைய தத்துவங்களு மயலாய்நீங்கும்—எ-று.

தநுவாதிகளிற் கறங்குபோற் சுழன்றதன்மை திருவருட்கணின்றம்பாதின்மையா “விளைப்பாறி,, யென்றார்.

காந்தக்கடத்திற் கெதிர்முகமாயபோது பற்றியதனுட்கிடந்தபோது பற்றாதிருந்ததுபோற் சகமுகமாய்நின்று தேகத்தையானென்று பற்றிய போத மகமுகமாய்நின்று திருவருளையடைந்தபோ தத்தேகத்தை யானென்று பற்றாதாகலிற் “காந்தக்கடத்தூசி,, யென்று மப்புவனபோகத்தநுகரணங்களைப்போதம்பற்றாது நின்றபோது காணாந் தற்சேட்டையற் றடங்குமப்போது போதந்திருவருளோடுங்கூடிக் காற்றற்றதீபம்போலாமீட்டுங் கரணத்தோடுங் கூடாதாகலிற் “காற்றற்றதீப,, மென்

றுங் கரணங்களறவே யக்கரணங்களினது சேட்டைக் கேதுவாய
கலாதிகளு மக்கலாதிகளைப் பிரேரகம்பண்ணுஞ் சுத்த தத்துவங்
களு நீங்குமாகலிற் "றத்துவங்களயலா" மென்றுங் கூறினார்.

இத்திருவெண்பாவாற் புவனபோகங்களைத் தானன்றென்
றுள்ளபடி யறிந்து களைந்து அவற்றின்கட் சார்ந்துநின்ற போ
தச்சார்வுகெட டருட்சார்பினின்றுற் புவனபோகப் பற்றறுமெ
ன்பதூஉந் தநுகரணங்களைத் தனக் கன்னியமென் றறிந்தவற்றோ
டுந் தாக்கற்றுத்தனக்கனன்னியமான வருளாய்நிற்பினத்தநுகர
ணப்பற்றறுமென்பதூஉம் இங்ஙனமறவேமற்றை தத்துவங்கடா
மேயறுமென்பது மறிவித்தவாறுகாண்க. (௰)

உத்தமராயினோர் கற்புடைய மனைவியைத் துறப்பரோ
வென்ற மாணாக்கனை நோக்கி மேற்கூறுகின்றார்.

நாயலகைநெய்விருப்பிநக்குவதுநஞ்சிட்ட.... *
பாயசமுமெய்ப்பரிசப்பாவைமிகச்-சாயாநீர்
வேட்கையசுணமிபம்விட்டின்மீன்வண்டிவையின் *
சாட்சியைக்கண்டார்துறவாதார்...... ..........*

நாயலகைநெய்விருப்பிநக்குவதுநஞ்சிட்ட- பாயசமுமெய்ப்
பரிசப்பாவைமிகச் சாயாநீர்-வேட்கை—எ-து - நாயானதுவா
ள்வாயிற்றடவிய நெய்விரும்பி யவ்வாள்வாயை நக்குவதும்போ
லும் விடங்கலந்த பாயசத்தையொருவன் சுவைபடவிருப்பு
வதும்போலுமாகும்பாவையாகுமெய்ப்பரிசத்தைப்பின்பற்றிவி
ரும்புதலாகலினும் பொய்யாகிய வப்பாவையாது மெய்ப்பரிச
த்தைமெய்யாகக்கண் டநுபவிக்க விழைதன் மிகவும்பொய்
யாகிய கானனீரை மெய்யாகக்கண்டு தாகத்திற்குண்ண விரும்பு
தல்போலாமாகலினும்.

அசுணமிபம்விட்டின்மீன்வண்டிவையின் - சாட்சியைக்கண்
டார்துறவாதார்—எ-து- அசுணப்புட்சத்தத்தானு மியானைபரி
சத்தானும் விட்டிற்பூச்சியுருவத்தானு மீனிரதத்தானும் வண்டுக
ந்தத்தானுங் கெடுமென விவைகளைச் சாட்சியாக் கண்டுறலா
னுமிவ் வைந்துவிடயங்களு முளவாகிய வப்பாவையைத் துற
வாதாரியாவர்—எ-று.

வாள்வாயினெய்யை நக்கினநாய்க்குநஞ்சிட்டபாயசமுண்
டோனுக்கு முன்னரனுபவ வின்பம்போற் றோன்றிப் பின்ன

நதனுன் மலையளவு துன்பம் வருவதுபோ லநுபவிக்கும்போ துசிறிதின்பம்போற்றோன்றிப் பின்னைத்துன்பம்வருமென்பது ம்பொய்யாத்தோன்றுங் கானலினை மெய்யாக்கருதி யுண்ணத் தொடங்கினேனைப்போற் பொய்யாத் தோன்றும் பாவையரை மெய்யாக்கருதி யநுபவிக்கத் தொடங்குவதென்பதுமோ ரோர்விடயத்தை விழைந்தொவ்வொன்று கெடுமெனிலைந்துவிடய ங்களு முளவாகியபாவயரைவிழைந்தா லவரால்வருங் கேட்டிற் களவின்றென்பது மிதனுற்காண்க.

இத்திருவெண்பாவாற் பெண்க ளின்ப மிகச்சிறிதென்பது மதனுல்வருந்துன்ப மிகப்பெரிதென்பதுமவர்கூட்டரவுமாலை யென்பது மவர்கட்செய்யு மைம்புலநுகர்ச்சிபெருங்கேட்டைத் தருமென்பது மிங்ஙனமறிந்தோர் தம்மனைவி யருந்ததிக் கற்பி னளாயினுந் துறப்பரொன்பது மறிவித்தவாறுகாண்க. (௰௧)

—•••●•••—

எல்லோருமனைவியாதிய குடும்பத்தோடிருந் தின்பங்களை யநுபவித்துக்கொண்டு பூரிப்போடு மிருக்க வக்குடும்பத்தைநீ த்துன்பமென்றீ ரிதென்னையெனின் மேற்கூறுகின்றார்.

இம்மைக்கேகொள்கலமாயேழ்நரகுக்கிடாங்...*
குடும்பத்தைக்குற்றமறைக்கி-னடுங்காரோ...*
ஐவர்க்கொருவனறுந்தொழிலைசெய்தலான் .. ..*
மெய்யைப்பொய்யாக்கிவிடும் ....................*

இடும்பைக்கேகொள்கலமாயேழ்நரகுக்கிடாங்-குடும்பத்தை க்குற்றமறைக்கி-னடுங்காரோ—எ-து-அஞ்ஞானிகள் இம்மைக் கண்ணே துன்பங்களை யெல்லாந் தாமநுபவித்தற் கேற்றுக்கொ ள்வதாய கப்பலாய் மறுமைக்கண்ணே யெழுவகைப் பிறவியா கிய வெழுவகை நரகத்தையு முண்டாக்குங் கனத்தையினையுடை ய மனை சுதர் முதலிய குடும்பத்தை இங்ஙன மிகபரங்களினுந் துக்கத்தைத் தருவதென் றறியார் இங்ஙனமறியவொட்டாதாண வமாகிய குற்ற மலமா மறைத்தலா லிவ்வாணவக் குற்றம் நீங்கி னோர் குடும்பக் குழாத்தைக் கண்டாலு முளம் வெருவி நடுக்க முறார்கொலோ ஆயினீர் மெய்யென்று கூறிய சில மொருவர்க் குந் தோன்று திருப்பானே னென்னில்.

ஐவர்க்கொருவனறுந்தொழிலைச்செய்தலான்- மெய்யைப்பொ ய்யாக்கிவிடும்—எ-து- ஐந்திந்திரியங்கட்கு மோர் முதல்வனாகிய வான்மா வவ்விந்திரியங்களா லதிர்த்நுபவிக்கும் விடயகத்தின்

பொருட் டுழவுமுதலிய வறுவகைத் தொழிலின் முயற்சிப்பட லா னிம்மையற்சி யச்சிவத்தைத் தெரிய வொட்டாது பொய்யா க்கிவிடு மிதனை நீயறிதி—எ-று.

குடும்பத்தா லிம்மைகட் டேகதுக்கமனோதுக்கங்களினட் பருது வருதலி னிம்மையகமே கொள்கலமா மென்று மிக்குடும் பவாசனையான் மறுமைக்கட் பிறவிக டொன்றுதொட்டு வருமா கலி "னேழ்நரகுக்கிடா,, மென்றுங் கூறினர்.

அறுதொழிலைச்செய்தலான் மெய்யைப் பொய்யாக்கிவிடு மெனவே குடும்பத்தின்பொருட்டுச்செய்யு மறுவகைத் தொழி ல்களின் முயற்சியை விட்டுச் சிவயோக முயற்சியிற்றொடங்கின் மெய்ப்பொருடோற்றுமென்பதாயிற்று.

'அறுவகைத்தொழில்களாவன, உழவு- தொழில் - வாணிக ம்-எழுத்து- சிற்பம்- பரதம்-இவை யாறுமெனக்கொள்க.(௰௨)

உத்தமபக்குவராயினோர் குடும்பத்தோடுங் கூடியிராரென் றின்னுங் கூறுகின்றார்.

குரங்கிற்றுனிச்சிகுடும்பக்குழாமும்..................❋
பெருங் குப்பையிற்கரடிப்பெண் டும்-பொருந்துவரோ
காலனுந்தீயுங்கடலுமிருங்கல்லுமாய்.....................❋
மேலுநரகாய்விடும் ........................................❋

குரங்கிற்றுனிச்சி குடும்பக்குழாமும்-பெருங்குப்பையிற்க ரடிப்பெண்டும்- பொருந்துவரோ — எ-து- ஓர்குரங்கைப் பலகு ரங் கூவந்து சேட்டித்தல் போலத் தாய் தந்தை சுதர் சுற்றமுத லியோர் தம்மைவந்து வாதிக்குங் குடும்பக்கூட்டத்தையுமக்கு டும்பக்கூட்டமாகிய பெரியமலக்குப்பைக்கட்கரடிபோலும்பத் தப்பட்ட பெண்டீராது கூட்டரவினையும் பொருந்தியிருப்பரோ உத்தமராயினு ரெல்லோரு மவரோடுங்கூடியிருக்கவில்லையோ விவரொன்னை யங்ஙன மிராதுபோவதெனின்.

காலனுந்தீயுங்கடலுமிருங்கல்லுமாய்- மேலுநரகாய்விடும் —எ-து - அக்குடும்பக்கூட்டங் காலனைப்போலுந் தீயைப்போ லுங்கடலைப்போலும்பெரியமலையைப்போலுமிம்மைக்கணவனே துன்பந் தருவதாய் மறுமைக்கண்ணு மதினொடுங் கூடியிருந்த வாசனையாற் பிறப்பாகிய நரகத்தையுந் தருவதாய் விடுமெனவ றிந்து தனோடுங் கூடியிரார்—எ-று.

சோறுகூறை முதலியன கொடுக்கும் போதுங் கொடா
தபோதும் வரும் பிணக்கானு மவற்றிற் கேதுவாகிய திரவியந்
தேடுதலானு மதனைப் பாதுகாத்தலானு மவர்க்கு வியாதியாதி
துன்ப மடைமானபங்கம் வந்த காலையினு மனையர்கலகம் அற்ப
காலம் வந்த காலையினு மவரிறந்த காலையினு மிவை முதலியவ
ற்றா லக்குடும்பத்தாற் றேகதுக்க மனோதுக்கங்க ளிடையறாது
வருதலிற் "துரங்கிற்றனிசசி குடும்பக்குழா,, மென்றார்.

இத்துன்பக் குழுவிற் காடிபோலுங் குணத்தானுஞ் செய்
கையானு மிழிவாய பெண்டுடனாக் கூடுவரோ வென்பதனைப்பெ
ருங்குப்பையிற் காடிப் பெண்டு பொருந்துவரோ வென்று கு
றிப்பாற் கூறினார்.

காலனுயிர்களைப் பாசத்தாற் பிணித்துக் கொடுசென்று நி
ரையத்துள் வீழ்த்தி வருத்துதல்போற் றுறந்து செலவினமே
னென்றிரண்டடிச் சென்றோனை மனை சுதர்முதலியோர் கரசர
ணங்களைப்பற்றிக் கொண்டோவிட் டழுதவலுள மிளகப்பண்
ணி மீட்டுக்கொடுவந்து குடும்பமாகிய துன்பத்து ளகப்படுத்
தி வருத்துதலிற் காலனுமென்றுமொருவனைத்தீச்சூழ்ந் துகொ
ண்டதுபோற் சூழ்ந்துகோடலிற் றீயென்று நடுக்கடலில் வீழ்
ந்தோனுக்குத் கரைகண்டேறக் கூடாததுபோ லக்குடும்ப சா
கரத்தில் வீழ்ந்தோனுக் கிக்கரைகண்டேறக்கூடாதாகலிற் கட
லென்று மலையிருத்திக் கொண்டதுபோற் குடும்பபாரந் தந்த
லைச்சுமையாயிருத்துதலி னிருங்கல்லென்றுமிறக்கும்போ துயி
ர்க்கெந்தவாசனை யிருந்த தந்தவாசனையோடுஞ் சென்று பிறத்
தலின் மேலு நரகமென்றுங் கூறினார்.

இவையிரண்டு திருவெண்பாவானு மனைவியாதிய குடும்ப
ந் துன்பங்கட்கும் பிறவி வாதனைகட்கு முறைவிட மென்பது
ம் இதனை யிங்ஙனமென் றுணவமறைப்பா ளஞ்ஞானிக ளறிந்தி
ல ரென்பதும் ஞானிக ளிதனைக்காணினுங் கேட்கினு நடுங்குவ
ரென்பது மிக்குடும்பமுயற்சி சித்தையறிய வொட்டாது ம
றைக்குமென்பதும் உத்தமபக்குவர் விடாது சூழ்ந்துவாதிக்கு
மிக்குடும்பவாதனை யான்வரு நட்டங்களை முற்று மறிந்ததனைய
க்கணத்தே விடுவரென்பது மறிவித்தவாறு காண்க. (௫௩)

இங்ஙனந் துன்பமென் றறிந்து துறந்து செல்வோர் தம்மை நம்பியிருந்த குடும்பத்தைப் பாதுகாத்தற்குச் சகோதரர் முதலாயினாரு ளொருவரைத் துணையாக வைத்துப் பின் றுறந்து சேறலாகாதோ வெனின் மேற் கூறுகின்றார்.

அன்னைப்போற்றன்னையறிவரோகாக்கையுடன்...... ✻
மன்னுகுயில்போலவாறுபோ- லன்னியமாய்... ✻
பேசாதுபோனதுறவிபிறப்பறுப்பார்க்... ... ... ... ✻
காசாறுமென்றேயறி .... ... ... ... ... ... ... ✻

கன்னைப்போற்றன்னையறிவரோகாக்கையுடன் -மன்னு குயில்போனவாறுபோ - லன்னியமாய்ப் - பேசாதுபோனது றவி—எ-று-இயானின்னசாதி யின்னார் குலந் தாய்தந்தை யின்னாரொன்று தனது குலக்குடும்பங்களை யறியாதகன்னைப்போ லுமுத்தம பக்குவனியா னின்னசாதி யின்னார்குல மின்னார் தாய் தந்தையென்று தனது குலக்குடும்பங்களைப்பகுத்தறிவரோ யிங்ஙன மொன்றையும் பகுத்தறியாது காக்கை யுடன்பருவம் வருமளவுந் தனதினம்போற் கூடிச்சென்று பருவம் வந்தகாலை யதற் கன்னியமாய்ப் பேசாது சென்ற நிலைபெற்ற குயில்போலு மனித்திய விவேகம் வருமளவு மவரினம்போற் கூடியிருந்த த்த விவேகம் வந்த காலை யவர்க்கன்னியமாய்ப் பிறிந்தவரோடுஞ் சொல்லாது சென்ற துறவியே மெய்த்துறவி.

பிறப்பறுப்பார்க்- காசாறுமென்றேயறி—எ-து - அத்துறவி பிறப்பறுக்கும் பொருட்டுத்- துறந்தார்க் காசாரியனு மாவன்—எ-று.

தருமன் முதலிய துணைவரையுங் குந்தியாகிய தாயையுங் கண்டிருந்துங் கன்ன னறியாததுபோ லிவன்குடும்பத்தாரைக் கண்டிருந்து மனித்திய விவேகத்தாற் பொய்யாக் கண்டாலலிற் கன்னைப்போற் றன்னை யறிவரோ வென்றுங் - குயில்காக்கையோடு கூடியிருந்த போதுந் தன்குரலைக் காட்டிலுற்கொத்து மென்றடங்கி யிருந்து செல்லும் போதுங் கூவாது சென்றது போற் குடும்பத்தோடு கூடியிருந்த போதுந் தான்றுறந்து சேறலை யவரோடுஞ் சொன்னாற் பற்றுவரென்ப தறிந்து சொல்லாதடங்கி யிருந்து செல்லும் போதுஞ் சொல்லாதுசென்றமையாற் குயில்போன வாறுபோற் பேசாது போனதுறவியென்றுங் கூறினார்.

அறிவுந்துறவு முள்ள ஞானி சிறப்புளனாகலி னிவனை யா
னாளுமென்றார்.

இத்திருவெண்பாவால் குலமுதலியவற்றி னபிமானமின்றி
யநித்தியவிவேகம் வருமளவு மவற்றோடுன் னேக்குதலற்றுக்
கூடிநின்றந்த விவேகம்வரி னொருவரோடும் விடைபெறாதுசெ
ன்றவனே துறவிகளுட்சிறந்தவனென் றறிவித்தவாறுகாண்க.



இங்ஙனந் துறந்துசெல்வானை மாதாபிதாக்கள்வந்து தடு
த்தா லெங்ஙனஞ் செல்வானெனின் மேற்கூறுகின்றார்.

நித்திரைசெய்வீட்டி னெருப்பும்பெரும்படையு..... *
முற்றிப்புறப்பட்டார் முற்றத்தே-பித்தரைப்போ...*
லில்லென்றுசொன் னானுநிற்பரோவப்படிகா ..........*
னில்லறத்தைநீத்தாரியல்பு.............................*

நித்திரைசெய்வீட்டினெருப்பும்பெரும்படையு-முற்றிப்
புறப்பட்டார்முற்றத்தே- பித்தரைப்போ- லில்லென்றுசொன்
னானுநிற்பரோ—எ-து - தாநித்திரைபண்ணுகின்ற வீட்டினுள்
ளே நெருப்பும்பெரும்படையுஞ் செறிந்துவர விழித்தவற்றை
க்கண்டுவெருண் டவ்வீட்டின் வாயில்கடந்து முன்றிலிற் புறப்
பட்டார் தமக்கனுகூலராயினு மவற்றினடுநிற்பீரென்றறியாது
கூறினும் பித்தரைப்போலு மவர்மொழியை யுட்கொண்டுகண
ப்போதாயினுநிற்பரோ.

அப்படிகா- னில்லறத்தைநீத்தாரியல்பு—எ-து - அவரெ
ப்படிநில்லாமேயோடிச் செல்வரோ வப்படிகாண் மாதாபிதாக்கள்
வந்து தடுப்பினு நில்லா தில்வாழ்க்கையைத் துக்கமாகக்கண்டு
துறந்து செல்வாரது முறைமையும்—எ-று.

குடும்பந் துக்கமென் றறியாதபோ ததனோடுங் கூடியிரு
ப்பானென்பதுந் துக்கமென் றறிந்தபோ ததனைத்துறந்துசெல்
வனென்பதுந் துறந்துசெல்லும்போ தியாவர் தடுப்பினுநில்லா
னென்பது மிவ்வுவமைக்குறிப்புகளாற் காண்க. (௰௫)

---

இங்ஙனந் துறந்துசெல்வா ரியல்பின்னுங் கூறுகின்றார்.

கட்டெகிழ்த்துவிட்டகள்ளனைப்போற்கஞ்சுலிற்பேய்*
வெட்டுளத்தின்வெருவினர்போன் - மூட்டத்......*

*தொடர்ந்தபடைபிழைத்துத்தோன்றப்போவார்போ...*
*லடங்கத்துறந்தேகுவார் .... ...........................*

கட்டுநெகிழ்த்துவிட்ட கள்ளனைப்போற்கங்குலிற்பேய்-வெட்டுகளத்தின்வெருவினர்போன் - மூட்டத்-தொடர்ந்தபடைபிழைத்துத் தோன்றப்போவார்போல — எ-து- பொருள்திருடியகள்வனைச் சிலர்வந்துபற்றிப்பிணித்துவருத்தவவருள்ளொருவனத்தொருவனவந்தப்பிணியையவிழ்த்துவிட்டகாலைவிரைந்துசெல்லுமக்கள்வனைப்போலு மிரவிற்பெரும்பேயைக்கண்டுவெருவினர் விரைந்துசேறல்போலு முயுத்தகளத்தின்வெருவினர் விரைந்துசேறல்போலுந் தம்மைப்பிடிக்கப் பின்றொடர்ந்தபடைக்குத்தப்பி மிகவுங் கைகடந்து செலவார்போலும்.

அடங்கத்துறந்தேகுவார்—எ-து- தாய் தந்தை மனை சுற்றமுதலிய குடும்பக்கூட்டங்களை யெல்லா மொருங்கே துறந்து செல்வாரன்றி யவர்க்கோர் தடையுமின்று—எ-று.

மலபரிபாகம்வாராமுன் றுஞ்செய்த விருவினைக் கீடாய்க் குடும்பபாசத்தாற் பிணிப்புண்டுவருந்துவனென்பது மப்பரிபாகம் வந்தகாலைத் தோன்றுநின்ற வருட்சத்தி யக்குடும்ப பாசந்துக்கமென் றறிவிக்க வறிந்துதுறந்து செல்வானென்பது மப்போதிரவிற்றோன்றும் பேய்போலு முயுத்தகளம்போலுங்குடும்ப மலர்க்குத் தோற்றுமென்பது மக்குடும்பக குழாங்கள்பின்றொடர்வனென்றறிந்து தூரதேசத்திற் செல்வானென்பது மிவ்வுவமைக் குறிப்புகளாற் காண்க.

இவையிரண்டு திருவெண்பாவாற் குடும்பபாரம்பொறுத்தற் காற்றுது வருந்தி யிழித்துவிட்டு விரைந்து செல்வோர் தாய்தந்தையராதியர் தடுத்தற்குச் சிறிது முட்படாரென் றறிவித்தவாறுகாண்க. (௰௬)



தாந்துறந்துபோதற்குக் குடும்பத்தார் சம்மதித்தாலப்பதியிலிருந்துதவம்பண்ணலாகாதோவெனின்மேற்கூறுகின்றார்.

**உ**டுக்கைமறந்தவருக்கூர்காடென்றுண்டோ ...*
வடுத்தபலாருண்டோபேயாறுற் - கடப்போட்
டெதிரிட்டதெல்லாமிழந்தார்க்கிருந்த...... ......*
பதியைக்கொண்டுண்டோபயன்...... ...... ......*

உடுக்கைமறந்தவருக்கூர்காடென்றுண்டோ - வடுத்தயலாரு
ண்டோவேயானால்—எ-து- குடும்பக்கூட்டங்களையெல்லாந் து
ரிசறத்துறந்து தேகத்தையுஞ் சத்துருவாகக்கண் டத்தேகத்திலு
ன்குமுழுஞ் சற்று முடுக்கையு மறந்துதிரிவோர்க் கீதுவொன்று
மிதுகாடென்றும் பகுத்துக்காணு நினைப்பு முண்டுகொல்லோ
வஃதன்றிப் பூரணப்பேய் வயமாகையினு லவர்க்கடுத்தாருமய
லாரு முண்டுகொல்லோ யிங்ஙனமுடுக்கை மறந்தடுத்தா ரயலா
ரென்பதுந் தோன்று திருப்பதுமன்றி.
சுடப்போட்-டெதிரிட்டதெல்லாமிழந்தார்க்கிருந்த-பதியைக்
கொண்டுண்டோபயன்—எ-து- காத்திலெடுத்தபொருண்மிகவு
ஞ்சுட விரைந்துபோட்டுநின்றாற்போற் றமதுயிற் கெதிரிட்ட
கருவிகளையெல்லாந் துன்பமாகக்கண்டு ஞானக்கினியிலே லெரி
த்தவற்றையு மிழந்தார்க்குத் தாமுன்னிருந்த பதியி லிப்போதி
ருந்ததுகொண்டு பயனென்னை யுண்டுகொல்—எ-று.

இத்திருவெண்பாவால் தேகாபிமானம் விடுத் ததனைப் ப
கையாகவு மெதிரிட் டவைகளைத் துன்பமாகவுங்கண் டனைத்தை
யுமிழந்து பூரணமருள்கொண்டோ ரிதுநா டிதுகாடென்று மி
வரடுத்தா ரிவரயலாரென்றும் பகுத்தறித லின்றாகலின் முன்
னிருந்த பதியி லிப்போதிருப்பதனு லவர்க்குவரும் பயனென்
றுமின்றென் றறிவித்தவாறுகாண்க. (௰௭)



முன்னிருந்த பதியைவிட்டு மற்றோர் சிவதலத்தி லோரிட
ம்பற்றியிருந் தொருவர் முன்னிலையா யுதாரக்கினிக் கன்னமாத்
திரம்வாங்கியுண்டு தவத்தைப்பண்ண லாகாதோவெனின் மேற்
கூறுகின்றார்.

துக்கஞ்சுகமானசுட்டறிவுகெட்டவர்க்குத் ..........*
திக்குண்டோவெங்குஞ்சிவாலயமா-மக்கினிக்குப் *
பிச்சைபொதுநிழனீர்பேரிதுவேபேசார்தம்............*
மிச்சையிருப்பகாந்தத்தே......... ..........*

துக்கஞ்சுகமானசுட்டறிவுகெட்டவர்க்குத் - திக்குண்டோ
வெங்குஞ்சிவாலயமாம்—எ-து- முன்கண்ட பிரபஞ்சதுக்கமெ
ல்லா மிப்போ தானந்தமாகக்கண்டசுட்டுப்போதங் கெட்டோ
ர்க் கின்னதிசையென்று மின்னவிட மென்றும் பகுப்புண்டா
மோ வவர்க் கெத்திசையு மெவ்விடமுஞ் சிவாலயமேயாகு மஃ
தன்றி.

அக்நிலிக்குப் - பிச்சைபொதுநிழனீர்பேரிதுவேபேசார் நம்-பிச்சையிருப்பேகாந்தத்தே—எ-து-உதராக்கினி யவித்தற் கூரின்கட் பிச்சையு மிருத்தற்கிடம் பொதுச்சாவடி மரநிழலுந் தாகந்தணித்தற் கேரியாதிநீர்களு மாளவாகலி னன்னமி - நீரொன்று மிவற்றின துபெயரமைய சொல்லாராயி னவர்க்கிச்சை தாமேயெனி னொருவரோடுங் கூடியிராது பேசா தேகாந்தத்தி ருப்பதே யிச்சையாம்—எ-று.

சிவத்தையுணர்ந்தோர்க் கெங்கும் பரிபூரணமாய்த்தோற் றுமாகலின் "எங்குஞ் சிவாலயமாகு" மென்றார்.

இத்திருவெண்பாவால் பிரபஞ்சங்களை யெல்லா மாநந்த மயமாகக் கண்ட துறவினர்க்குத்திசையாதியெவ்விடத்துஞ்சிவா லயமாகு மென்பதும் பிச்சையாதி யுளவாகலி னன்னபானாதி யோரிடத்திற் குறியாரென்பதும் ஒருவரோடும் கூடா தேகாந்த மௌனத் திருப்பதே யவர்க் கிச்சை யென்பது மறிவித்த வாறு காண்க. (மஅ)



ஒருவரோடு கூடியிருந்து பேசுதலு மாகாதோ வெனின் மேற்கூறுகின்றார்.

அங்கக்காரன்றுதிப்புநாவிசுவையானதுவுஞ்... ... ✻
சிங்கிகுளிர்ந்ததுவும்போற்செகத்தோர்-சங்கத்தைத்
தீண்டுமனமேபகையாய்ச்சேராதுடம்லாமே... ... ...✻
மாண்டுதிரிவார்துறவாவார்... ...........................✻

அங்கக்காரன் றுதிப்புநாவிசுவையானதுவுஞ் சிங்கிகுளிர்ந் ததுவும்போற்செகத்தோர்—எ-து- நாணுவேடங்கொண்டுநடிக் கும் வேடதாரி யவ்வேடங்கட் கேற்ற பாடை பேசுதல்போலவு ங்கொல்லாநின்ற வற்சநாபி யொருவர்க்குச் சுவையானது போ லவுந் தன்காலிற்பூண்ட விலங் கொருவற் கிதமான துபோலவுந் தத்தஞ் சாதிகட்குந் தொழில்கட்கு மேற்ற சொற்களைச் சொல் லியுந் துன்பமாயுள்ள விடயங்களை யின்பமாகக்கருதிக்கொண்டு மனைவிமுதலிய பாசவிலங்கை யிதமாகக் கைக்கொண்டு மயங்கி ச்சுழலாநிற்ப ரிச்செகத்தோர்.

சங்கத்தைத்- தீண்டுமனமேபகையாய்ச்சேராதுடலோடே மாண்டுதிரிவார்துறவாவார்—எ-து- இங்ஙனஞ் சுழலாநின்றார்கூ ட்டத்தைக் கூடவேண்டுமென்று கருது மனநினைவே தம்பகை

பாகி யந்நினைவோடுங்கூடா துடலோடுங் கூடியிருந்துங் கூடா தவ்வுடல் வாதனை மாண்டு திரிவாரோ துறவினையுடையா ராவரெ ன்றறிதி—எ-று.

உடலோடேமாண்டு திரிவாரெனவே போகவாதனை தேக வாதனை போதவாதனையாகிய விம்மூன்று வாதனையுந் தீர்ந்தா ரென்பதாயிற்று.

இத்திருவெண்பாவால் பிரபஞ்சிகள் ஒருவரோடொருவர் கூடலும் நாநாவிதமாய் வார்த்தையாடலுமே யின்பமாய்க்கரு தி மயங்குவரென்பதுந் துறவோர் அங்ஙனஞ் செய்வது துன்ப மென்று விடுப்பதுமன்றித் தம்முடலோடுங்கூடியுங் கூடாதிருப் பரென்பது மறிவித்தவாறுகாண்க. (௰௧)

பொன்மலைமேலாகாயம்போவார்க்குப்பூமியுள்ளோ
ரென்னவேநாதாந்தமெய்த்தினரா-யென்னருகே
வாவென்றுபாற்கடலில்வாழரியைமண்டேகங் ........... *
கூவுந்தலைமையதொக்கும் .............................. *

பொன்மலைமேலாகாயம்போவார்க்குப்பூமியுள்ளோ -ரென்னவே—எ-து- பொன்மலை முடிமேலாகாச கமனம்பண்ணு வோர்க ளிந்நிலத்தின்கண் ணுள்ளார் மிகவுந்தாட்சியானதுபோ ன்ஞானிகட்கும் பிரபஞ்சிகட்கு முயர்ச்சி தாழ்ச்சி யிருப்பவும்

நாதாந்தமெய்த்தினரா- யென்னருகே - வாவென்றுபாற்க டலில்வாழரியைமண்டேகங்- கூவுந்தகைமையதொக்கும்—எ-து- நாததத்துவத்தின் முடிவாயிருந்த திருவருளையடைந்த ஞானிக ளைப் பஞ்சபூதகாரியந் தானாகிய தேகந் தானாகி யிந்தியவழி நு ழைந்து செல்லும் பிரபஞ்சி யொருவனென் மனைக்கு நீர்வருக வென்றழைத்தல் பாற்கடலுட் பணாவணையிற் பள்ளி கொள்ளா நின்ற பெருமாளைப்பார்த்தோர் தலைநீரு மிக்கடன்மிசைமித ந்து துயில்கின்றீ ரியானு மிக்கடன்மிசை மிதந்து துயில்கின் றேனு மக்குமரியென்று பெயரெனக் குமரியென்று பெயரா கலி னென்னருகே நீர்வருகவென் றழைக்கு முறைமையதொக் கும்—எ-று.

பொன்மலை முடியை நாதாந்தத்திற்கு மம்மலை முடிமே ற்றென்று மாகாயத்தை யிந்நாதாந்தத்திற் றென்றுந் திருவ ருளுக்கு மவ்வாகாயத்திற் கமனம்பண்ணுவோனை யித்திரு வரு

ளையுங் கடந்து செல்லும் ஞானிகளுமிவற்கு முவமித்துக் கூறி யவாறு காண்க.

ஞானிக டத்துவங்கட்கெல்லா முடிவாய் நின்ற பரிபூரணத் தையடைந்தவர் பிரபஞ்சிக டத்துவங்கட்கெல்லா மடியாயுள்ள பஞ்சபூதகாரியந் தானாயுள்ள தேகத்தையடைந்தவராகலின் "பொன்மலைமேலாகாயம் போவார்க்குப் பூமியுள்ளோ," ரென்னவே யென் றங்ஙன முவமை கூறினார்.

ஞானிகளது மகிமையை யறியாதா ரவரு முலகத்தின் கணிருக்கின்றாரியானு முலகத்தின் கணிருக்கின்றேனவரு மனிதரியானு மனிதனென்று கருதி யழைத்தாராகலிற் "பாற்கடலின் வாழரியை மண்டூகங் கூவுந்தகைமையதாகுமே," யென் றிங்ஙன முவமை கூறினார்.

இத்திருவெண்பாவான் ஞானிகட்கு மஞ்ஞானிகட்குந்தார தம்மியமு மவரை யிவரொன்றாக வழைப்பது மிழிவுடைத்தென்ற றிவித்தவாறு காண்க. (௨௰)

---

ஆயிற்பத்தியோடு மனமொழி மெய்களாலவனை வணங்கி யென்மனைக்குத் தேவரீ ரெழுந்தருளுக வென்றொருவ னழைத் தாற் செல்வரோ வெனின் மேற்கூறுகின்றார்.

கும்பிட்டுங்கீர்த்தித்துங்கோடியுபசாரம்... ... .. ✻
வம்பிட்டபத்திவலைவழியை- நம்புவரோ... ... ...✻
ஊனுறுவாதனைகளொன்றுதவப்பெருமை ... ... ... ✻
வீணைவிளைக்குமெனின... ... ... ... ... ... ...✻

கும்பிட்டுங்கீர்த்தித்துங்கோடியுபசாரம்- வம்பிட்டபத்திவ லைவழியை- நம்புவரோ—எ-து- ஒருவன் வந்தஷ்டாங்க பஞ்சா ங்கத்தோடு வணங்கியு மனேக தோத்திரங்களைப் பண்ணியுஞ் சு வாமிக ளடியேன்மனைக் கெழுந்தருளுக வென்று கோடி பேத ங்களா யுபசாரங்களைச் செய்துமிங்ஙனமழைக்குமபுனைபொ ருந்திய பத்தியாகிய வலைநெறியை ஞானிகளாயினோர்பொ ருளாகக் கருதிச்செல்வரோ ஆயினன்போடு வணங்கி யுன்னைக் கொடுக்கிறே னென்றழைத்தாலவ்வளவு மாத்திரஞ் சென்று வாங்கிக்கொள்ளலாகாதோ வெனின்.

ஊனுறுவாதனைகளொன்றுதவப்பெருமை - வீணைவிளை க்குமெனின்—எ-து- ஊணுறக்கை முதலிய வாதனைகளையும் வி

கும்பாத வந்தவளா வறுதியாகிய பெருமை யவரிருக்கு மிடத்த வர்வேண்டாமென்று தள்ளவும் விறை யவ்வூறுதிகளைக் கொடு ப்பிக்குமாயின்.—எ-று.

உபசாரமிருதியைக் கோடியென்று மொருவரு மங்ஙன ஞ்செய்யக்கடை தின்மைபால் "வம்பிட்ட,, வென்றுங்கூறினார்.

"ஊறுதிவாதனைக,,ளனவே நோய் குளிர்கட்குமருந்து முறையுனும் வேண்டாமென்பதாயிற்று. (உக)

---

தாமூறுதிகளை விரும்பி யொருவரைப் பின் சேறலாகாத ன்றி பொருவான்போடும் வணங்கியூறுதி கொடுத்தற்குத்தம்ம னைக் கழைத்தாலுஞ் செல்லாதிருப்ப தேதுகாரணமெனினம்ம ற்கூறுகின்றார்.

கருமந்திரிவிதத்திற்கட்டவிழுங்கால ... ... ... ... ...*
மரவுந்தவளையும்போலாகி- யிருதலையிற் ... ... ...*
கொள்ளிபெறும்பாயுடம்பேகூற்றுகித்தோற்றுமெனி...*
னுள்ளியருமூருமென்றாதும் ... ... ... ... ... ... *

கருமந்திரிவிதத்திற்கட்டவிழுங்கால-மரவுந்தவளையும்போ லாகி- யிருதலையிற்-கொள்ளிபெறும்பாயுடம்பேகூற்றுகித்தோ ற்றுமெனின்—எ-து- ஞானசாரியர் கிருபா நோக்கத்தானுங்க ரசரவ பரிசத்தானுந் திருவாக்கானு மவர் தாணவமாயை கரு மங்களாகிய கட்டவிழ்த்தலை யாகாநின்ற காலமாகலிற் றம்முடம் பேயாம்புத் தாமோர் தவளையும் போலாகி யவ்வுடம்பே யிருத லையு மெரிசூழ்ந்த கொள்ளியாகித் தாமக்கொள்ளிக் குழலுட் சு ழலு மெறும்பாகி யவ்வுடம்பே தம்மைப் பறித்துச் செலலுங் கூற்றுகித் தோற்று மெனின்.

உள்ளினருமூருமென்றாகும்—எ-து- இங்ஙனம் பகையாய்த் தோற்று முடம்பிற் குபசாரஞ்செய்யக்கருகின்றொரு மவரமை த்துச்செல்லுமூரு மென்ன பயனைத்தரு மவர்க்கும்—எ-று.

பாம்பு தவளையைப்பற்றி நிற்றல்போ லுடம்பவனைப்பற் றிநிற்றலானு நெருப்பவியு மளவுங் குழற்கண் வருந்திச் சுழலு மெறும்புபோ லூழ்வினையறுமளவு முடம்புள் வருந்தி யிருத்த லானுங் கூற்றுயிரைப்பிணித்துச் சேறல்போ லவனைப் பற்றிநி ன்று பிச்சையாதிக்குச் செல்லப் பண்ணுத லானு மங்ஙன முவ மைகூறினார்.

ஒருவன் றனக்குப்பகையானார்மேல் வெறுப்புண்டாவது மன்றி யப்பகைவர்க் கிதஞ்செய்வார்மேலும் வெறுப்புண்டாவது போலவர்க்குப் பகையாகிய வுடம்பினமேல்வெறுப்புண்டாவதுமன்றி யவ்வுடம்பிற் கிதஞ்செய்வார் மேலும் வெறுப்புண்டாமாகலி "னுள்ளினருமூருமென்றது,, மென்றார்.

திரிவிதத்திற் கட்டவிழு மென்றமையா லிரண்டுமலமுமுவ ருவிக்கப்பட்டது. (௨௨)

---

ஞானாசாரியனை யடைந்தோரு மோரூரின்கண் ணொருவன்செய்யு முபசாரத்தை யங்கீகரிக்கவில்லையே யாவனொருவனை யங்ஙனமங்கீகரியா திருப்பதெனின் மேற்கூறுகின்றார்.

பிறவாதயோனிபிறந்துபிறந்தெல்லா... ... ...*
மறிவாருமொன்றறியா - வறிவை... .. .....*
யறிந்துமீனண்டவழிபருந்திற்குஞ்சாய்ப் .. .....*
பிறந்தவர்களென்பார்ப்பார்பின்... ........... ..*

பிறவாதயோனிபிறந்துபிறந்தெல்லா - மறிவாருமொன்றறியா-வறிவை-யறிந்து—எ-து- தேவமானிடப் பிறப்பின்றி மற்றப்பிறவாத யோனிப்பேதங்க ளெல்லாவற் றுள்ளுமளவில் காலஞ் சென்றுசென்று பிறந்தெய்த்துப் பின்னர்த் தெய்வ கதியாய்ப் பிறவிகட்கெல்லாந் தப்பித் தன்னையறிதற் கேதுவாயவிம்மானிடப்பிறவியிற் பிறந்து மித்தேகத்துள்ளிருந்தெல்லாவற்றையுமறிவானாகிய யான்யாதொன் றறிதற் கரிதாய வறிவை யிம்மானிட தேக மனேகத்தாற்செய்த சிவபுண்ணியமேலிட்டா லிப்போதறிந்து.

மீனண்டவழிபருந்திற்குஞ்சாய்ப் - பிறந்தவர்க ளென்பார்ப் பார்பின்—எ-து - நீரினுழைந்துசெல்லு மீன்முட்டை வழித்தோன்றுங் குஞ்சாகாயத்திற்செல்லும் பருந்தின்முட்டை வழித்தோன்றுங் குஞ்சாய்ப்பிறந்ததுபோற் பிறப்புக்கேதுவாய்ப் பிறந்த பிறப்புக்கணீங்கி வீட்டிற் கேதுவாய்ப் பிறந்தோர்கண் மற்றையவரைப்போலு மூருறவென்றேன்பார்ப்பா ரிப்போது—எ-று.

முட்டைவழித்தோன்ற லிரண்டிற்கு மொத்ததாயினு மூன்னீருட் சென்றதும் பின்னாகாயத்திற் செல்வது மொவ்வாததுபோன் முன்னரு மிப்போதும் பிறந்தமானிடப் பிறப்பொ

த்தாயினு முன்பிறப்பிற் சென்றது மிப்போது வீட்டிற் செல்வது மொவ்வதாகலி னிங்ஙன மூவமை கூறினார்.

முற்பிறப்பிற் சிவபுண்ணிய மேலிட்டாலிப்பிறப்பிலெளி திற் றன்னை யறிந்தமையா லறிந்து பிறந்தவர்களென்றார்.

தன்னையறிந்தாற் றலைவனையு மறியலா மாகலி "றானொன் றறியா வுண்மை யறிந்,, தென்றார். (௨௩)

---

இங்ஙன மூறுருறவாதி யொன்றும் வேண்டார்க்குப் பெருமை தானிபாம்தெயின் மேற் கூறுகின்றார்.

அரசற்குடைமையளவற்றபேறே... ... ... ... ... ... *
பெருமையானாற்போலப்பெற்ற- வரிபிரமர்க்... *
கப்பாலாம்வாழ்வுமணுவாகியாறாமற... ... ... ... ..*
மிப்போபெருமையிவர்க்கு... ... ... ... ... ......*

அரசற்குடைமையளவற்றபேறே - பெருமையானாற்போல — எ-து - அளவற்ற திரவிய மாடைபூடணாதிகளைப்பெறும் பேறே யரசர்க்குப்பெருமையானாற்போல.

பெற்ற - வரிபிரமர்க் - கப்பாலாம்வாழ்வுமணுவாகியாறாமற- மிப்போபெருமையிவர்க்கு—எ - து - அவ்வரசர் முதலியோர் வாழ்விற்கு மேலாய வாழ்வினைப்பெற்ற வரிபிரமர் வாழ்விற்கு மப்பாலாகிய பதமுத்திவாழ்வுகளு மணுமாத்திரமின் பமா யழியுமெனக் கண்டிருந்த விகபர வாழ்வுகளி லியாதொன்றினும் பற்றற்ற விப்பற் றறுதியே யிவர்க் கிப்போது பெருமையாம்—எ-று

"அரசர்க்குடைமை,, யென்று பொதுப்படக் கூறினமையானால்வகைச்சேனை நால்வகையர ணுறுதேசங்கண் முதலியவுங் கொள்க.

அவர்க்கப்பேறு மேன்மேற் பெறுவது பெருமையானாற் போ லிவர்க்கப்பேறு மேன்மேல் விடுவது பெருமையென்பது மவர்க்கப்பேறின்மை சிறுமையாவதுபோ லிவர்க்கப்பேறுபெறுவது சிறுமையென்பதும்பேற்றின்மேற் பற்றுப் பிறவிக்கேதுப்பேற்றின்மேற் பற்றறுதி வீட்டிற் கேதுவென்பதும்பிறப்பையடைதல் சிறுமைவிட்டையடைதல் பெருமையென்பது மிதனாற்காண்க. (௨௪)

இங்ஙனமிருந்தஞானிகள் வீட்டிற் கேதுவாகிய சரிதாதிக ளைத் தான்செய்யார்களாவெனி னவர்செய்யுஞ் சரிதாதிகளி வையென்று மேற்கூறுகின்றார்.

சரிதையுடல்வெறுத்தறன்னையறிதல்...... ....*
கிரியோகங்கூடாமைகேளாத் - திருஞானம்...*
வேறின்மைபேரின்பம்விட்டுதியாமேலீடு ......*
பேறின்மைதானேபெறல்..... ...... ...... .....*

சரிதையுடல்வெறுத்தறன்னையறிதல் - கிரியோகங்கூடாமை —எ-து- அவர்களுக்குச் சரிதையாவது மலச்சுமை யாக்கம் விளைக் குங் குரம்பை யெனத்தெளிந்த விருமைக்கண் டெண்டிசருக்குதன்மு தலியவற்றா லுடலத் ததைவெறுத்தல். கிரியையாவது தத்துவமு ப்பத்தாறையு நிட்டிகளைந் தவற்றின் முடிவினின்ற தம்மை யுள் ளபடியறிதல யோகமாவ தங்ஙனந் தம்மையறிந்தவிடத் துத்த மக்குயிர்க்குயிராயிருந்த திருவருளைக்கண் டவ்வருளேவடிவாகி யிருந்து முன்னீகிநின்ற கருவிகளோடுங் கூடாமை.

கேளாத் -திருஞானம்-வேறின்மைபேரின்பம்விட்டுதியாமே லீடு- பேறின்மைதானேபெறல் —எ-து - அம்மூவகையானுமு ண்டாங்கட்டறியலாகாத வழகியஞானமாவதவ்வருளே வடிவா யிருந்து தாஞ்சிறிதுந் தோன்றாது பரையே யாகிய வேறின் மையினையு மதன்மேற் பேரின்பம் விட்டுத் தோன்றாதமேலீட் டினையு மிவ் வின்பத்தைப் பெற்றோ மென்னும் பேறின்மையும் பெறுதருனேயாம்.—எ-று.

ஞானசாரியர் மவுனமொழியா லறிவிக்க வறிதலாற் "கே ளாத்திருஞான,, மென்று மின்ப மேலிடாமுன் விட்டுத்தோன் றலான் "விட்டுதியாமேலீ,, டென்றுங் கூறினார். பேறின்மையி ன்பாதீதம்.

கும்பிட்டென்னுந் திருவெண்பாமுதலிவை யைந்துந் திரு வெண்பாவானு ஞானிகளின தியற்கைநெறிகளினது முறைமை யறிவித்தவாறுகாண்க. (௨௫)



துறவு முற்றிற்று.

ஆக திருவெண்பா - ௱௮௯.

திருச்சிற்றம்பலம்.

[௨௪]



திருச்சிற்றம்பலம்.

எட்டாவது.

# அருளவத்தைத்தன்மை.



இங்ஙனஞ் சரியாதிகளை நீத் தூட்டுறவுபுறத் துறவுடையரா
ய்ப் பிருதிவிமுத னாதத்தத்துவ மீறாகச் சொல்லப்பட்ட தத்துவ
முப்பத்தாறையுங்கடந் தாணவவிருளையுங்கடந் தான்மதரிசன
முதலிய சுத்தாவத்தையி னிற்போரது தன்மை கூறினமையா
லிவ்வதிகாரத்திற் கருளவத்தைத்தன்மையென் றுபெயராயிற்று

உண்டொழித்துத்தேடுமுடம்பராயொன்றுமுத,
லண்டர்பதத்தப்பாலுமைம்புலத்து-மூண்டு..*
மழுங்கினர்க்குப்போகம்வருத்தமாய்த்தோன்ற....*
வெழுந்தவருள்கேட்டேனிதென்.. ...............*

உண்டொழித்துத்தேடுமுடம்பராயொன்றுமுத - லண்டர்ப
தத்தப்பாலுமைம்புலத்து- மூண்டு- மழுங்கினர்க்கு—-எ-று-ஒரு
டம்பிற் பிராரத்துவத்தை யுண்டொழித் தவ்வுடம்பி லவ்வினை
யை யுண்டொழித்தற்கிடையே யிதாகிதங்களாகிய தொடர்பா
ற்றேடு மாகாமியத்தாற்றொன் றுதொட்டுவரு முடம்புகளையுடை
யரா யிப்பூலோகமாகிய வொன் றுமுதற் றேவர் பதவிக் கப்பா
லுமாண்டாண்டுச் சென்றிருந் தைம்பொறிகளானு மவ்வவ்வுட
ம்புகட்கேற்ற விடய போகங்களை யின்பமாகக்கண்டுண்டளவில்
காலந்தழும்பேறினார்க்கு.

போகம்வருத்தமாய்த்தோன்ற - வெழுந்தவருள்கேட்டேனி
தென்—-எ-று-அப்போ தின்பமாய்த்தோன்றியபோகமிப்போ
து துன்பமாய்த் தோன்ற வுதயமாகிய திருவருள் கேட்டேனி
தென்கொல்—எ-று.

ஓர்பிரகார மின்றிச்செய்த வினையின் பேதப்படியே தநு
கரணபுவன போகங்களும் பேதித்துத் தோன்றலாற் "றேடுமு
டம்பரா யண்டர்பதத்தப்பாலுமைம்புலத்துமூண்டு மழுங்கின
ர்க்,, கென்றார்.

தீநவாதிகள் பேறிப்பதாவன - நல்லதேசத்து நல்லோர்க ளங்கீகரித்த போகத்தைப் புசித்தலானு நல்ல நினைவோடு நல்ல சொல்லோடு நற்றொழிலைச்செய்தலானும் பொல்லாததேசத்து ப்புவனபோகங்களைப்புசித்தலானும் பொல்லாத நினைவோடும் பொல்லாதசொலலோடும் புன்றொழிலைச்செய்தலானு மிவற்று ளொன்றுநன்று மொன்று தீதுமாய் மாறிமாறி வருதலானுமி வைமுதலாயவற்றாற் பேறிப்பதெனக்கொள்க.

இத்திருவெண்பாவாற் சுத்தாவத்தையினின் றருளைத் தரிசி த்தோர்க்கு விடயந் துன்பமாய்த் தோற்றுமென் றறிவித்தவா றுகாண்க. (௯)

---

**வா**சகத்துங்கோவையினுமாணிக்கமாகவழுங்... ...*
காசைத்துறைபநந்தமாமதிலே - யாசை.......*
யிருதலைப்பாலேகமெனவிரண்டாயித்தி...... .........*
லொருதலைக்காமந்துறவன்றே.................. .*

வாசகத்துங்கோவையினுமாணிக்கமாகவழுங் - காசைத்து றைபநந்தமாய் — எ - து - மாணிக்கமணிபோலாகப்புலவராலெ டுத்துவழுங்காநின்ற சங்கத்தார் முதலியோர் கூறிய வாசிரியப் பாவகளினு மாணிக்கவாசக சுவாமிக ளருளிச்செய்த திருச்சிற்ற ம்பலக்கோவையார் முதலிய கோவைகளினுங் காமதந்லை நுலக் கணமாகக் கூறப்பட்ட களவித்துறைக ளநந்தமாகும்.

அதிலே- யாசை- யிருதலைப்பாலேக மெனவிரண்டாயித் தி-லொருதலைக்காமந்துறவன்றே — எ - து - அக்களவித் துறை களுட் காமந்தலைவனுந்தலைவியுமாகிய விருவர்பாலுஞ்சமமொ த்துக் கூடுவதாகிய விருதலைக் காமமெனவு மொருவர்பான்மி குந்து மொருவர்பாற் குறைந்துங் காமமோவ்வாது கூடுவதாகி யவொருதலைக்காமமெனவு மிரண்டுள டங்குவதா மிவற்றுட் ட லைவன் விழையாதிருப்பத் தலைவிவிழைந்து பற்றுமொருதலைக் காமம்போல விடயாநந்தத்தைத் துறந்து சொரூபாநந்தத்தை ப்பெறும்பொருட்டுச் சுத்தாவத்தையி னிற்போர்க்குச்சொரூபா நந்தங் கிடைத்திலதாயினு மிவ்வாநந்தத்தையே பெற விரும்பி த்தொடர்ந்து நிற்பதன்றே துறவாவது — எ - று.

தலைவன்கூடி யின்பங் கொடாதிருப்பினுந் தலைவி தனதா சுற்பாற் பிறரை விழையா தத்தலைவனையே விழைந்து நிற்றல்

## ௱௮௯. அருளவத்தைத்தன்மை.

போற் சொரூபாநந்தந் தனக்குக் கிடைத்திலதாயினுந் தனதுத
வசகற்பால் விடயாநந்தத்தை விழையாது சொரூபாநந்தத்தை
யேவிழைந்து நிற்கவேண்டுமென்பதுந் தலைவி கற்பினைக்கண்டு
தலைவன் காருண்ணியத்தா லவட்கின்பங் கொடுத்தல்போலிவன்
றவக்கற்பினைக்கண்டு சிவங் காருண்ணியத்தாற் றனதாநந்தத்தை
யிவனுக்குக் கொடுக்குமென்பது மிவ்வுவமைக் குறிப்பகளாற்
காண்க. "வாசகம்போலிருத்தலி னாசிரியப்பாவைவாசக,, மெ
ன்றார்.

இத்திருவெண்பாவாற் சொரூபாநந்தத்தை விரும்பிச்சுத்
தாவத்தையி னிற்போர்க்குச் சொரூபாநந்தங் கிடைத்திலதாயி
னு மிவ்வாநந்தத்தையே விரும்புதலன்றி யசுத்தாவத்தையிற்றி
ருப்பி யவ்விடயாநந்தத்தை விரும்பலாகாதென்று கூறியவா
றுகாண்க. (உ)



சாத்துவிதமெட்டாய்த்தசவத்தைபாய்த்தன்மை. ..*
நீத்தவனுய்த்தானுட் பின்னேயமாய்க்-கூர்த்ததெல்
சுத்தவவத்தைத்துவட்சித்துகளற்ற... ... ... ......[லாஞ்
வத்துவிதர்க்கேதுமுறியா...... ...........................*

சாத்துவிதமெட்டாய்த்தசவத்தைபாய்த்தன்மை- நீத்தவ
னுய்த்தானுட்பின்னேயமாய்க - கூர்த்ததெல்லாஞ் - சுத்தவவ
த்தைத்துவட்சி—எ-து- ராசத தாமத காரியங்களை யெல்லாநீ
க்கிச சாத்துவித காரியமாகிய நிராசை முதலிய வெண்குணங்க
ளையு முடையவனாகி அருக்கிய நோக்க முதலிய பத்தவத்தைக
ளையு முடையனாகி இநத நற்குணங்களாற் றத்துவ ரூபத்தா
றையுங் கடந்து தனையறிந் தருளைத் தரிசித்துத் தற்போத
மடங்கினவனாகிப் பின்னர்ப்பரையே தானாகிப் பின்னர் நேயத்
தழுந்தினோனாகி யிங்ஙன மொருவ னுண்ணிதா யறிந்துசென்ற
தெல்லாஞ் சுத்தாவத்தை யநுபவங்களாகும்.

துகளற்ற- வத்துவிதர்க்கேதுமுறியா—எ- து - யித்தசுத்
தாவத்தைகளை யறிந்துசென்ற போதமற்றுச் சிவத்தோடு மிர
ண்டறக்கலந்த வத்துவிதத்தை யுடையோர்க்கு முற்கூறியவநு
பவங்களுள் யாதொன்றேனுந் தோன்றா திவர் மவுனாநந்தமா
யிருப்பர்—எ-து.

"சாத்துவிதமெட்டாவன,, நிராசை - தவம் - பொறுமை-
கிருபை-சந்தோடம்-வாய்மை- அறிவுடைமை-அடக்கமுடைமை

இவையெண்வகையுமெனக்கொள்க. 'தசவவத்தையாவன, பிர பஞ்சத்தை மாயாவடிவமாய்க்காணு தருள் வடிவாய்க் காணு மருக்கிப நோக்கமும்- கருவிகளை நிபதிகளையுஞ் சிந்தனையுமற்பி றவிபிற்பட்ட துன்பங்களை நினைத்து நெட்டுயிர்ப்பெறிதலுந் திருவருள்மேலிட்டா லுடம்பிலிளஞ் சூடெழுதலும்- ஊணுறக்களை த் துறத்தலும் ஒருவரோ டுரையாடற்குமானமெழுதலுமயுனமா யிருத்தலும் பித்தேறினாற்போலப் பிரபஞ்சப்பற்றப்புத தோன் றுதிருத்தலும்- பிராணவாயுவிறந்து மூர்ச்சித்திருத்தலும்-போ தமிறந்துநிற்றலுமாகிய விவைபத்துமெனக்கொள்க.

சுத்தாவத்தைகளோடுங்கூடி யவற்றிற்றோன்று மநுபவங்க ளைப் போதஞ் சுருங்கிநின் றறிதலாறு மப்போதந் தேய்தல்வ ளர்தற் றுத்திககதா போர்காலு பர்ந்த வநுபவமாயு மோர்காற்று ழ்ந்த வநுபவமாயுமாறித்தோன்றலானுந் "துவட்சி,,யென்றார்.

கேவலாவத்தைபோ டாணவ நீங்கிற்றாயினுமதனது காரண ப்போதமிறக்குமளவு மிருத்தலிற் 'போதத்லதத்,,துகமென்றார்

இத்திருவெண்பாவான் ஞானசாதகரிலக்கணமுஞ் சாத்தி யரதிலக்கணமுங் கூறியவாறுகாண்க. (௬)

---

அவ்வநுபவங்களை யறிந்து சொல்வதுவாக்காகலி னிவ்வாக்கி னைமவுனமாகருவது முத்தியன்றோவெனின் மேற்கூறுகின்றார்.

உரையொடுங்கிற்போதமுதிக்குமொழிவே
யருளாமதனபோக்கலைசயாப் பரையோகம்
போறுங்காதிதம்புண்ணியர்க்குப் பொயயுறியா..
தேமேறுர்கருப்பலவிதமாகும் ........................

உரைபொடுங்கிற்போதமுதிக்குமொழிவே- யருளாமதன்போக் கலைசயாப்- பரையோகம் - போறுங்காதிதம்—எ-து- வாக்கி னைமவுனமாககி னுள்ள போதந்தோன்று மாகலி னவ்வாக்கு மவுனமுத்தியன்று. ஆயிற்போதமடங்கின் முத்தியோவெனிற் போத மடங்கி னருட்டரிசனமாகலி னப்போத மடங்கன் முத் தியன்று ஆயி னருட்டரிசன நீங்குதன் முத்தியோவெனி னவ்வ ருட்டரிசன நீங்கிற் போதஞ்சிறிது மசையாத பரையோக மாக லினவ்வருட்டரிசனநீங்குதன் முத்தியன்று. ஆயிற் பரையோக நீங்குதன் முத்தியோவெனிற் பரையோகநீங்கிற் சுகப்பேறுமாக லினப்பரையோகநீங்குதன் முத்தியன்று. ஆயினச் சுகப்பேறு

# ௱௮௮ அருளவத்தைத்தன்மை.

நீங்குதன் முத்தியோவெனி னச்சுகப்பேறு நீங்குதலே சுகாதீ தமிச்சுகாதீதமே முத்திநிலை.

புண்ணியர்க்குப்பொய்யுறியா-தேனோர்க்குப்பல்விதமாகும் —எ-று - இச்சுகாதீத முத்தியையடைந்த புண்ணியர்க்கு மேற் கூறிய சுத்தாவத்தையிற் றோன்றும் பொய்களியாவுந் தோன் றா திம்முத்தியைப்பெறா தச்சுத்தாவத்தையி னிற்போர்க்களுய வம் பலவிதமாய்த் தோற்றும்—எ-று.

பனாயோகங் கூறியதற் கப்பாற் சுகாதீதங் கூறினமையா லிவற்றிற் கிடையிற்றோன்றுஞ் சுகப்பேறு வருவிக்கப்பட்டது.

பரிபூரணசிவத்திற்குத்தம்மைக்கொடுத்தலான் மெய்ஞ்ஞா னிகளைப் "புண்ணிய" ரென்றார்.

சுகாதீதத்திற்குச் சுத்தாவத்தைக் காட்சிப் பொய்யாகலிற் "பொய்யுறியா" தென்றார்.

இத்திருவெண்பாவான் முத்திநிலையீதென் றறிவித்தவாறு காண்க. (௮)



அச்சுகாதீத முத்தியையடைதற்கேதுவாகிய சுத்தாவத்தை யினிற்போரது குணங்க ளியாவை யெனின் மேற்கூறுகின்றார்.

கருவிகழலவனைநோக்காஞ்சிந்தை... . .. .... *
பெருமூச்சாம்போதம்பிறியி லருளாய்... ...*
வெதும்பியுடல்வெறுக்குமின்பாய்விகள... ... *
முதிர்ந்துறையுநாணுமொடுங்கும் .. ... ... ... *

கருவிகழலவனைநோக்காஞ்சிந்தை - பெருமூச்சாம்போதம் பிறியில்—எ-று- கருவிகணீங்கவே மலைமேனின்று நோக்குவோ ர்க்கு நிலத்தின் கண்ணுள்ள பொருள்க ளருகித் தோற்றுமாப் போலப் பிரபஞ்சமெல்லாம் பொய்யாய்த் தோற்றுவதா மக்க ருவிகளுளதோ முகமாய்நின்ற போதமவற்றைப் பிறியிலூர்த்த முகமாய்நின்று தன்னை யறியு மங்ஙனந்தன்னை யறிந்தபோ திங் ஙனமிருக்கின்றயா னென்றும்புக ளாளுங் கூழரிப் புண்டதுபோ லவ்வில்கால மக்கருவிகளா லரிப்புண்டேனேயென்னுஞ்சிந்தனை யா னெட்டுயிர்ப்புளவாம்.

அருளாய் - வெதும்பியுடல்வெறுக்குமின்பாய்விகள - மு திர்ந்துறையுநாணுமொடுங்கும்—எ- து - தன்னையறிந்த பின்னு

னருட்டரிசனமுண்டாய்ப் பின்ன ரவ்வருளே தனக்கு வடிவாகி யிம்மாயா வுடலம் வெதும்பி யிதனை வெறுப்பன் பின்ன ரானந்த முண்டா யிவ்வானந்த மேலீடாகிய வுன்மத்தந் தலைமீக்கொண்டு மவுனமாயிருப்ப னஃதன்றிப் பிரபஞ்சத்தார்க்கு நாணுவதாய நாணமுநீங்கும்.—எ-று.

"போதம்பிறியி,, லென்றதனாற் றன்னை யறிந்தெ தென்பது வருவிக்கப்பட்டது. "அருளா,, யென்றதனு லருட்டரிசனம் வருவிக்கப்பட்டது. நாணமொழிந்த லாவது நீராடல் பூசனையாதி செய்திலனென் றுலகத்தார் பழிப்பது குறித்துவருநாணமெனக்கொள்க.

இத்திரு வெண்பாவாற் கருவிகணீங்கிய விடத்து வருங் குணமுந் தன்னை யறிந்த விடத்து வருங்குணமுந் திருவருடோன்றிய விடத்து வருங்குணமு மானந்தந் தோன்றிய விடத்து வருங் குணமுங் கூறியவாறு காண்க. (௫)



வேர்க்கும்விழிததும்பும் பொய்யறியின்மெய்வெதும்பி,
யார்க்கும்விறைக்குமருளுதிப்பின்- வாக்குமன....*
நின்றுபரிபூரணமாநேயத்தேகார்க்கதமாய்க் ... ... ... *
கன்றிப்புளகிதமாங்காண்... ... ... . .. .... ... ... ...*

வேர்க்கும்விழிததும்பும் பொய்யறியின் மெய்வெதும்பி-யார்க்கும்விறைக்கும்—எ-து-பொய்யாகியகருவிகளையுள்ளபடி பொய்யா யறியின் மெய்யில் வெயர்வை யரும்பும் விழியி னீர்ததும்பு மெல்லாம்பொய் யென்றறிந்து கொண்டேனென் றுடலத்திளஞ்சுடெழ வாரவாரிப்பன் பின்னர்த் தன்னை யுள்ளபடிகண் டொன்றினையு நாடா துடல மசைவற விருப்பன்.

அருளுதிப்பின் - வாக்குமன - நின்றுபரிபூரணமாநேயத்தேகார்க்கதமாய்- கன்றிப்புளகிதமாங்காண்—எ-து - பின்னருடோன்றுமிடத்து வாக்கு மனங்களி னின்றவ்வருட் பரிபூரணமாய்த் தோன்ற விதற்குமுதலாய நேயத்தை யென்னறைக் கடைவேனென் றந்நேயத்தை நாடி மேகங் குமுறுவதுபோலா யுள்ளேகுமுறி யுளம்வெதும்பி யுடலமு ரோமாஞ்சலியாம்—எ-று.

வாக்கு மனங்களி னின் றருட் பூரணமாய்த் தோன்றுவதாவது மனத்தா னினைந்த நினைவு நினைந்த தில்லையாயும் வாக்காற் சொன்ன சொற்கள் சொன்னதில்லையாயுந் தனக்கநுபவமாய்த் தோன்றுவதா மெனக்கொள்க.

## ௱௯௰ அருளவத்தைத்தன்மை.

இத்திருவெண்பாவாற் கருவிகளைப் பொய்யென் றறிந்த விடத்து வருங் குணமுந் திருவருளுதித்த விடத்து வருங் குணமு மறிவித்தவாறுகாண்க (௬)



பேயைப்பெண்ணென் றிருந்தும் பித்தளைக்குப்பொன்றோ
மாயத்தா னுண்மைமாண்மையல் - போயத் ... [ற்று
துக்கமேபித்தாய்த் தெளிமயலாற்போ... ...................*
னடக்குமருண்மேலிட்டநாள்.............................. ......*

பேயைப்பெண்ணென் றிருந்தும்பித்தளைக்குப்பொன்றோற்று-மாயத்தா னுண்மைமாண்மையல்-போய் — எ-து- பெண்களைப் பேய்களைப்போலும் பிடித்து வாதிப்பவொன்று கண்டிருப்பதாயும பித்தளைக்குப் பொன்றோற்றப் போவதாய்க் காண்பதாயு முதலவெரிவாப்த் தோன்று மாயத்திற்குக காடி கூழ் முதலிய வூண்களியாது கிடைப்பினும் வாங்கியுண் டவைகளை மேலலைந்த மயலும்போயவற்றைமெய்ப்பொருளாகக்காணு மனமுமிறந்து.

அக்-துக்கமேபித்தாய்த்தெளிமயலாற்போ-னடக்குமருண்மேலிட்டநாள் — எ-து- அப்பொருந்த லருந்தல்களையுமவற்றிற்கேதுவாய பொன்னையும்விழைந்து நெடுநாட் பிறவித்துன்பத்தால் வருந்தினேமேயென்னு மந்தத்துக்கந்தானே விடாப்பிராந்தியாய் மவு பயித்தியங் கொண்டோனைப்போலவும் விளங்குந் திருவருண் மேலிட்டகாலத்து — எ-று.

பேய்பிடியுண்டு விடுபட்டோனுக் கோர்காலத் ததனைக்கண்டபோது பயந்தோற்றலபோன் முன் பெண்களால் வருந்தியவருத்தத்தை நோக்கி யவளைக்கண்டபோது பயந்தோற்றலானங்ஙன முவமைகூறினார்.

“பித்தளைக்குப்பொன்றோற்று,, மென் றதனினு மிழிவாய்க்கூறினமையா லோட்டுச் சின்னங்களையுஞ் சிறகற்களையும் போற் காண்பாரென்ப தாயிற்று.

எங்கும் பரிபூரணமாய வருள்வடிவாயிருத்தலானும் பொன் பெண் மண்ணானுடலென்னுமைவகையும் வெறுத் துலகத்தாரோடு மாறுப்பட் டிருத்தலானு ந “தெளிமயலாற்போ,, லென்றார்.

இத்திருவெண்பாவா லருள்மேலிட்டநா ணடக்குங் குணங் கூறியவாறுகாண்க, (௭)

மலட்டுமகனீங்கிவரக்கண்டதாய்தா......... ...*
லலத்திமகிழுமதும்போ - லுலப்பிலாக்.........*
காலங்கழிந்தவையுங் காணாத்தைக்கண்டுகளிப்.....*
பாலுமழுதுசிரிப்பார்... ........ ..... ... .. ...*

மலட்டுமகனீங்கிவரக்கண்டதாய்தா-லலத்திமகிழுமதுபோ
ல்—எ-து- நெடுநாண் மலடிருந்து பின்னரரிதாய்ப் பெற்றபு
தல்வன்றன் மனைவிட்டு நீங்கி யயன்மனையிற்சென்று மீண்டுவர
வெதிர்கண்டதாய் சென்றெடுத்து மார்போடணைத்து முன்னர
வனைப்பெறாத காலத்தையு மிப்போ தவனைப் பெற்றுக்கண்ட
காட்சியையு நினைந்து தாலாட்டுதலோ டழு தவ்வழுகை யோடு
ஞ் சிரிக்குமதுபோல.

உலப்பிலாக் காலங்கழிந்ததையுங்காணாத்தைக்கண்டுகளிப்-
பாலு மழுதுசிரிப்பார்—எ-து - திருவருளைப்பெறு தளவிறந்த
காலம் பிறவியில் வீணாளாய்க் கழிந்ததைக் கருதியவதனாலு மக்
காலங்களினும்ளார் காலமாயினுங்காணாத வத்திருவருளை யிப்போ
துகண்ட களிப்பாலு மவ்வருளைத் தோத்திரம் பண்ணலோ டழு
தவ்வழுகையோடுஞ் சிரிப்பார் திருவருண்மேலீட்டடை யப்பெ
ற்றோர்—எ-று.

"தாலலத்தியென்,, றுவமைகூறினமையா லருளைத் தோத்
திரப்பணணுதல வருவிக்கப்பட்டது. அருட்பிடத்துத்தோற்ற
லா னதனை மகவாவுவமித்துக்கூறினார். தால் தாலாட்டுதல். அல
த்தல்-அழுதல்.

இத்திரு வெண்பாவாற் கழிந்தநாட் கிரங்குதல் கூறியவா
றுகாண்க. (அ)



சுகாதீதமுத்தியைப் பெறு திங்ஙனந் திருவருண் மேலீட்
டைப்பெற்றோர்க்குப் பிறப்புண்டாகாதோவெனின் மேற்கூறு
கின்றார்.

நடைதளர்ந்துமெய்ம்மறந்துநாணமழிந்து. .........*
வுடறளர்ந்துகிழ்க்குரலிட்டேண்போய்-மடலெடுப்பாய்
சத்தாதிகெட்டுமனந்தாக்கற்றுச்சந்தழிந்த...... ... ...[ச்
பித்தர்க்குமாகாப்பிணி............... ........ ............*

நடைதளர்ந்துமெய்ம்மறந்துநாணமழிந்து- வுடறளர்ந்து
கிழ்க்குரலிட்டேண்போய்—எ-து- கருவிச்சேட்டைகளடங்குதலி

ணடைதளர்ந்தருளே வடிவாயிருத்தலி னுடம்பு மறந்துடம்பும
றந்தலிற் பிரபஞ்சிகள் பழிப்பா ரென்பது குறித்து மருநாண
மழிந் தாண்டிமேல் விருப்பின்மையா னுடாளர்ந்துமனமௌனி
யாயிருத்தலிற் கீழ்க்குறம்பேச்சா யருளமுதம் புசித்தலிற் சிற்
றூ ணுணபதாய்.

மடலெடுப்பாட்ச்-சத்தாதிகெட்டுமணர்தாக்கற்றுச்சந்தழி
ந்த-பித்தர்க்குமாகாட் பிணி—எ-து- அருளேயன்றி மற்றொ
ன்றையு நாடாமையின் மடலெடுப்பான் போலா யைந்தவாவு
மற்றமையாற் சத்தா திவிடயங்களு மிறந்திச்சத்தாதிவிடயங்களி
றந்தமையான் மன மொன்றோடுந் தாக்கற்று மன மொன்றோ
டுந்தாக்கற்றமையா லருளென றுந் தானெய்து மின்றி யிரண்ட
ற்றவிவ்வரு ளைமேற்கொண்ட பித்தர்க்குஞ் சுகாதீத முத்தியை
யடைந்தோரைப்போற் பிறவிநோயுண்டாகாது—என்று.

அருண்மேலீட்டையும் பிரபஞ்சப்பற்றொழிவையுமுடை-
யோர் தேகாந்திரியத் தறிவோடுஞ்சென்று சுகாதீதமுத்தியை ய
டைவராகலிற் "பித்தர்க்குமாகாப்பிணி" யென்றார்

இத்திருவெண்பாவா லருண்மேலீட்டை யுடையோர்க்கும்
பிறப்பின்றென் றறிவித்தவாறு காண்க. (௬)

---

குறும்பாட்டும்புன்சிரிப்புங்கூர்த்திமையாநோக்கும்.*
வெறும்போகஞ்சாய்ந்துவிழினு - மறந்த.........*
திகைப்பும்விதிர்ப்புந்திமிர்ப்பும்விறைப்பு............. ..*
முகைப்புந்தெளிந்தறிதலும்................, ..............*

குறும்பாட்டும் புன்சிரிப்புங் கூர்த்திமையா நோக்கும்—
எ-து- தாமறிந்த பாட்டுகளுட் சிலபாட்டா னருளைத் தோத்தி
ரம்பண்ணுவதாய குறும்பாட்டு மாநந்தமகிட்சியாற் றோன்று
ம்புன்சிரிப்பு முட்புறனு மவ்வாநந்த பூரணத்தை நுண்ணிதாய்
ப்பார்த்துக்கொண் டிருப்பதாய விமையா நாட்டமும்.

வெறும்போகஞ்சாய்ந்துவிழினு-மறந்த திகைப்பும்விதிர்
ப்புந்திமிர்ப்பும்விறைப்பு- முகைப்புந்தெளிந்தறிதலும்—எ-து
தாமொன்றையும் விழையா திருப்பினுந் தமது சந்நிதியிற் பொ
ய்ப் போகங்கண் மிகவுஞ்சாய்ந்துவந்து கிடப்பினுமித்துன்பங்
களீண்டேன்வந்தவென றவற்றைச்சிறிது நினையாததிகைப்பு மவ
ற்றைக்கணடபோ தடனடுக்குறுதலும் பஞ்சேந்திரியங்கட்குரிய

விடயங்க ணேர்படி னவ்விடயச்சுவை தோன்றாத் திமிர்ப்பும் பூ
தம் பேய் புலி கரடி முதலிய வந்தகாலத்துக் கற்றூண்போலத்
தேகமசைவறவிருக்கலும் விறைப்புமாநந்த மிகவும்வந்து தாக்கு
தலா னெழுந்து குதித்தாடு முகைப்பு மங்ஙனமாடிய வாநந்த
மேலீட்டாற் றோன்றா தவ்வாநந்தமேலீடு சிறிது நீங்கியபோ தி
ப்போ தியாமென்செய்தோமென்று தெளிந்தறிந்து கோடலு
மாகிய விக்குணங்க ளெல்லாம் பரையோகநீங்கியாநந்தம்பெற்
றோர்க்குத் தோன்றுவனவாம்—எ-று.

இங்ஙன மறிவுந் துறவு முடைய ஞானிகளைப் பத்தராயுள்
ளாரெல்லாரு மன்னபானங்காய் பழ மாடை முதலிய கொடுவ
ந்து வைத்து வணங்குவராகலின் "வெறும்போகஞ்சாய்ந்துவி
ழினு" மென்றார்.

வெறும்போகம் பொய்ப்போகம்- சாய்ந்தென்பது மிகு
திமேலேறிற்று.

இத்திருவெண்பாவா லாநந்தம் பெற்றோர் குண மறிவித்
தவாறுகாண்க. (௰)

—

இங்ஙனம் பூரணாநந்தம் பெற்றோர்க்காடலும் பாடலு மு
ண்டாவ தென்னையெனின் மேற்கூறுகின்றார்.

கால்வந்தவர்க்காட்டங் கைவந்தவர்க்காட்ட............*
மால்முந்திவந்தவர்வாய்ப்பாட்டு - மேல்கொண்ட.*
வாநந்தவுல்லாசத்தாச்சரியமாரறிவா.......... ...........*
ரூனம்போற்காணுமுலகு... .... ............ ..........*

கால்வந்தவர்க்காட்டங் கைவந்தவர்க்காட்ட- மால் முந்திவந்
தவர்வாய்ப்பாட்டும்—எ-து- பிறவி முடவராயிருந் திடையிற்
றெய்வகதியாற் கால்நடக்க வந்தவர்க் காட்ட முண்டாவதுபோ
லுங் கைவராதிருந் திடையி லங்ஙனங் கைவந்தோர்க் காட்ட மு
ண்டாவதுபோலுந் தாங்கூடி யநுபவித்த பெண்மேலாசை த
லைமீக்கொண்டு வந்தவர் வாய்ப்பாட்டுப்போலும்.

மேல்கொண்ட- வாநந்தவுல்லாசத்தாச்சரியமாரறிவா- ரூ
னம்போற்காணுமுலகு—எ-து- தம்மை மறைந்து மேற்கொண்
டெழுந்த வாநந்த வுல்லாச வதிசயத்தா லவர்க் காடலும் பாட
லுமுண்டா மவ்வாநந்தாதிசயத்தை யதனைப்பெற்ற ஞானிகளறி

வதன்றி மற்றை யாரறிவா ரவர்க்காடல் பாடல்களைப் பயித்திய மிகுதியா லுண்டாவனபோற் காண்பாருலகத்தார்—எ-று.

நெடுநாட் காலுங் கையும் வராதிருந் திடையி லவை வந் தோர்க் காட்டமுண்டாவதும்பா லளவிறந்த காலமு மலசசிறை யிற்கிடந்தோர்க் கிப்போ தச்சிறை விடுபலைபாய்ப பரிபூரணவ டிவைப் பெற்றமையா னிவர்க்காடலுந் தாமநுபவித்த பெண் ணின்பவாசனை யுளத்திருத்தலா னவர்களுப் பாடலுண்டாவது போற் றுன்பமேபோகத்தையே யளவில காலம்பொசித்தோர்க் கி ப்போது நிரதிசயாநந்தங் கிடைத்தமையாற் பாடலு முண்டெ ன்ப திவ்வுவமைகளாற் காணக.

“ஊமைபோ,, லென்றமையா லூனமன்றென்பதாயிற்று உலகென்பதாகுமெயர் “கைவந்தவர்ககாட்ட,, மெனபதற்கருத் தமோர்வித்தையாதி முன்கைவராதிருந்து பின்னகவந்தபோதா ட்டமுண்டாவதுபோலு மென்னுமாம்- “ஆநந்த,, மவுனமத னையடைந்த ஞானிகள் போதமிழந்தோராகலின்.

இத்திருவெண்பாவால் ஞானிகட்குப் பூரணவடிவம் பெற் றமையா லாடலும் ஆநந்தம்பெற்றமையாற் பாடலு முண்டா மென் றறிவித்தவாறுகாணக. (ருக)

---

இங்ஙன நிர்விகாரியாயிருந்தோர் கர்த்தவிகாரிகள்போலு மாடல்பாட லெங்ஙன முண்டாமெனின் மேற்கூறுகின்றார்.

> அறிவுபறிகொடுத்திவ்வாக்கையறமாறிப் .......*
> பெறுதியிழப்புதியாப்பித்தி - னறிசென்....*
> றலையற்றநீத்தமோராளற்றகப்ப ................ ..*
> லுலைவுற்றதோநிற்பதோ.......... ...............*

அறிவுபறிகொடுத்திவ்வாக்கையறமாறிப் - பெறுதியிழப்புதி யாப்பித்தி- னறிசென்று—எ-து- முன்னர் விடயா நந்தத்திற்கு த்தமதறிவைப் பறிகொடுத்ததுபோ லிப்போதுமாறிச் சொரூ பாநந்தத்திற் கவ்வறிவைப்பறிகொடுத்து முன்னர்க் கூடியிருந் தவிம்மாயாவடிவ மறந்துபோக விட்டபோ தருள்வடிவாய் மாறி ப்பெற் றவ்வருளே வடிவாகலி னேரொருளைப் பெற்றேமெ ன் னும் பேறுதியு மோர்பொருளை யிழந்தோ மென்னு மிழப் பு மிவற்றான்வரு மிதாகிதங்களுந் தோன்றாத வாநந்தப்பயித்

நிய பீக்கொண்டோரிடத்துச் சிறிதேனும் விகார முண்டாகா திதனை யறிவிற்சென்று பார்த்தறிதி இஃதனறி.

அலையற்றநீத்தமோராளற்றகப்ப - லுலைவுற்றதோநிட்டயிதோ —எ-து - அலையினறிய சாகரத்தினிற்கு மோராளுமின்றிய கப்ப லசைவுறுகின்றதோ வசைவற்று நிற்கின்றதோ வஃதெங்ங னமசைவற்று நிற்கின்றதுபோலுமவுறு நந்த சாகரத்தின்று ப்பத்தாறு தத்துவங்களுந்தற்போதமுமிறந்து நின்ற ஞானிக ளுமசைகிலரொன்றிதநிட்டாற்றுத்தாலுங்கணடுகொளக —எ-று.

“அலையற்றநீத்தத்தை,, யவுளநந்ததிற்கு மாளற்ற ருந் தலைசகருவிகளிறந்து நற்றற்கு மசைவற்ற கப்பலைப் பொதயிற ந்தஞானிகள தறிவிற்குமுவமித்தார்.

“அறிவுபறிகொடுத்த,, லாநந்தமயமாயழுந்தல். (௰௭)



இன்னுங் கூறுகின்றார்.

செகஞ்சிரிக்கத்தாஞ்சிரித்துச்சீபேயென்றேட்டி .. *
லகம்புறங்காட்டேச்சுகுற்றற்றத்-திகம்பரியாய்த்
தாநந்தப்பாடிவிண்ணிற்றட்டத்துணங்கையடித் ...... *
தாநந்தக்கூத்துநடிப்பார் .......... .................. *

செகஞ்சிரிக்கத்தாஞ்சிரித்துச்சீபேயென்றேட்டி- லகம்பு றங்காட்டேசுக நற்றற்றுத்- திகம்பரியாய்—எ-து - உலகநடை தெரியாத பேயனொருசகத்தோர் நப்பைபட்ட ராகச்சிரிப்ப ஞானநெறிதெரியாமலப்பேயனென்று தாமுமவரைப்பார்த் துச்சிரித்துப் புறந்திண்ணைப் பொருச் சாவடிகளிற் றுயிருந்த விட்டவர்வந்து சீபேயபோபோமென் றேட்டின விபாமதான் றுங் கூறு தவ்விடம்விட்டு நீங்கிப் புறங்காட்டை நன்மனமேய ற்கண் டசுத்தமென்னு மருவருப்புச் சிறிதுமற்றுத திகம்பரிக ளாயவ்விடத்திருந்து.

தாநந்தப்பாடிவிண்ணிற்றட்டத்துணங்கையடித் - தாநந் தக்கூத்துநடிப்பார்—எ-து- தமது போதநாசமானவிடத்துப் பாடிச் சிதாகாசவெளியிற் பொருந்திநின்று துணங்கைக்கூத்திற் குரித்தாம் படிகையடித் தாநந்த நடம்பண்ணுவா ரவ்வாநந் தபூரணராயினோர்—எ-று.

உலகர்க்கு ஞானிகண் மாறுபாடா யிருத்தலானும் ஞானி

கட் குலகர் மாறுபாடா யிருத்தலானுஞ் "செகஞ் சிரிக்கத்தாஞ் சிரித்" தென்றார்.

உலகத்திற்கு ஞானம்பேய் ஞானத்திற் குலகம் பேயென் னு முலகவழக்கமு மதுபிரபஞ்சமெல்லா மாநந்தபூரணமாய்த் தோற்றலிற் சும்கா.ட சுத்தமவர்க்குத் தோற்று மென்பதறிக.

"தாநந்தம்பாடி" யென்றதனாற் போதமிறந்து நின்றுபாடினா ரென்பதூஉம் "விண்ணிற் றட்ட" னடிப்ப வென்றதனாற் பரிபூரணாநந்தமாறா தடிப்பா ரென்பதுங் காண்க.

இவையிரண்டு திருவெண்பாவானும் ஞானிகள் நிருவிகாரிகளாயிருந்தே யாடுவர் பாடுவரென் றறிவித்தவாறுகாண்க. (௰௩)

---

நீர்கூறியவாறே யெல்லாவற்றையுந் துறந்து சிவவேடம்பூண்டுகொண்டு தவங்களைச்செய்து சிவாலயங்கடோறுமாடிப்பாடியழுது சிரிக்கின்றோர் நிருவிகாரிகளாமோவெனின் மேற்கூறுகின்றார்.

விபரீதப்பூணுமுடையும்விளியா..............*
லபிமான முமவராலாட்டுந் - தபசுபோற் ..*
செய்யுஞ்சடங்குந்திகைப்புஞ்சிதம்பரத்தி..........*
லையன்றனக்கறியலாம்.. ......... ...............*

விபரீதப்பூணுமுடையும்விளியா - லபிமானமுமவராலாட்டுந் தபசுபோற் - செய்யுஞ்சடங்கும் - எ-து - பார்த்தபேருக்கு விபரீதமாய்த் தோன்றும்படி சிரஞ் செவி களங்கர மார்புகளின்மிகவும்பூண்டுகொள்ளு முருத்திராக்கப் பூண்களு முத்தூளனமு மொட்டுவேட்டி யுடையும் வார்த்தையினா லியாஞ்சிவமதமென் றுபிடித்துப்பேசு மபிமானமு மவரிடத்துண்டா மாடல்பாடல் களுந் தவசுபோற்செய்யு ஞானாசாரங்களும்.

திகைப்புஞ்சிதம்பரத்தி - லையன்றனக்கறியலாம் - எ-து - அவ் வேடத்திற்கு நடைக்கு முரிய பரிபூரணஞான மகத்தின்றித் திகைத்திருத்தலுமாகிய விவை யுடையாரது கருத்தினைச் சிதாகாசத்திற் பஞ்சகிருத்திய நடநம் பண்ணுநின்ற பரமசிவனது திருவுளத்திற்கே யறியலாமன்றி மற்றையர்க் கறியலாகாது - எ-று.

ஆபரணம்போற் பூண்டுகோடலி னுருத்திராக்கத்தைப் பூணென்றார். உருத்திராக்கங் கூறினமையா லுத்தூளனம் வருவிக்கப்பட்டது.

அகத்துஞானமின்றிப் புறத் திங்ஙனங் காட்டுவனவெல்லா ந்தற்போததஆ லுண்டாவதாகலி னிவர் நிருவிகாரிகளல்லரென் பதுங்காண்க. இவர்களும் ஞானிகள்போற் பிறர்க்குத் தோற்ற லிற் "சிதம்பரத்தி லேயன்றனக்கறியலா,, மென்றார்.

இத்திருவெண்பாவான் ஞானிகள்போ னடிக்கின்றோரை ப்பொய் ஞானிகளென் றறிவித்தவாறுகாண்க. (யச)



மெஞ்ஞானிக ணடையின் றுங் கூறுகின்றார்.

**மா**லயனுமிந்திரனும்வாழுவதாய்மாளுவதாஞ் .....*
சாலமயல்பார்த்துத்தலையசைப்பர் - ஞாலமயங்.*
குன்மத்தக்கோரணிபார்த்தோகோவெனசசிரிப்பர்... *
தனைப்பார்த்தாமவர்தாந்தாம்... ... ... ... ... ...*

மாலயனுமிந்திரனும்வாழுவதாய்மாளுவதாஞ்- சாலமயல் பார்த்துத்தலையசைப்பர்- ஞாலமயங்- குன்மத்தக்கோரணிபார் த்தோகோவெனச்சிரிப்பர்- எ-து- தேவர்கட்கெல்லா மேலாய மாலென்னும் பெயரை யுடையனுசியு மயனென்னும் பெயரை யுடையனுகியு மிந்திர னென்னும் பெயரை யுடையனுகியுஞ் சி றந்துள்ளார் தத்தம் பதவிகளி லழிவின்றி வாழ்வதாய்க் கருதிக் கொண்டிருந்து பன்னுளின் மாண்டு போவதாகு மவரது மிகு ந்த வாணவ மயக்கத்தைப் பார்த்திவ்வாணவ மவர்களையும் பொ ய்யாகிய தேகாதிகளையு மெய்யாக் கருதப்பண்ணி மயக்கிற்றுக் கண்டீர் கொலோவென் றுள்ளத்து ளாடிச் சிரக்கம்பங் கொள் வர் வாணவத்தா னிவ் வுலகத்தார் மயங்கா நின்ற பயித்தியக் கோரணிக் கூத்தைப் பார்த்தோகோ வேனப் பிறர்க்குக் கேட் க்கச்சிரிப்பர்.

தனைப்பார்த்தாமவர்தாந்தாம்---எ - து - அஃதன்றி தம் மைப் பார்த்துத் தம்மைச் சிவபூரணம் விழுங்கிக் கோடலாற் காணுது தாமச் சிவபூரணந் தாமென நடநமபுரிவார்—எ-று.

மாலய னிந்திரன் முதலியோ ரிறந்து போவதாகமப் பிரமாணத்தா லறிவதாகலி னவரது "மயல்பார்த்துத்தலையசை ப்ப,, ரென்றார்- பித்தமேறினோன் றன்னுடம்பு தெரியாதுலகர் நடைக்கு மாறுபாடாய்த் திரிவதுபோ லாணவ மேலிட்டாற் ற ம்மைத் தெரியாது ஞானிக ணடைக்கு மாறுபாடாய்த் தேக போகங்களை விலழந்து கொண்டழுவகைத் தொழில்களி னுனு

# ௨௱௯௮ அருளவத்தைத்தன்மை.

பேதமாய் முயற்சிப் படலர் "ஞுன்மத்தக்கோரணி,, யென்றார். அவர்மருளான் மயங்கி நடிக்கின்றாரிவரருளாற் றெளிந்து நடிக்கின்றா ரென்பதுங் காண்க.

தாந்தா மென்ப தந்நடத்திற் கோர்தாளமு மாமெனக் கொள்க. (௰௫)

—

ஆசைமுதலானவனைத்தும்போய்நானவாம்... ...*
வாசனையுமாண்டுமறந்தறியா - நேசத் ... ... ...*
தூறும்போகவுல்லாசவூமைக்கூத்தாடிக் .... .... .... *
குறும்போக்குவந்துநடப்பார்... ... ... ... .. ...*

ஆசைமுதலானவனைத்தும்போய்நானவாம் - வாசனையுமாண்டுமறந்தறியா - நேசத் - தூறும்போகவுல்லாச வூமைக்கூத்தாடி —எ-து ஐந்தவா முதலிய கருவிகளனைத்து மிறந்து நானச்சிவத்தோ டத்துவித மானே னென்பதாகிய வாசனையுமிறந்து தற்றரிசனந் திருவருட்டரிசனங்களி னின்றே ரோர்காலை யவற்றை மறந்து மீண்டு மறிவது போன் மறந் தறியாத நேயத்துத் தோன்றும் பரிபூரணானந்த போகவுல்லாசத்தொடு மவுனக் கூத்தாடி.

குறும்போக்குவந்துநடப்பார்—எ-து- பின்னர்ச் சிறிதிடஞ்சென்று மீண்டுவந்து மூலாவுவா ரவ்வத்துவிதா நந்தம் பெற்றோர்.—எ-று.

விடயங்களிற் செல்லு மைந்தவாவு நீங்கவே யவ்விடயங்களை யறிந்து பற்றி யவற்றுளழுந்துவதாய விருவகை யிந்திரியங்களு மந்தக்கரணங்களு நீங்கு மிவைக ணீங்கவே யொழிந்த கருவிகளு நீங்குமாகலி னாசைமுதலான வனைத்தும்போ யென்றாசையை முன்வைத்துக்கூறினார். நேயத் தழுந்தியபோதுபோதமிறத்தலின் "மறந்தறியாநேச,, மென்றார்சிறுபிள்ளைகள்போலுலாவி விளையாடுவ ராகலிற் "குறும்போக்கு வந்துநடப்பா,, ரென்றார்.

இவை யிரண்டு திருவெண்பாவானு மெஞ்ஞானிக ளஞ்ஞானிகளது பொய்யுலகா சாரத்தைக் கண்டு சிரக்கம்ப னதிகளுந்தம் முண்மையு மாநந் தானுபவமுங் கண்டு நடனாதிகளுஞ் செய்வ ரென்றறிவித்த வாறு காண்க. (௰௬)

கருவிகளும் போதருமிறந்து நேயத் தழுந்தினோர் கருவிகளும் போதருமுடையாராயு மயக்கமுந் தமது தெளிவுமெய்தாமறிவாரெனின் மேற்கூறுகின்றார்.

தேடுஞ்சுகமுழுதமெல்லாங்கீழ்ப்படுத்திக் .. ... ...*
கூடுஞ்சுகம்போலக்கொள்ளாதே- நாடுநகும் ....*
பூனைக்கண்மேனிபொருப்பேறிபோதுச்சிப்... ... ....*
பானுப்போனியவலைப்பார்... ... ... ... .. ... ...*

தேடுஞ்சுகமுழுதுமெல்லாங்கீழ்ப்படுத்திக்- கூடுஞ்சுகப்போலக்கொள்ளாதே—எ-து- துக்கமுஞ்சுகமுமிவற்றிற்கு முதலாயுள்ள தேகாதிப் பிரபஞ்சமெலாமுங்கீழ்ப்படுத்திநீக்கி நேயத்தைக்கூடும் பரமுத்தர் குணம்போலச் சீவன் முத்தர் குணத்தை நீ கருதிக்கொள்ளாதே அஃதெங்ஙனமெனின.

நாடுநகும் - பூனைக்கண்மேனிபொருப்பேறிபோதுச்சிப்- பானுப்போனியவலைப்பார்—எ-து - நாட்டின்கணுள்ளார் பார்த்து நகைடாநின்ற விருட்டைச் சிறிதுமின்றி யிரவினு மறியும் பூனையினது கண்ணைப்போலுமெரிகளைமேலேறினோனைப்போலு மலைமேலேறினோனைப்போலு மத்தியானத்துச் சூரியனைப்போலு நீ யச்சீவன்முத்தரமிலையும் பார்த்தறிதி-எ-று.

பூனைக்கண்ணிற் கிரவினும் பகலினும் பொருள்கடோன்றுவம்போலு மெரிகளைமேமேலேறிக் கிருபாலுந் தோற்றுவபோலும்பொருப்பேறிக்கு நிலத்திற்பொருளும் பொருட்பிற் பொருளுந் தோற்றுமாபோலு முச்சிப் பானுவிற் குதயமாகுந் தானமு மத்தமிக்குந் தானமுந் தோற்றுமா போலவும் பிறப்பிற் றுன்பமும் வீட்டினின்பமு மவர்க்குத்தோற்றுமாகலி னிங்ஙனமுவமைகூறினார்.

இருளானறியுங் கண்ணிற் கொளியிற் பொருடோற்றாதது போற் பெத்தர்களென்பது மொளியானறியுங்கண்ணிற்கிருளிற் பொருடோற்றாததும்போற் பரமுத்தரென்பது மிருளினுமொளியினு மறியுங் கண்ணைப்போற் சீவன்முத்தரென்பதும் "பூனைக்கண்,, ணென்னு முவமைக்குறிப்பாற்காண்க.

பரமுத்தர் தநுவாதிகளை நீக்கி நேயத்தழுந்தினோர் சீவன்முத்தர் தநுவாதிகளோடுகூடியுங் கூடாமனின்று நேயத்தழுந்தினோராகலி னிச்சீவன்முத்தராவாரிவரென் றிதனுட் பகுத்தறிவித்தார் 'எரியென்பதனைக்,கரைமேலேறியென்பதனோடுங்கூட்டுக. "நாடுநகு,, மென்பது பூனைக்கண்ணிற்கடை.

[௨௯]

# உா அருளவத்தைத்தன்மை.

இத்திருவெண்பாவாற் சீவன்முத்தராய மெய்ஞ்ஞானிகள் ஜகமுகமும் அகமுகமுந் தோன்றப் பற்றுதுயார்த்தறிவாரென் றறிவித்தவாறுகாணக. (௬எ)

ஞானிகளாயினூர்மவுனமாயிருப்பதன்றியிவ்வாடலாதிகளை ச்செய்வதென்னையென்று சரிதாதியினிற்போர் சொல்லார்க ளோவெனின்மேற்கூறுகின்றார்.

சூலையும்பேயும்பிடித்துழல்வார்சும்மாநம் ... .......*
போலறிவீரென்றுரைத்தபுத்திபோன் - மூல. ... *
விருளான்மறந்தறிவாரீதென்றுனென்பா ... ... ... *
ரருளாலறிந்தறிவாரை... ... ... .. ... ... ...*

சூலையும்பேயும் பிடித்துழல்வார்சும்மாநம்- போலறிவீரெ ன்றுரைத்தபுத்திபோல்—எ-து-பொதுமாதர் கூட்டரவானவரு ஞ்சூலைநோயு நற்குணத்தை மாறுபடுத்தும் பேயும் பிடித்தவற் றான் வருந்திச் சுழல்வாரிச்சூலையும் பேயுங்கொண்டு சும்மாவெ மதறிவைப்போ னீருமறிவீரென்று நற்குணத்தோர்க்குச்சொ ன்னபுத்திபோல்.

மூல - விருளான்மறந்தறிவாரீதென்றுனென்பா- ரருளால றிந்தறிவாரை—எ-து- மூல மலவிருளாற் றம்மை மறந்து மா யாகாரியமாகிய தநுவாதிகளை யானெனதென் றறிவாரருளா லறிந்த தநுவாதிகளைப் பொய்யென்றறிந்து நீங்கித் தம்மையுந்தமக் குரிய பேரின்பத்தையு மறிந்துளாரைப் பார்த்துப் பித்தரைப் போனீர்செய்யு மாடல்பாடல்களிதென்னையென்று சொல்வ தது கொண்டவர்க்கோரிகழ்ச்சியுமின்று—எ-று.

சூலையும் பேயும் பிடித்துளோர் புத்தியை யவை பிடியாத நற்குணத்தோர் கேளாததுபோற் சகல கேவலத்தி னிற்போர் சொற்களை யவற்றைநீங்கிச் சுத்தத்திருப்போர் கேளாரென்ப திவ்வுவமையானறிக.

சூலையும் பேயுமென்றது ஏகதார விரதியா யிலிங்க விரதி யாயிருப்போர்க்குப் பொதுமாதர் கூட்டரவுமைவராசர் முத லிய மருளேற்றிக்கொள்வது நன்றென்று பிறர் கூறுவனபோ லெனபதுமாம்.

இத்திருவெண்பாவான் மெய்ஞ்ஞானிகளது ஆடலாதிகளை க்கண்டு கருமிகள் பழிப்பினு மதுபழிப்பின்பாற் பட்ட தன்றெ ன்றறிவித்தவாறு காண்க. (௬அ)

ஞானிகள் மகிமையை யுலகத்தாருஞ் சரிதாதியினிற்போரு மறியா திருத்த லேனெனின் மேற்கூறுகின்றார்.

மருண்மூகர்வாக்கறியவல்லரோமாயா... ......*
விருளேயொளியாயிருப்ப - ரருணருத்த......*
பேயனைப்பேயென்றோபித்தநாப்பாலிருட்கண்*
பார்வைக்குப்பானுப்பகை ... ... ... ... ... *

மருண்மூகர்வாக்கறியவல்லரோமாயா- விருளேயொளியாயிருப்பர்—எ-று. பித்தமேறிய வூமர்க ளல்லறி வாளர் கூறு மற்றெறிவாக்கினை யுட்கொண் டறியவல்லரோ வதுபோ லுலகத்தார் ஞானிகள் கூறுந் திருவாக்கானு மவர்களைஞானிகளென்றறியவல்லரோ வஃதன்றித் தாங்கற்ற நூலறிவுஞ் சரிதாதிகளுமாகிய மாயாவிருளைத் தாமே ஞானப்பிரகாசமாக் கருதிக் கொண்டிருப்பார்.

அருணருத்த - பேயனைப்பேயென்றோபித்தநாப்பாலிருட்கண்- பார்வைக்குப்பானுப்பகை—எ-று- மும்மலங்களையுந் தற்போதத்தையுங் கோபித்தவருளாகிய பூரணத்தைப் பிடித்த பேயனைப் பேயனென்று சொல்லார்களோ வங்ஙன மிருந்தோ ரிங்ஙன மிருந்தோரைப் பேயனென் றிகழ்வரேனெனின் மதுரமாகிய பால் பித்தமேறிய நாவிற்குப் பகையானதுபோலும் பேரொளிப்பிரகாசமாயிருந்த பானுவிருளேயொளியாகக் காணு மிருட்கண் பார்வைக்குப் பகையானதுபோலு மாநந்தமுந்திருவருளு மலமேலிட்டோ ரவர்களுக்குப் பகையா மாகலி னிவற்றைப் பெற்றஞானிகளும் பகையாத்தோற்றுவ ரிஃதே யவ ரிகழ்தற்குக்காரணமென்றறிதி—எ-று.

"மருண்மூகர் வாக்கறியவல்லரோ,, வென்ற தாலுலகத்தார்க் குவமை நூலுணர்ச்சியோடுஞ் சரிதாதிகளி னிற்போ ரிகழ்வா ரென்றது பரஞானமின்மையா லெனக்கொள்க.

"பானுப்பகை,, யென்பதனைப் பாற்பகை யென்றதனோ டுங்கூட்டுக. பகைப்பாயுமிருளாயுமாறுபடத்தோற்றலிற் "பகை,, யென்றார்.

இத்திருவெண்பாவான் ஞானிகளது மகிமையை யுலகத்தாருஞ் சரிதாதிகளி னிற்போரு மெய்யுணர்ச்சியின்மையா னறியாரென் றறிவித்தவாறுகாண்க. (௰௯)

# ௨௭௨ அருளவத்தைத்தன்மை.

ஞானிகண்மகிமையை மானிட ரறியாராயின் அறிவாரா ரெனினமேற்கூறுகின்றார்.

அடைப்புள்ளாயாளடர்ந்தவாமையாய்த்திக்கே ... *
யுதிப்பதர்யோர்ந்துழலவார்க்கூரார்-நடைப்பிணமே
யூமைப்பேயாமொனிறும்மோலமிந்தேவர் தழாஞ் .. ..*
சேமககோலாளிந்திரர்... ... ... ... ... ... ... ...*

அடைப்பள்ளாயாளடர்ந்தவாமையாய்த்திக்கே யுதிப்பதா யோர்ந்துழலவார்க்கூரார்--எ-து- நேயறிட்டைமாறுசெருத்த லின் முட்டைகளை வைத்தலையங்காக்கு மடைப்புப்போலாய்த் தாமிருந்தவிடந்தேடிச் சில ரன்றுதிகளைக் கொடுவந்து நமா வைத்து வணங்கி யுபசாரங்களைக்கூறினு மிந்திரியங்களைந்தையு மவற்றற் செல்லவொட்டா துள்ளடக்கிக்கொண்டிருத்தலினாள டர்ந்தவாமைபோலா யிவ்வுடையைத் துறந்து திகம்கலாப்பரி பூரணமாயுள்ள வுடையைத் தம்மைத் தெரியாது சூழவுமெத்திக் கொண்டிருத்தலிற் றிக்கை யுதிப்பதா யிங்ஙனந் தோந்துலாவு வார்க கூர்ங்கண்ணுள்ளார் நன்றுகூறினுந் தீதுகூறினு முறவ ரோ பகைவரோ விவர்யாவர்.

நடைப்பிணமே- யூமைப்பேயாமொனிறுமோலமிந்தேவ ர்குழாஞ் சேமக்கோலாளிந்திரர் — எ-து- அஃதன்றி நடைபா டியபிணம்போற் றிரிந்தாலொனிறு மூமைப்பேயனைப்போலிரு ந்தாலொனிறு மவராது மான்மியத்தைத் தேவர்கூட்டங்களெல்லா மறிந்து சூழ்ந்துகொண்டு தோத்திரம் பண்ணுதிற்ப ரிந்திரர்க ளவர்க கேவற்பணிவிடை செய்யுஞ் சேமக கோலாள்களாய்த் திரிவர்—எ று

அடைப்புண் முட்டைபைச் செட்டையா லடக்கிக்கோட ல்போ லண்டங்களை யெல்லாந் தமது பூரணத்தான் மறைத்துக் கொண்டிருப்பரென்பதுமாம்.

ஆளடர்ந்த போதாமை யைந்துறுப்பையு மடக்கிககோட ல்போல விடயங்க ணேர்படி னவைந்தையு மடக்கலி னிங்ஙன மூவமைகூறினார்.

உளரொன்பதூரின்கண் ணுள்ளார்மேலேறிற்று தேர்ந்துழ ல்வார்க்கூரினுள்ள ரியாவரெனக்கூட்டிக. கருவிச் சேட்டைகளி ற்ந்துநிற்றலி "னடைப்பிண,, மென்று மவுனந்தமாயிருத்தலி னூமைப்பேயென்று மொன்றினு மவாவற்றமெய்ஞ்ஞானிதே

வருலகத்து மின்மையா "லோலமிருந்தேவர்குழா,, மென்றுஞ் "சேமக்கோலானிந்திர,, னென்றுங் கூறினார்.

அந்தஞானிகட் கேவல் செய்வது மிகவுஞ் சிறப்பாகலி னவர்படிகளுடக்கோலைச் "சேமகோ,, லென்றார்

உபேந்திரருளராகலினிந்திரனென் றுபன்மையாகக்கூறினார்

இத்திருவெண்பாவால் ஞானிகண் மகிமையை மானிடர்களறியாரெனினுந் தேவர்களறிந் தேவல்புரிவாரென் றறிவித்தவாறுகாண்க. (௨௰)

---

இங்ஙனமகிமையுடைய ஞானிகளொத்தேசத்திற்செல்வரெவ்விடத்திருப்பரெனின் மேற்கூறுகின்றார்.

செத்தவரைப்போலத்திரும்பாமற்போகலுமா .... *
மெத்திசையுமொன் றென்றிருக்கலுமா-முத்தர்தமக்
கண்டமணுச்சிற்றிலாடரங்கந்தேகமலாற்... ... .. ...*
கண்டிகைக்கேதுமில்லைகாண் .. ... ... ... ... ...*

செத்தவரைப்போலத்திரும்பாமற்போகலுமா-மெத்திசையுமொன்றென்றிருக்கலுமா- முத்தர்தமக்கு—எ-து- முத்தர்தமக்குச் செத்தவரைப்போலத் தாமிருந்து நீங்கிய பதியின்மீட்டுந் திரும்பாமற் சேறலுமாகுமஃதன்றி யெல்லாம் பரிபூரணமாய்த் தோற்றலி னெமக் கெல்லாத்திக்கு மொன்றுதானேயென்றோரிடத் திருத்தலுமாகும்.

அண்டமணுச்சிற்றிலாடரங்கந்தேகமலாற் - கண்டிகைக்கேதுமில்லைகாண—எ-து- அஃதன்றித் தேகங்க ளான்மாக்கட்குச்சிற்றி லிழைத்தற் கிடமெனவு மண்டமவ் வான்மாக்கட்கு மாயாகாரணிகூத் தாடற்கோ ராடரங்கெனவுங் காண்பதல்லாம லம்முத்தர் தமக்கு வேறுகாண்கைக் கியாதொரு பொருளு மில்லை—எ-று.

உடற்கண்ணிருந்து நீங்கிய வுயிர்மீட்டும்வந் ததனுட் புகாததுபோற் றாமிருந்துநீங்கிய பதியின்மீட்டும்வந்துபுகாமையிற் "செத்தவரைப்போலத்திரும்பாமற்போகலுமா,, மென்றார்.

'அணு வென்பதான்மா, தேகஞ் சிற்றிலெனவு மண்ட மாடரங்கெனவுமாகிக்கூட்டுக. பிரபஞ்சமெல்லா மண்டபிண்டங்களுளடங்குமாகலிற் "கண்டிகைக்கேதுமில்லைகா,, ணென்றார்.

# உ௱ச அருளவத்தைத்தன்மை.

முத்தர்தமக்கென்பது நடுநின் றிருபாலுங் கொண்டு முடி தலிற்றுப்பிசமைசப்பொருள்கொளுநந்நிலத்தீபகமுமாங்காணக

இத்திருவெண்பாவான் ஞானிகள் செல்வதற் குமிருப்பதற் குந் தேசமு மிடமுங் குறிப்பி டின்றென் றறிவித்தவாறுகாண்க.

|❁|❋|❁|

அந்தஞானிகள் போகந்தவிர் ஒன்று மின்றேனெனின்மே ற்கூறுகின்றார்.

உடற்போகம்போகவுயிர்ப்பகைபோய்ப்பேறுங்... ❋
கொடுத்தானுந்தன்னறிவுங்கெட்டோர்-நடக்குமபோ
தாகாயஞ்சாணிடல்போலாவதல்லாற்பூரணர்கட்குப்... ❋
போகாதுருணமிடாபுகல்... ... ... ... ... ... ... ...❋

உடற்போகம்போகவுயிர்ப்பகைபோய்ப்பேறுங்-கொடுத்தா னுந்தன்னையுங்கெட்டோர் —எ-து-உடம்பா னனுபவிக்கும்வி டயபோகம்போக வும்போகமாகிய துன்பத்தை யின்பமபோ ன் மாறுபாடாய்த் தோற்றுவிக்கு முயர்ப்பகையாகியவாணவம் போய்ப் பேரின்பத்தைப் பெற்றோமென்னும் பேறும் போக த்தன்னையுந தனக்கறிவிப்பதாய வருளையு மிழந்துமுள்ளார்.

நடக்கும்போ - தாகாயஞ்சாணிடல்போலாவதல்லாற் பூர ணர்க்குப்- போகாதுருண்டோடுபுகல்—எ-து- ஓர்திசையிற் செ ல்லும்போ தாகாயத்தைச் சாணிட்டளப்பதுபோலப்பரிபூர ணர்களுக் தமது பூரணத்திற் றாஞ்செல்வதுபோற் றோன்றுமல் லாமலிது திசையென்று பகுத்துப்பார்த்துப்போகாதவிருமுரு முண்டுகொள்புகலுமில.—எ-று.

ஆணவத்தா லின்பமாய்த்தோன்றிய போகந் துன்பமா ய்த் தோன்றிப் போ தவ்வாணவங்கெடு மவ்வாணவங் கெடுமவ தற்றரிசனமுந் திருவருட் டரிசனமும் பலாபோக முமாநந்தப் பேறுமுண்டா மாநந்தப் பெறிழந்த விடத்துத் தானுந் தனக்க றிவித்த வருளுமின்றாகவி னுண்டாம வைக்குமின்று மிவை க்குங் காரண மிவையென் றுடற்போக விழப்பையு முயிர்ப் போக விழப்பையு மெடுத் தறிவித்தார்.

ஆகாயத்தைச் சாணிட்டளக்கும்போ தளப்பதுபோற் றோன்றி விடுத்தபோ தளந்தது மின்றுப் விடுத்தது மின்றாயிரு த்தல்போற் பூரணர்க்கு நடக்கும்போது மப்பூரணமாறுத்தனுஞ்

ணடப்பது போற்றோன்றி யோர் தானத் திருந்த விடத்து மு ன்னடந்ததா மென்பதுமிப்போதிருந்ததா மென்பதுந்தோன் றாதாகலி "னுகாயஞ்சாணிடல்போ,, லென் றுவமை கூறினார்.

இத்திருவெண்பாவான் ஞானிகட்கு நிற்குநிலைபு நடக்கு ம்போதுள்ள நடைபு மோரூரா நிற்கை யோரூர் தவிர்கையு மா கிய நியதியின்றென்பது யறிவித்தவாறு காணக. (உஉ)

---

ஆயினவர்க்கு நற்றானமுந் தீதாயதானமுஞ் சரியோவெ னின்மேற்கூறுகின்றார்.

தருவனமென் றன்றிருக்கை சாயமனையாய்வாழ்... .. *
நரவனமேய் மேல்கீழ்நடுவென் - பரமசிவன்... .. *
றாக்கற்றதுபோலருள்சிவனைச்சாராபோற்... ... ... .*
றாக்கற்றார்க்கெங்குஞ்சமன்... ... ... ... ... .. *

தருவனமென்றன்றிருக்கை சாயமனையாய்வாழ் - நரவ னமென்மேல்கீழ்நடுவென் — எ-து- தருக்களெழுந்திய சோலையா யினென்னை முட்செறிந்த வனமாயினென்னை சிவிகை கவிகை சாய்மனை முதலியன வுடையராய் வாழு நகராகிய வடவியாயி னென்ன யுத்தம மத்திம வதமமாயுள்ள தலங்களாயினென்னை

பரமசிவன் - றாக்கற்றதுபோலருள்சிவனைச்சாராபோற்-றாக் கற்றார்க்கெங்குஞ்சமன் — எ-து- பரமசிவனெல்லாவற்றோடுங் கூடியிருந்து மவற்றாட் டாக்கற் றிருந்ததுபோலுந்திருவருளா னாகிருத்தியங்களாற் றந் தன்றொடக்கவுஞ் சிவத்தைவிட்டுநீ ங்காதிருப்பதேயன்றி யிக்கிருத்தியங்களாற் றன்னையு மொழித் தச்சி வத்தைச் சாரவோமென்று சாராதவாறுபோலு மொன்றோடுந் தாக்கற்றஞானிகட்கு முற்கூறிய விடமெல்லாஞ் சரியாம்-எ-று.

கருவிகளெல்லாவற்றோடுங் கூடியிருந்து மவற்றாட் டாக்க ற்றுநிற்றலாற் "பரமசிவன,, றாக்கற்றதுபோ லென்றுந் தேகவி ந்திரிய வந்தக்கரணங்க டம்மாற் றொழிற்படினுந் தாஞ்சிவத்தை விட்டு நீங்காதிருப்பதேயன்றியிதேகவிந்திரியாதிகளினது தொ ழில்களை யொழித்தச்சிவத்தை யடைவோமென்பதின்றிப் பரி பூரணமாயிருத்தலி "னருள்சிவனைச் சாராபோ,, லென்றுங் கூ றினார்.

இத்திருவெண்பாவால் ஞானிகட்கு எவ்விடமுஞ் சமமெ ன்றறிவித்தவாறுகாண்க. (உ௩)

## ௨௱௬ அருளவத்தைத்தன்மை.

ஆயினவர்கட்கு இடந்தான் யாதெனின் மேற்கூறுகின்றார்

தன்னையருளாலறிந்து தானறிந்ததெல்லாம்போ ..*
யிம்மைப்பெருவாழ்வையெய்தினர்க்கு-முன்னே
நடந்தறிந்தபோதநசிப்பேயிருக்கு... ... ...*
மிடம்புறங்காடென்பதிலை ... ... ... ... ... ...*

தன்னையருளாலறிந்து தானறிந்ததெல்லாம்போ - யிம்மைப் பெருவாழ்வையெய்தினர்க்கு—எ - து - கருவிகளின் முப்பத்தாறையுங்கடந்து தம்மையருளாலறிந் தங்ஙனந் தம்மை யறிந்தபின்னர் தம்மையறிவித்தவருட்டரிசன முதலாய்த் தாமறிந் தவையெல்லா நீங்கி யிம்மைக்கண்ணே சுகாதீதமாகிய பெருவாழ்வை யடைந்தோர்க்கு.

முன்னே - நடந்தறிந்தபோதநசிப்பேயிருக்கு - மிடம்புறங் காடென்பதிலை—எ - து - கருவிகளையுந் தற்றரிசன முதலியவற்றையு மிதுவிதுவென் றறிந் தவற்றை நீங்கிச்சென்று சிவத்தை யறிந்ததனுள்ளிறந்த போத மீண்டெழா ததனைக் கெடுப்பதே யிருக்குமிடமன்றி யிதுசுத்தமாகிய விடமென்பது மிது புறங் காடென்பதுமின்று—எ-று.

தற்றரிசன முதலிய வற்றுளுறுதியாய் நின்றோர் மறுமைக்கண்ணடையுஞ் சுகாதீத முத்தியை யிவரிம்மைக் கண்ணே யடைந்தா ராகலி னிம்மைப்பெருவாழ்வை யெய்தின ரென்றார்.

எல்லாவற்றையு நீங்கிச் சென்றமையா "னடந்"தென்றார்.

இத்திருவெண்பாவால் ஞானிகட்குப் போத மிறந்திருக்குமிடமே கருத்தன்றிமற்றொன்றுமின்றென் றறிவித்தவாறுகாண்க.



ங்ஙனமிருந்த ஞானிகட்குச் சாதினடை சமையனடை யின்றோ வெனின் மேற் கூறுகின்றார்.

காமாதிவிட்டுக்கரமேகலமாகிப் .. .... ... ...*
பூமீதேகைகாலப்போர்த்துறங்கி-நாமகுணஞ்
சாதிகருமமெனும்வாதனையிற்றாக்கற்றார்க்... ... *
கேதுசமையமெனலாம்... ... ... ... ... .... *

காமாதிவிட்டுக்கரமேகலமாகிப்-பூமீதேகைகாலப்போர்த்து றங்கி—எ-து- காமக்குரோத லோபமோகமதமாற்சரியங்களை யெல்லாம் விட்டு நீங்கிக் கரமே யுண்கலனாகி மனைதோறும் பிச்

கையேற்றுண்டுபோதுச்சாவடி புறந் திண்ணை பாழுங் கோவின் முதலியவற்றுட் பூமியாகிய மலரணைமீது கரங்களையுந்தாள்களை யும்போர்வையாகப்போர்த்துக்கொண்டாநந்தநித்திரைபண்ணி

நாமகுணஞ் சாதிகருமமெனும்வாதனையிற் றுக்கற்றார்க் கேதுசமயமெனலாம்—எ-று- பெயர்தனஞ் சாதிகிரியை யென்னு மிவற்றின் வாசனையோடுந்தாக்கற்றமெய்ஞ்ஞானிகட் குச்சாதியாதென்றுகூறலாஞ் சமயமியாதென்றுகூறலா மாகலி னிவற்றினடைகளு மயர்க்கின்று.—எ-று.

காமாதி விட்டென் றமையான் மாயாகுணமொன்று மில லொன்பதாயிற்று.

நாமாதிகளிற் றுக்கற்றுவென்ற தவற்றின் வாசனையிற் று க்கற்றுவென்றமையா னவற்றை மறந்து போயினு ரென்பதா யிற்று.

“சாதிகரும”மென்றமையாற் சாதியேதெனலாமென்பது வருவிக்கப்பட்டது.

இத்திருவெண்பாவால் ஞானிகணடை சாதிசமயங்களோ டொவ்வா தென் றறிவித்தவாறுகாண்க. (உ௫)

---

ஞானிநடை சாதிநடை சமயநடைகளோ டொவ்வா திங் ஙனமிருப்ப தென்னையெனின் மேற்கூறுகின்றார்.

ஞானிக்குலகநடையென்றுநாம்பார்க்கிற் ... ...*
சீனக்கண்ணாடியொடுதீபமுமா-மேனோர்க்கும்*
விப்பிரட்டமேபோலவ்வரும்விகாரியோ... ... ......*
வப்பராக்கன்றியறியான் ... ... ... ... ... ... ... *

ஞானிக்குலகநடையென்றுநாம்பார்க்கிற்- சீனக்கண்ணாடி யொடுதீபமுமாம்—எ-று- ஞானியினது நடையை யுலகரது சா திநடைபோலென் றியாம்பார்ப்போமெனி னவனது நடையிரு ளிற்றீபத்தைக்கொண்டு பொருள் காண்பதுபோலுமா மிவரது நடை பகலிருளிற் சீனக்கண்ணாடிகொண்டு பொருள்காண்பது போலுமா மாகலி னிவரது நடையோ டவனது நடையொவ்வா தாகுஞ்சமயிகணடையோடொவ்வாதிருப்ப தெங்ஙனமெனின்.

ஏனோர்க்கும் - விப்பிரட்டமேபோலவேறும்விகாரியோ- வப்பராக்கன்றியறியான்—எ- று - சமயிகடத்தங் கடவுளரை த்தமக்குரிய நூல் கூறியவாறே வழிபடுவா ரவனக்கடவுளர்

யெல்லாங் கடந்துநின்ற பரிபூரண சிவத்தை யடைந்தவனாகவி
னச்சயயிக ளடைக்கு மவனை சுத்தப்பிரட்டமேபோலவொ
வ்வாது வேறா யிங்ஙனஞ் சாதிநடை சமயநடை யொவ்வா தா
யினிவ்விருவகை நடையுமில்லாத பாமரர்போலு மவன் விகாரி
யோமெனி னவன் சிவனைப்போலு நிருவிகாரியவ னிருவிகாரி
யோயானல விகாரமற் றிருக்கவேண்டுமேயன்றிக் காபிசசைசவா
ங்கியுடன் முதலிய நடை நிகழ்வானே னென்னி னங்ஙனங்
காயத்தி னிகழ்ந்ததாயினு மவனிருவிகாரமாகிய பராகமேயன்
றிவ்விகாரமாகிய பராக்கினு ளொன்றினையு மறியான் — எ-று

உலகநடை யென்றதனான் ஞானிநடைவருவிக்கப்பட்டது
ஞானிநடை தீபம்போலெனவு முலகநடை சீனக்கண்ணாடிபோ
லெனவு மாறிப் பொருள்கொள்க.

இருளிற்றீபத்தாற் பொய்ப்பொரு டோன்றுவபோல் ஞா
னதீபநடையான் மெய்ப்பொரு டோற்று மென்பது மவ்விரு
ளிற் சீனக்கண்ணாடியாற் பொய்ப்பொருள் சிறிதுந் தோற்றா
துபோன் மாயாந்தகாரத்தோடுஞ் செய்யுஞ் சாதிநடையான்
மெய்ப்பொருட் சிறிதுந் தோற்றாதென்பது மிவ்வுவமைகளாற்
காண்க.

“விகாரியோ„ வென்றமையானும் “மப்பராக்கன்றியறியா„
னென்றமையானு மவற்றிற்கிடையில் வேண்டுவன வருவிக்கப்
பட்டது.

இத்திருவெண்பாவால் ஞானி மாயாதீதமான சிவஞான
முடையனாகலிற் சாதிசமயநடையாகிய மாயைக் குட்படானெ
ன்றறிவித்தவாறு காண்க. (உசு)



ஞானியினது நடை முதலியவற்றை யறியக்கூடாதோவெ
னின் மேற்கூறுகின்றார்.

மூர்க்கனாசாரிமூடனெனப்பண்டிதனா ... *
மேற்குலமாமாசாரவித்தனெனப்-பார்க்கி...*
லளவைக்களவாகியப்பலாஞானி... ... ... ... ..*
தெளிவைத்தெளியாதனென் ... ... ... ... *

மூர்க்கனாசாரிமூடனெனப்பண்டிதனா -மேற்குலமாமாசா
ரவித்தனென—எ- து- உலகநடை சமயநடைகளினிற்போர்க்கு

னிநடையைப்பார்த்துத் தமதுநடைபோ டொவ்வாமையானிவ ன் பிரட்டு நடையையுடைய மூர்க்கனெனவு மாசார வீனனெ னவு மொன்றுமறியாத மூடனெனவுங் கூற விவேகிகளாயினு ரவனடையைப்பார்த் தெல்லாவற்றையுந் தெளிந்த பண்டிதனு மெனவு மேலாய ஞானகுலமாமெனவு மாசாரத்திற் கெல்லா மோர்விசதாமெனவுங்கூற

பார்க்கில் - அளவைக்களவாகியப்பால் ஞானி - தெளிவைத்தெ ளியாததென் —எ-து- அவனடையை விசாரிக்குமிடத் திவராலி வ்வளவென்றளவிடுதற் களவில்லவனா யிவ்வளவையுங்கடந்தப்பா லுமாகிய வந்தஞானியினது நடையினையுந் தெளிவினையு மிவ்வ ளவென்றொருவராலு மறியக்கூடாதிருந்ததென்கொலோ-எ-று.

உலகநூல் சமயநூல்களை யுணர்ந்தோர்களந்நூல்களின டையின்மையா னிகழ்ந்துகூறினர்.

ஞான நூலுணர்ந்தோர் ஞானநடையென்றறிந்து புகழ்ந் துகூறினராகலி "னளவைக்களவாகி,, யென்று மிங்ஙனஞ் செய் வோமென்று செப்பாதவனிடத்தின் ஞானநடையியல்பாம் புக ழ்தலின் ஞானநூலுணர்ச்சியாற் புகழ்ந்துகூறினாரளவையுங்க டந்துநின்றனாகலி னிம்மூவளவைக்கும் பொருட்பட "வப்பா லாஞானி தெளிவைத்தெளியாத,, தென்னென்னுங்கூறினர்.

இத்திருவெண்பாவான் ஞானியினது நடையுந் தெளிவும் யாவராலு மறிந்தளவிடக்கூடாதென் றறிவித்தவாறுகாண்க.

---

சுகாதீதத்தி னிற்போர்க்கு நடைகளில்லவாயினு மருட்டரி சன முதலியவற்றி னிற்போர்க்கு நடைகளில்லவாயினது பிரட் டன்றோவெனின் மேற்கூறுகின்றார்.

அஞ்சனக்கண்ணார்க்கருநிதியந்தோன்றுவபோ... *
னஞ்சலகைமாற்றியதிணுவர்போல்-வெஞ்சாப*
விடமேபோற்றென்று மருண்மேலிட்டால்விப்பிரட்டா.... *
மோனையின்மண்டேமொப்போர்க்கு ... ... .. ... *

அஞ்சனக்கண்ணார்க்கருநிதியந்தோன்றுவபோ - னஞ்ச லகைமாற்றிய திணுவர்போல- வெஞ்சாப - விடமேபோற்றென் றுமருண்மேலிட்டால் —எ-து- யாதானு மஞ்சனம்போட்டுப்பா ர்க்குங் கண்ணினையுடையார்க்கரிய சேமநிதி தோன்றுவபோலு ந்தயமேமேலேறியிருந்த விடத்தையும் பேயையுமாற்றி னதனாற் றெளிவுபிறந்து முன்ன ரென்செய்து கொண்டோமென் றவத்

றான்மயங்கிச்செய்த செயல்களை நாடி நாணுவானைப் போலுங் கொடியசாபத்தினால் வருந்தினோர்க ளச்சாபம் விடுதலை யானாற் போலுந் தோன்றுந் திருவருண் மேலிட்டகாலத்து.

விப்பிரட்டா - மோடையின் மண்டூகமொப்போர்க்கு— எ-து-அத்திருவருண் மேலீட்டைப்பெற்ற ஞானிநடையோடையின்மூழ்கிக்கிடக்குந் தவளைபோன் மாயாசமுத்திரத்தின் மூழ்கிகிடப்போர்க்குப் பிரட்டுநடைபோற் றோன்றும்—எ-று.

மண்மறைப்பாற் றெரியாதிருந்தநிதி யஞ்சனம் போட்டுப்பார்த்த கண்ணுளர்க்கம்மண்ணூடுருவியந்நிதிதோன்றுவபோன்மலமறைப்பாற் றெரியா திருந்தவரு ளவ்வருட்கண்ணாற் பார்த்தபோ தம்மலமறைப்புநீங்கி யவ் வருளெங்குந் தானாய்த்தோற்றுமாகலி "னஞ்சனக்கண்ணுளர்க் கருநிதியந்தோன்றுவ போ,, லென்றும் விடரும் பேயும் நீங்கியவிடத்துத் தெளிவுவந்து முன்னரவற்றான் மயங்கிச்செய்த செயல்களை நாடிநாணுவானைப் போலச் சகலகேவலங்களை நீங்கி யருளைக்கண்டவிடத்து முன்னரவற்றான் மயங்கிச்செய்த செயல்களை நாடிநாணம்வருமாகலி "னஞ்சலெகமாற்றியதினாணுவர்போ,, லென்றுந் தேவனாயிருந்துளான் சாபத்தால லெங்காதிகளாயிருந்து பின்னரச்சாபம் விடுதலையானபோது தேவத்துவத்தை யடைந்தார்போலவிறந்தகால மலமேதகந் தானாயிருந்தவ ரிப்போ தத்தகநீங்கித் தன்னையறிவொன்றுள்ளபடி யறிந்தமையால் "வெஞ்சாபவீடுபோ,, லென்றுங் கூறினார்.

"ஓடையின்மண்டூகமொப்போர்க்,, கென்றது கிணற்றுக்குட்ட வளை நாட்டுவளப்பமறியுமோவென்னு முலகவழக்கன்றிப்பான் மாயையின் மூழ்கிக்கிடப்போர்க்கு ஞானிநடை தெரியுமோவென றறிவித்தது.

இத்திருவெண்பாவால் திருவருண் மேலிட்டவிடத்துவருமநுபவமு மதனையுடையோருஞானிகளென்பது மவரதுநடையை மாயையுடையோ ரறியாரென்பது மறிவித்தவாறுகாண்க.

—||||◆||||—

நீரீண்டு கூறியவாறே துறவு ஞானநடையு முடையோரை ஞானிகளென்பதன்றி யிவை யிலலாரையு ஞானிகளென்ப தென்னையெனின் மேற்கூறுகின்றார்.

அவரவரைப்போலிருப்பர்தாமவராகார்போ... ...*
லிவரவர்க்கொப்பில்லையெனினு-மூவமைசொலின்*

வேசிபணம்வெய்யோன்வீணைவெளிபிசிறி ... ... ... *
யாசியர்போலென்கினுமாவர் ... ... ... ... ... ....*

அவரவரைப்போலிருப்பர்தாமவராகார்போ - லிவரவர்க்கொப்பில்லையெனினு-முவமைசொலின்—எ-து- குடும்பத்தோடுகூடியிருந்தும் ஞானிகளா யிருப்போ ரதிவிரு லக்குடும்பநிவிர்த்திபாயிருந்த ஞானிகளைப் போலே யிருப்ப ரிக்குடும்பத்தோடுமிருந்த ஞானிகடாம் நடையிரு லக்குடும்ப நிவிர்த்தியாயிருந்தஞானிகளைப்போலாகா ரதுபோல விந்தக்குடும்பிக ளந்தக்குடும்பத்தோடு மிருந்த ஞானிகளுக்கு நடையிருலொப்பாநிவிரு விந்தகுடும்பிக ளந்தக் குடும்பத்தோடு மிருந்த ஞானிகட்கொப்பிலரெனினுமின்னுமந்தஞானிகட்குவமைகூறுமிடத்து

வேசிபணம்வெய்யோன்வீணைவெளிபிசிறி - யாசியர்போலென்கினுமாவர்—எ-து- வேசிபோ லென்று கூறினும் பணம்போலென்றுகூறினும் வெய்யோன்போ லென்று கூறினும் வீணைபோலென்றுகூறினும் வெளிபோலென்று கூறினும் பிசிறிபோலென்றுகூறினும் யாசிரியர்போலென்றுகூறினுஞ் சரியாவார்—எ-து.

வேசி தன்மேலாசைகொண்டுவந்தார்மேற் றானுமவர்மேலாசைகொண்டாள்போலும் வாக்குக்காயங்களிற் காட்டிமனத்தினவர்மேலாசையின்றிப் பொருண்மேலாசைகொண்டிருப்பதுபோன் மனைவி முதலிய குடும்பத்தார் தம்மேலாசையுற்றிருப்பத் தாமு மவர்மேலாசையுற்றார்போலும் வாக்குக் காயங்களிற்காட்டி மனத்தி னவர்மேலாசையின்றி மெய்ப்பொருண்மேலாசையுற்றிருத்தலின் வேசியென்றும் பண மெவரெவ ரெமதெமதென் றபிமானிப்பினுந் தனக்கவர்மே லபிமான மற்றிருத்தல்போல் சுற்றத்தார்நட்பு முதலியோ ரெம்மவ ரெம்மவரென் றபிமானிப்பினுந் தாமவர்மே லபிமானமற்று.

நிர்விகாரிகளா யிருத்தலிற் பணமென்றும் வெய்யோனுலகத்தார் தொழிற்படினு மிவர்செய்யு நன்றதீது அவனுக்கின்றாயதுபோற் றமது வாக்குக் காயங்களி லியாது நிகழினுமிவற்றான்வரு மிதாகிதங்களிற்றாஞ்சாரா திருத்தலின்வெய்யோனென்றும் வீணை வாசியா திருந்தபோதும் வாசித்து விடுத்தபோதுஞ் சும்மாவிருந்து வாசிக்கும்போ தவன்பாடும் பாட்டின்படிதான்சொல்வதேயன்றி மற்றொன்றுஞ் சொல்லா தொழிதல்போ லொருவரோர்காரியம்வந்துபேசாமுன்னரும்பேசியொ

# உாயஉ அருளவத்தைத்தன்மை.

ழிந்தபின்னருந் தாமோர் காரிய விசாரணை பண்ணுது சும்மாயி
ருந்து காரியக்காறர்வந்து பேசும்போ தவர்பேசுங் காரியப் பே
ச்சு மாத்திரம்பேசி மற்றொன்றுஞ் சொல்லா தொழிதலின் வினை
யென்றும் வெளியெல்லாவற்றிற்கு மிடங்கொடுத் திருந்து மல
ற்றுட் டாக்கற்று நிற்றல்போற் குடும்பத்திற்கெல்லாந் தாம்பி
ரதானமாயிருந்து மலத்தொடுந் தாக்கற்றிருத்தலின் வெளியெ
ன்றும் விசிறி தன்னை யெடுத்து விசிறிக்கொள்வார்க்குப்பயன்
கொடுப்பதன்றி யவராற் றனக்குப்பயன் வேண்டா திருத்தல்
போற் றம்மைக்கொண்டு பிறர் பயன்படுவதன்றி யவராற் றனக்
குப் பயன் வேண்டா திருத்தலின் விசிறி யென்றும் யாசியர் கு
ற்றமுடையரையுங் குணமுடையரையுங் குணமாகப் புகழ்தல்
போ லிவர் குற்றமுடையாரையுங் குணமுடை யாரையுஞ் சம
மாகக்கண்டு நன்மொழிகூறலி னாசிய மென்றுங் கூறினார். போ
லென்கினு மென்பதனை யெல்லாவற்றோடுங்கூட்டுக.

இத்திருவெண்பாவிற் றுறந்துள ஞானிகளது வாக்குக் கா
யங்களி னிகழு ஞானிநடைக்கவ ரதீதமா யிருந்ததும்போ லிங்ஙு
னங் குடும்ப சகிதராயிருந்த ஞானிகளது வாக்குககாயங்களி னி
கழு மலகநடைக்கு மிவரதீதயா யிருப்பமொன் றறிவித்தவாறு
காண்க. (உசு)

—

இங்ஙனங் குடும்பத்தோடு கூடியிருந்தும் பற்றற்றிருப்
போரா ஞானிகளென்பது சுபாவஞ் சிவிகை கவிகை முதலிய
வற்றோடு மரசர்போல வாழ்கின்றோரையு மெங்ஙன ஞானியெ
ன்று சொல்வதெனின் மேற்கூறுகின்றார்.

தண்டிகுடையாளராய்ச்சா துரங்கப்பேரரசாய்த் ... *
தொண்டர்குழாம்போற்றச்சுகித்தாலு-முண்டுசுத்தர்*
போகத்தாரோகடர்போற்பொய்ப்போகமெய்ப்பெருக்
சாகப்போவார்கடன்றீர்த்தல்... ... ... ... ... [காய்ச்

தண்டிகுடையாளராய்ச்சா துரங்கப்பேரரசாய்த்-தொண்டர்
குழாம்போற்றச்சுகித்தாலு - முண்டுசுத்தர் - போகத்தாரோ—
எ-து- நால்வகைச் சேனையுஞ் சிவிகை கவிகை முதலியவுமுடை
யராய் வாழும்பேரரசரைப்போலச் சிவிகை கவிகை முதலியவு
டையராயடிமைக்கூட்டங்கள்சூழ்ந்துநின் றுபசரிப்பமகாபோ
கங்களை யநுபவித்தாரெனினு மலத்தொடுந் தாக்கற்றுநின்று சுத்

ததிலெ பெற்றுருமுண்ட வரிப்பிரபஞ்சிகள்போலும்போகமயமா யழுந்துவரோ வழுந்தா ரஃதெங்ஙனமெனின்.

சுடர்போற்பொய்ப்போக மெய்ப்பெருக்காய்ச் - சாகப் போவார்கடன்றீர்த்தல் — எ-று- எண்ணெய் வார்க்குந்தோறுந் தன்னிடத்திலே வாங்கிக்கொண்டு தான்மிகவும் பிரகாசிக்குந் தீபம்போற் பொய்ப்போகம் வருந்தோறு மதனைத் தற்போதத்தாற் பற்றி யநுபவியா தருட்கண்ணாற் பார்த்துத் தாமற் றநுபவித்தலினாலே மெய்ப்பொருட்காய்ப் பொய்ப் போகத்தான் மெய்ப் பொருளை மிகவும் பிரகாசமாய்த் தோன்றுமாகலி னிங்ஙனமென் றறிதியாயின் மெய்ப்பொருளை யுணர்ந்தோர் பொய்ப் போகத்தோடுங் கூடியிருந் தநுபவிப்பதென்னையெனின் விரைவில் வீழ்ந்திறக்கப் போவார் தமக்குரியரா யுள்ளார் கொடுக்கும் போகமாகிய கடனை வாங்கி யதனுள் விருப்பற்றுண்டு தீர்த்துக் கோடல்போ லவரு மித்தேகத்தை யெப்போ தொழிவோமென்னுங் கருத்தரா யிதற்கமைத்த பிராரத்தக்கடனை விருப்பற்றநுபவித்துத் தீர்த்துக் கொள்வாராகலி னவரதனோடுங் கூடி யிருத்த லிம்முறைமை யென்றறிதி — எ-று.

போகம் வருந்தோறுந் தமக்கென்று தற்போதத்தாற்பற்றி யநுபவியா தப்போதமற் றருள்வடிவாயிருந் தப்போகத்தைத் தாமநுபவிப்பது போற் சிவத்திற் காக்குவது மெய்ப் பத்தி யிப் பதியினாலே சிவமாவது போதஞ் சிறிதெழினு மதனைவிழுங்கிக் கொண்டு நின்று பிரகாசிக்குமாகலிற் "பொய்ப்போகமெய்ப்பெருக்கா" யென்றார். சாகப்போவார் போகத்தைவிரும்பா திருக்கவுஞ் சுற்றத்தாராயுள்ளா ரவனை வேண்டிக் கொடுவந்து புசிப்பித்தல போன் ஞானிகள் போகத்தை விரும்பா திருக்கவும் பிராரத்தம் வலியக் கொடுவந்து புசிப்பித்தலி னிங்ஙன முவமை கூறினார்.

இத்திருவெண்பாவாற்பிராரத்தத்தால்வந்தபெருவாழ்வின் கட் பற்றின்றி யவ்வாழ் வநுபவிப்பைப்போதத்தாற்று மநுபவியாது சிவத்துக்கு அர்ப்பிதஞ் செய்கின்றோரும் ஞானிகளே யென் றறிவித்தவாறு காண்க. (௩௰)

# உாயச அருளவத்தைத்தன்மை.

ஞானிக ளநுபவிப்பதும் பிராரத்த மற்றைய ரநுபவிப்ப
தும் பிராரத்தமாயி னவர்க்கு மிவர்க்கும் பேதமென்னையெனி
ன்மேற்கூறுகின்றார்

பெருநோவுக்கேயென்னப்பெற்றதுடற்போக
நரகெழூஉட்டுமிது நாஞ்செத்-துருவத்துத்
தாமல்லாற்போகிப்பதல்லதுவன்பர்பதங் ... *
காவலாட்கைத்தலைபோற்காண் ... ... ... .*

பெருநோவுக்கேயென்னப்பெற்றதுடற்போக-நரகெழூஉ
ட்டுமிது நாஞ்செத் - துருவத்துத் - தாமல்லாற்போகிப்ப தல்ல
—எ-து- உடலாகிய பெருநோவுக் கென்ன கருதிப்போகத்தை
யநுபவிப்பது தானே பிறவியாகிய நரகமேழினுங் கொடுசெ
ன்றவற்றிலுண்டாகிய துன்பங்களைப் பொசிப்பிக்கு மிம்மைத்தெங்
ஙனமெனி னிவ ரநுபவிக்கு மிப்பிராரத்தந் தற்போதமாண்டு
த்தேகத்துத் தாமிருப்ப தல்லாம லருள்வடிவாயிருந் தநுபவி
ப்பதல்லவாகலின்.

அதுவன்பர்பதங்-காவலாட்கைத்தலைபோற்காண்—எ-து
திருவடியைப் பிரியாது நின்ற வம்மெய்யன்பர் தம்பிராரத்தந்
தற்போதமாண்டு தேகந் தாமல்லாது திருவருடாமாயிருந்தநு
பவிப்பதாகலி னப்பிராரத்தந் தேகமிருக்கு மளவுங் காவலாட்
போலுங் கைத்தலை போலு மிருந்து தேகநீங்கும்போ தததோ
டுந்தானு நீங்குமாகலி னவர்க்கு மறுபிறவி யுளவாகாவென் றறி
தி—எ-று.

தேகந்தானும் போகந்தனதாயுங் கருதிக்கொண்டு தற்
போதத்தா லப்போகத்தைப் பற்றி யநுபவித்த லினிதாகிதங்க
ளுமிவ்விதாகிதங்களா லிருவினைகளு மிவ்விருவினைகளான் மறு
பிறவியு மிங்ஙனந் தொன்றுதொட்டு வருமாகலி "நரகெழூஉ
ட்டு" மென்றார்.

போதமிறந் திருத்தலானும் பூரணவடிவா யிருத்தலானும்
வினைசார்தற் கிடமின்மையா லவர்க்கு மறுபிறவி யின்றென்ப
துகாண்க.

உடம்பு மூப்புப்பிணிக்கிடமாகலினதனைப்பெருநோவென்றார்
"நாஞ்செத்துருவத்துத்தாமல்லாற் போகிப்பதல்ல" வென்றவ
ர்க்குண்மையாய குணங்களை யிவர்க் கின்மையென் றெடுத்துக்
கூறினமையா லவர்க்கவை வருவிக்கப்பட்டது.

'இதுவென்ப திவர் பிராரத்தமேனின்றது, 'அதுவென்ப தவர்பிராரத்தமேனின்றது, பதந்திருவடி பதத்தினையுடைய வன்பிரானைப் பொருள்கொள்க.

போகமாய்வந்து சூழ்ந்து கோடலாலும் பரமுத்தனாக வொட்டாது தேகத்தி லவனைத் தரித்துநிற்றலாலும் பிராரத்தத்தினைக் காலனாமென்றுங் கைத்தலையென்றுங் கூறினார்.

இத்திருவெண்பாவால் ஞானிகள் தேகபோகங்களிற் பற்றிலாராகி யவர் பிராரத்தமதம் மீதுகத்தோய் கழியுமென்று மஞ்ஞானிகள் பற்றுளாராகியவர் பிராரத்தமிதாகிதங்கள்வருவித்துப் பிறப்புக்கேதுவாகுமென்று மறிவித்தவாறுகாண்க. (௩௧)



ஒருவர் செய்தவினை மற்றொருவரைச்சாராமையானவர்செய்தவினை யவரைச்சாராதிருப்ப தெங்ஙனமெனின் மேற்கூறுகின்றார்.

சுகிக்கில்லை துக்கஞ்சுடுகாடுசொர்க்க ... ... ...*
மகத்துக் குஞ்சொர்க்கநரகாய்ந்தார்- சுகிப்பதுவு
மத்துவிதாநந்தர்க்காகாரமற்றது... ... ... ....*
பத்திசெய்வார்க்கேற்கும்பயன் .. ... ... .......*

சுகிக்கில்லை துக்கஞ்சுடுகாடுசொர்க்க - மகத்துக்குஞ்சொர்க்கநரகாய்ந்தார் - சுகிப்பதுவு-மத்துவிதாநந்தர்க்காகாரமற்றது -எ-து பரமசுகமே வடிவாயிருப்போர்க்குத் துக்கமென்பதில்லை துக்கமின்மையாற் சுகமுமின்றித் துரிசற்றதாகியவிடமென்னுங்கருத்தா சிறிதெழினுமதுவே நரகமாய்த்தோற்றலினசுத்தமாயுள்ள சுடுகாடேயவர்களுக்குச்சுவர்க்கமன்றித்தாமாநந்தவடிவாயிருத்தலே சுவர்க்கமெனவுந் தேகத்தாமென்றுசிறிதெழுங்கருத்தே நரகமெனவும்புறத்திற்குச்சொர்க்கநரகாய்ந்தாற்போலகத்திற்குஞ்சொர்க்க நரகாய்ந்தாரன்றியவரநுபவிப்பது மத்துவிதாநந்தமேயா மிங்ஙன மிருந்த வத்துவிதாநந்தர்க்கவ்வாகாமியவினை புசிப்பற்றுநின்றதிங்ஙனமவர்க்குப் புசிப்பற்றுநின்றாலவ்வினைதானெவ்விடத்துச் செல்லுமெனின்.

பத்திசெய்வார்க்கேற்கும்பயன்—எ-து- அவர்மேலன்பாயிதஞ்செய்வோர்க்கும் வெறுப்பாய கிதஞ் செய்வோர்க்கு மவ்விருவினைப்பயன்களுஞ் சாருமென்றறிதி—எ-று.

## ௨௱௰௬ அருளவத்தைத்தன்மை.

ஆநந்தமேவடிவாயிருத்தலிற் றனுவில்லையவ்வடிவிற்றற்போதமின்மையாற் கரணமில்லை சுடுகாட்டேசுவர்ககபாட்சகாண்டலாற்புவனமில்லை யவ்வாநந்தத்தையே யநுபவித்தலாற் போகமில்லை யிங்ஙனந் தநுகரண புவனபோகங்களை யெல்லாங் கடந்துநின்றோரை யவ்வினை சாரமாட்டாமையி "னுகாரமற்றது,, வென்றார். தேகத்தையுடையவனைத் தேகியென்றாற்போலச்சுகவடிவாயிருந்தோரைச் 'சுகி,, யென்றார்.

இத்திருவெண்பாவால ஞானிகள் சிவாநந் தாநுபவராகலின் வினைகள்சாராவென்றும் அவர்க்கு ஆதாகிதங்களைச்செய்வோரிடத்தே யவைசாருமென்றுமறிவித்தவாறுகாண்க.(௯௨)

—•••◉•••—

இங்ஙனமிருந்த ஞானியடைந்த பேரின்பத்திற் குவமை யாதெனின் மேற்கூறுகின்றார்.

அரிபிரமரிந்திரர்களாதிகளார்தானச்... .. ... ...*
சரிவிரத்தனின்பத்தைச்சாற்றிற் -பரமசிவன் ... *
றானேசரிமீட்டுச்சாற்றுகிற்றான்றான்சரிவே... .... ...*
றானாவேதமறியா... ... ... ... ... ... *

அரிபிரமரிந்திரர்களாதிகளார்தானச் - சரிவிரத்தனின்பத்தைச்சாற்றில்—எ-து- அரிபிரமரிந்திரர்முதலிய தேவர்களதின்பமெல்லா மொன்றாகக்கூட்டி யவ்விரத்தனின்பத்திற் குவமை சொல்லுமிடத்துச்சரி.

பரமசிவன் -றானேசரிமீட்டுச்சாற்றுகிற்றான்றான்சரிவே-றானாவேதமறியா—எ- து- அஃதன்றிப் பரமசிவனது பரிபூரணாநந்தந் தானேசரி யின்னுஞ்சொல்லுமிடத்துத் தன்னின்பத்திற்குத்தன்னின்பமேசரி யிங்ஙனமெய்ப்பொருள்கட்கும்வேறாய்நின்றடைந்தா ரின்பத்தை வேதங்களு மிவ்வளவென் றளவிட்டறியமாட்டாது—எ-று

பரமசிவனது பரிபூரணாநந்த மெல்லாந் தாமாகிநின் றநுபவித்தலிற் பரமசிவன்றானே சரியென்றுந் தன்னின்பம்போன் மற்றியாவர்க்கு மின்மையாற்றான் றான்சரியென்று மவ்வின்பமூந் தாமாகா தவனை யநுபவிப்போரா யிருத்தலின் "வேறானா,, வென்றுங் கூறினார்.

இன்பத்திற் குவமை கூறினமையான் அவர்சரியென்றதும் அவரதின்பஞ் சரியென்று கூறப்பட்ட தஃதாகுபெயர்.

இத்திருவெண்பாவான் ஞானிகளை யின்பப் பெருமை கூறி யவாறுகாண்க. (௩௩)



சாலோகமாதிதருஞ்சைவசித்தாந்தி... ... ... *
பாலேகம்பார்க்கப்பணியுமவன் - மேலே.. *
யுருகித்திருவுளத்துக் கேற்றபணிசெய்வார்... .... *
பெருமைக்கேதுண்டோபிற... ... ... ... ... *

சாலோகமாதிதருஞ்சைவசித்தாந்தி- பாலேகம்பார்க்கப்பணியுமவன்-மேலே—எ-து- தன்னைவந்தடைந்தோரது பத்திபணிவிடைக் கேற்ப வவர்க்குச் சாலோக சாமீப சாரூப மாகிய பதமுத்திகளையுங் கொடுக்குஞ் சித்தாந்தஞானி பாலேகமா யிருந்த மெய்ப்பொருளை யறியுமபொருட்டுவந்து மனமொழி மெய்களான்வணங்கு மதிபக்குவன்மேல்.

உருகித்திருவுளத்துக்கேற்றபணிசெய்வார் - பெருமைக்கேதுண்டோபிற—எ-து- பேரன்புடைத் துள்ளுருகி யவனது திருவுளத்திற் கேற்றபணிவிடைகளைச் செய்வோரது பெருமைக்குமேலாயபெருமையிறிதுயாதுண்டு—எ-று.

வந்தடைந்தோர் பக்குவாபக்குவங்களை யறிந்து சரியாதிகளை வருவித்துச் சாலோகமாதி பதமுத்திகளைக்கொடுப்பது மதிதீவிரபக்குவனாய் வந்தோனுக்குத் தற்போதத்தைக கெடுத்து நிரதிசயவின்பத்தைக் கொடுப்பது மற்றச்சமயங்களிலின்மையால் "சாலோகமாதி தருஞ்சைவசித்தாந்தி பாலேகம்பார்க்கப் பணியுமவ" னென்றார்.

இங்ஙனமிருந்த சித்தாந்தியைப் பணியுமவனைப்பணிவோர்க்கு மம்முத்தியின்ப முண்டாமாதலின் "னுற்றபணி செய்வோர் பெருமைக்கேதுண்டோபிற" வென்றார்.

இத்திருவெண்பாவாற் சித்தாந்த ஞானம்போலே வேறு ஞானமின்றென்பது மிந்த ஞானம்பெற்றோரை வழிபடுவோர்பெருமையே பெருமையென்று மறிவித்தவாறுகாண்க. (௩௪)



காலமுடன்றேசந்திக்குக்கருமமுடற்... ... ... ... *
கோலஞ்சமயங் குறிப்பறிதல் - சீலந். ... ... .- *
தலைபோடுபோனவுயிர்தான்போலத்தன்னே... ... .. *
டிலையாஞ்சிவனேயிவன்... ... ... ... ... ... ... ... *

# உரையது அருளவத்தைத்தன்மை.

காலமுடன்றேசந்திக்குக்கருமமுடற்- கோலஞ்சமயங்குறி ப்பறிதல்-சீலம்—எ-து- இன்னகாலத் தின்னவிரதஞ்செய்வதெ ன்னுங் காலமுங் காசிமுதலியன நன்று மற்றையனதீதென்னு ந்தேசமு மின்னதிக்குநன்று இன்னதிக்குத் தீதென்னுந் திக்கு மின்னகருமஞ்செய்வ தின்னகருமந் தவிர்வதென்னுங் கருமமு முடலிற்சமைந்த வேடங்களுமவ்வேடங்கட் குரிய சமயங்களு மச்சமயங்கட்குரிய கடவுளரா யிங்ஙன மிருப்பரெனக் குறிப் போடு தியானிப்பதாய குறிப்பறிதலு மின்னசாதிக் கின்ன தா ச்சாரமென்றுசெய்யுஞ் சீலமுமாகிய விவையெல்லாம்.

தலையோடுபோனவுயிர்தான்போலத்தன்னோ-டிலையாஞ்சி வனேயிவன்—எ-து- தலைபோனவிடத்ததனோடும்போன வுயிர் போலத் தற்போதமிறந்தவிடத் ததனோடு நீங்குமாகலின் மவுன நந்தமாயிருந்த சிவனே யிவனும்—எ-று.

லகாதிமுதலிய வுறுப்புகள் போனவிடத்து மிருந்தவு யிர்தலையோடும் போனது போலப்போதஞ் சிறிதிறந்தவிடத்து மிருந்தகிரியைத்தொழில்களதுவுமிறந்தவிடத்ததனோடுநீ ங்குமாகலி னங்ஙன முவமை கூறினா ரவற்றைச்செய்தவன்றந்த மையாலிவனாற் செய்யப்படு முறையு மிலவென்பதூங் காண்க.

மவுனநந்தமா யுள்ள சிவனை யடைந்தவன் மவுனநந் தியா கலிற் "சிவனேயிவ,, னென்றார். (௬௫)



இங்ஙன மவர்க்கு விதிவருத்தங்க ளில்லையென்று நீர் கூறி யதென்னை யெனின் மேற் கூறுகின்றார்.

சாவேபெருநோன்பாச்சநந்தற்றசத்தியர்க்குத்......*
தேவாரங்காலந்தியானமறம்-பாவம் .. ... ... *
விதிவிருத்தம்பேசுகைக்குவேதாகமங்க ... ... .. ... *
ளதிசயிக்குமேனுமாப்பாரார்... ... ... ... ... ... *

சாவேபெருநோன்பாச்சநந்தற்றசத்தியர்க்குத்-தேவாரங் காலந்தியானமறம்- பாவம்- விதிவிருத்தப்பேசுகைக்கு—எ-து தற்போதமிறப்பதே பெருந் தவமாய்க்கொண் டதனைக்கெடுத் துச் சிவத்தோடு மிரண்டறக் கலந்த சத்திய ஞானிகட்குத் தே வாரமுதலிய தோத்திரங்களை யோதலுங் காலாகாலங்க ளறிந்து சிவாலயங்களிற்சென்று பணிதலு மோரோர் பாவனையைக்கரு தித்தியானித்தலுஞ் சிவபூசையாதி புண்ணியங்களைச்செய்தலு

மிவையன்றிப் பாவங்களைச் செய்தலுமாகிய விவ்விதிவிருத்தங் களுளவென்று சொல்வதற்கு.

வேதாகமங்க- ளதிசயிக்குமேலுனைப்பாரார்---எ-து- வேதங்களு மாகமங்களு மதிசயிக்குமெனி னவற்றிற்கு மேன் மற்றியாவர் சொல்வார்---எ-று.

போதஞ்சிறிதெழினு மதனைக்கெடுத்துச் சிவத்தோடுங்கலந்திருப்பதே யவர்க்குச் சகல நோன்புகளு மாகலிற் "சாம்வ பெருநோன்பாய்ச்சந்தற்றசத்திய,, மென்றார்.

அங்ஙனஞ் செய்வதே நோன்பாய்க் கொண்டோர்க்கதற்குமேன் மற்றநோன்பொன்றுமின்மையா னவர்க்கு விதிவருத்தமிலவாயின "வேதாகமங்களதிசயிக்கு,, மென்றதனு னவற்றுன் விதிவிருத்த மறிவோர்க்கு வேறு சொல்வதற் கிடமின்மையான் "மேலுனைப்பாரா,, ரென்றார்.

விதியாவது- வேதாகமங்கள், சிவபூசாதிகளைச்செய்கவென்றுகூறுவது- விருத்தமாவது - மதுபானாதிகளைவிடுகவென்று கூறுவது.

இவையிரண்டு திருவெண்பாவானும் ஞானிகட்கு விதிவிருத்தங்களிலவென் றறிவித்தவாறுகாண்க. (௩௬)

---

மோனிகளைப்பார்த்திமையாமோகமும்வெண்டிங்கண்,
மேனிபழுகெழுதாமேற்பத்தி - யான... ... ...*
பதுமாதனன்கண்ணும்பானுவும்போற்றுறு ... ... ...*
மெதிராகுஞ்சொற்பனத்திலும். ... ... ... ... ... ... *

மோனிகளைப்பார்த்திமையா மோகமும்வெண்டிங்கண்-மேனியழுகெழுதா---எ-து- அந்த ஞானிகடம்மைப்போற் சகாதிதமுத்தியைப் பெறும் பொருட்டுப் புறத்துநின்ற போதத்தை யுள்ளடக்கி யிதனைக்கெடுப்பதே விரதமாய்க்கொண்ட மவுனிகளை யிமையா நாட்டத் தோடும் பார்த் திவர்மேல் வைத்த மோகமுமுத்தானனத்தால் வெண்டிங்கள் போலும் விளங்காநின்ற வழுகெழுதக்கூடாத வவரது திருமேனியும்.

மேற்பத்தி- யான- பதுமாதனன்கண்ணும்பானுவும்போற்றுறு- மெதிராகுஞ்சொற்பனத்திலும்---எ-து - பிரமனதுநான்முகங்களினு மேன்மைபெறு பத்திபோல விளங்குவதான வெ

ண்கண்களு மக்கண்கட் கெதிர்தோன்றும் பானுவும்போ லியா
ன்கருதாதிருப்பினு மவைதாமாய் வந்தென துளக் கண்ணிற்கு
முகக்கண்ணிற்கு மெதிரே விளங்குவதாஞ் சொற்பனத்திலுஞ்
சாக்கிரத்திலும்—எ-று.

சுநாதீதமுத்தியை யடைந்த ஞானிகட்கு ஞானசாதகரைக்
கண்டாற் பாசங்களையெல்லாங்கடந் திவ்வளவு வந்தாரென் றவர்
மேற்சந்தோடமும்பிறக்குமாகலின் "மோனிகளைப்பார்த்திடை
யாமோகமு" மென்றார்.

யான் பெற்றபேறு பெறுக விவ்வையக மென்பதுமது ப
துமாதன னிமையா நாட்டத்தையு மதற்கெதிர்தோன்றும்பானு
வையு முவமைகூறின மையா னவர்மேல் வைத்த மோகத்தையு
மவரது திருமேனியையுந் தமதுளமறவாதென்பதாயிற்று.

எனைத்தனும் பெயரொஞ்சிநின்றது-சொற்பனத்திலுமென்
றவும்மையாற் சாக்கிரத்துமென்று வருவிக்கப்பட்டது.

இத்திருவெண்பாவா லெமக்கு மிங்ஙனமிருக்கு மென்று
ஞானிகளருமை யறிவித்தவாறுகாண்க. (௫௭)

---

உருதபரமசுகவுல்லாசநோக்குந்... ... .. .. *
திருமுகமும்பன்முறுவற்றேசுந் - திருநீறுந் *
தற்பாவமாண்டசரீரத்திலோர்சாத்து... ... ... *
மற்றேவெறுமனழகாம் ... ... ... ... ... ... *

உருதபரமசுகவுல்லாசநோக்குந் - திருமுகமும்பன்முறுவற்
றேசுந்- திருநீறும் —எ-து - உள்ளமுருகப் பண்ணாநின்ற பரமசு
கவுல்லாசத்தோடுங் கூடிய திருநோக்கமு மவ்வின்பக் களிப்பா
ற்றெப்வத்தாமரை மலர்ந்ததுபோல விளங்காநின்ற திருமுகமு
மவ்வின்பம்பொங்கி மென்மேலெழலாற் றோன்று மந்தகாசப்
பிரகாசமுந் திருமேனிமுழுதும் பூசுவதாகிய திருவெண்ணீற்ற
ழகும்.

தற்பாவமாண்டசரீரத்திலோர்சாத்து- மற்றேவெறுமனழகா
ம்—எ-து- பஞ்சபூதகுணங்களாகிய தற்பாவமிறந்துநின்ற திரு
மேனியிற் கூடியுங் கூடாதிருந்தஞானிகளது திருமேனியிற்றோ
ற்று மவை யங்ஙனந்தோற்றுவனவன்றி யவற்றானைவர்க்கியாது
சிறப்புமின் றவைவாளாதோற்று மழகுகளாம்—எ-று.

ஆநந்தந் தோன்றும்போ துள்ள நெக்குருகத் தோன்றுமாகலி "னூருகுபரமசுக"மென்றுஞ்சடசித்துக்களாயுள்ளபொருள்களெல்லா மவர்களுக்குச் சுகசொரூபமாய்த் தோற்றுமாகலின வர்களைப் "பரமசுகவுல்லாசமோனாக" மென்றுங் கூறினார்.

வினைபேன் மனத்துத் தேனையும் பாலையுங்கன்னலையு மமுதத்தையுமொத் தூனையு மென்பினையு முருக்காநின்ற வொண்மையனே யென்பதுமது.

பூநா ளுருந்தலைசமப்பமென்றதுபோற் றோற்றுமென்பதைச் சாத்திமென்றருமைதோன்றக்கூறினார்.

உல்லாசமோநாக்கு முதலியன வவர்கருத்தாய்த் தோற்றுதியல்பாய்த் தோற்றலி "னற்றேறவெறுமனமுளா" மென்றார். (வெறுமை) யென்பது பார்ப்பார்சொல.

இத்திருவெண்பாவான் ஞானிகளைப்புகழ்ந்து கூறியவாறு காண்க. (௬௮)

---

வாடன்மணம்போலவருந்தாவயிராக்யத் .. .*
தோடுமெலிந்தவுடப்புடனே - கூடார்....*
திருவிடயாநந்தசுகநீங்காதநோக்குந்.... ... ... *
திருமுகமுமெளனவிடாது ... ... ... ... ... *

வாடன்மணம்போலவருந்தாவயிராக்யத் - தோடுமெலிந்த வுடம்புடனே - கூடார் — எ - து - வாடற்பூவின்மணஞ் சிறிதுதோன்றுதல்போற் சிறிதுந்தோன்றும்பிராரத்த வாசனையோடும்போதத்தான் வருந்தச்செய்யாத பாசவயிராக்கியத்தோடுந் தளராநின்ற திருமேனியுடனேகூடியிருந்துங்கூடாராகிய ஞானிகளது

திருவிடயாநந்தசுகநீங்காதநோக்குந் - திருமுகமுமெளனவிடாது — எ - து - திருவிடயமாய்த் தோற்று மாநந்தமாகிய சுகமுட்போற்புறத்துநீங்காத வவ்வாநந்தத் திருநோக்குந் திருமுகமுமெளனத்துள்ளத்தை யெப்போதும்விட்டு நீங்காது — எ - று.

"வாடன்மணம்போ" லென்ற வுவமையாற் சிறிது பிராரத்தவாசனை யோடுமென்பது வருவிக்கப்பட்டது.

வருந்திச்செய்யும் போதவுடையாரதுவயிராக்கியம்போலன்றி யிவர்க் கியல்பாய்த் தோற்றலின் வருந்தா "வயிராக்கிய" மென்றார்.

விடயாநந்தம்போ லெதிரீடாய்த் தோற்றுதெதிரீடற்றவி
டத்திற் றோற்றலி "னிருவிடயாநந்த,, மென்றார்.

இத்திருவெண்பாவா லவரதநுஸமகூறியவாறுகாண்க. (௩௯)

|❁|❋|❁|

ஆயினிந்தஞானிகட்குப்பெயரியாதெனின்மேற்கூறுரார்.

தத்துவத்தின்போர்வைசரிந்ததிகம்பரிப்பே. ...*
ரத்துவிதியேகாந்தியானந்தி - சுத்தன்.........*
றுரியனவதூதன் றுறவிசிவயோகி... ... ... .....*
நிருவாணியென்விரத்தனென்... ... ... ... ... *

தத்துவத்தின்போர்வைசரிந்ததிகம்பரிப்பேர்--எ-து-முப்பத்
தாறு தத்துவங்களாகிய போர்வை சரிந்தவதனாற் றிகம்பரியாயி
ருந்த ஞானியினது பெயர்சொல்லுமிடத்து.

அத்துவிதியேகாந்தியானந்தி- சுத்தன்- றுரியனவதூதன் றுற
விசிவயோகி- நிருவாணியென் விரத்தனென்—எ- து- சிவத்தோ
டத்துவிதமா யிருத்தலி னத்துவிதி யென்று மங்ஙன மத்துவித
மாயிருப்பினுந் தானச்சிவமாகாமையா னேகாந்தியென்றும் பூ
ரணாநந்தமெல்லாந் தானாய்நின் றநுபவித்தலி னாநந்தி யென்று
மலத்திரயங்களை நீங்கிநிற்றலாற் சுத்தனென்று மேலாயபொ
ருளை யடைந்தோனாகலிற் றுரியனென்றும் வன்னாச்சிரமங்களை
க்கடந்துநிற்றலா னவதூதனென்றுந் தேகாதிப்பிரபஞ்சங்களெ
ல்லாந் துறந்துநிற்றலாற் றுறவியென்று மற்றொன்றோடுங்கூட்
டாவின்றிச் சிவத்தோடுங் கூட்டரவாயிருத்தலிற் சிவயோகியெ
ன்று மத்துவாவாறையுங் கடந்துநிற்றலா னிருவாணியென்றும
ச்சிவத்தோ டத்துவிதமாக விருக்கின்றேனென்னும் வாசனையு
மிறந்துபோயிருத்தலின் விரத்தனென்றும் நீசொல்லுதி-எ-று

உடம்பைப்போர்த்துநின்று நீங்கிய போர்வைபோ லுயி
ரைப்போர்த்துநின்று நீங்கினமையாற் "றத்துவத்தின்போர்
வைசரிந்த,, வென்றார்.

அஃதன்றிப் பூதகஞ்சுகம்- பிரகிருதிகஞ்சுகம் - கலாதிகஞ்
சுகம்- வயிந்துவகஞ்சுகம்- சத்திகஞ்சுகம்- என்னு மிப்பஞ்சகஞ்
சுகங்களையு நீக்கினாரெனினுமாம்.

அத்துவிதியென்றதாதி யிக்குணங்களெல்லா முடையவனாக
லினிப்பெயர்களெல்லா மவற்குரித்தாயின. (௪௰)

இங்ஙன மகத்துளாசையற்றுத் துறந்தோரையுமகத்துளாசையிருக்கத் துறந்தோரையு மெங்ஙனமறியலாமெனின் மேற் கூறுகின்றார்.

அடங்கத்துறந்தார்க்குமாசையறப்பாவித் ... ......*
தொடும்பக்குவந்தெரியாதோகோ - மடந்தேடிப்.*
பிச்சையாய்மூலையிற்பெண்பேச்சாய்வரினடைக்கைக் . *
கிச்சையாய்க்கைக்கெதிர்நீட்டும் ... ... ... .. ... ...*

அடங்கத்துறந்தார்க்குமாசையறப்பாவித் - தொடும்பக்குவந்தெரியாதோகோ—எ-து - அகத்தாசை யிருக்கப் புறத்தாசையறப்பாவித் தடங்கத்துறந்தாரையு மிப்பல்லா யகத்தாசையற்றடங்கத்துறந்தாரையு மவரோடு திகழும் பக்குவா பக்குவங்களினுமேல யோகோ தெரியாதோ வஃதெங்ஙனமெனின்.

மடந்தேடிப் - பிச்சையாய்மூலையிற்பெண்பேச்சாய்வரினடைக்கைக் - கிச்சையாய்க்கைக்கெதிர்நீட்டும்—எ-து- அவர்தம் பிச்சையிடு மடந்தேடிச் சென்று பிச்சையேற்பதாய்ப் புதிய மருமகப்பெண் மூலைக்கண்ணிருந்து மெல்லெனப்பேசும்பேச்சுப்போற்றயக்கெனவோ ரொடுக்கம்பற்றி யதனுளிருந்து மாரிசத்தோடு மெல்லெனப் பேசுவதா யிவர் பெரிய ரெனக் கருதிப் பிற ரன்ன வத்திர முதலியநடைக்கைகொடுவரி னந்நடைக்கைக்கிச்சையா யவர் கொடுக்குங் கைக்குத் தமது கையை யெதிர்நீட்டிவாங்குவ ரிவர்க் கெல்லா மனைதொறுஞ் சென்வதே யன்றி யோர்மடந்தேடிச்செல்வதுமோரொடுக்கம்பற்றியிருந்துமாரிசமாய்ப்பேசுவதுந்தாமிருக்குமிடத்துப்பிற ரன்னுதிகளைக்கொடுவரி னவற்றையிச்சித்து வாங்குவது மில்லையாகலி னவரது பக்குவமு மிவரது பக்குவமுந் தாமே தெரியு 'நீயறிதி—எ-று.

"ஆசையறப்பாவித் தடங்கத் துறந்தார்க்கு" மென்றமையா னங்ஙனம்பாவியா தியல்பாய்த் துறந்தாரா வருவிக்கப்பட்டது.

அடங்கத்துறத்தல் மனைவி முதலிய பற்றுக்களை யெல்லா மொருங்கே விடுத்தல் அடங்கத் துறந்தார்க்கு மென்னு நான்காம்வேற்றுமையை யிரண்டாம்வேற்றுமையாகக்கொள்க.

"தெரியாதோ" வென்பது- தெரியாதென்றோகாரந்தேறக்கிநின்றது, மடந்தேடிப்பிச்சையாய்க்கைக்கெதிர்நீட்டுமென்றவரது நடைகூறினமையா லதற்கெதிர்மறையா யிவரதுநடைவருவிக்கப்பட்டது.

## ௨௨௪ அருளவத்தைத்தன்மை.

ஒருவருக்குச் செல்வம்வரினதனை நடைக்கையென்பதுபோ ற்பிறர்வற்தன்றுதிகளைக்கொடுப்பதனை நடைக்கை யென்றார்.

—॥॥◈॥—

ஆயினகப்பற்றற்றார் துறப்பதேயன்றியகப்பற்றுடையா ர்துறக்கலாகாதோவெனின்மேற்கூறுகின்றார்.

கரையடுக்கவந்தாற்றிரையலைக்குங்கப்பல்... ... [வன்
பொருளடுத்தாற்றோன்றும்பொய்ப்போதம்-விருதின
வெற்றிக்குதிகுதித்தோன்போல்வேண்டும்விட்டதுபின்*
பற்றுமதிற்சிக்கெனநிற்பாய்... ... ... ... ... *

கரையடுக்கவந்தாற்றிரையலைக்குங்கப்பல்-பொருளடுத்தா ற்றோன்றும்பொய்ப்போதம்—எ-து- அலையலைக்குங் கரைகட ந்துசென்று கடனடுநின்ற கப்பன்மீட்டு மக்கரையடுக்கவந்தாலக் கப்பலை யலையலைக்குமாறுபோல விடயங்களைத் துறந்து சென் றுதுறவின்கண்ணின்ற நீ மீட்டு மவ்விடயங்களை யடுத்தாற்பொ ய்யாகிய வவ்விடயபோதந் தோன்றி யறிவையலைக்குமாகலின்.

விருதினவன் - வெற்றிக்குதிகுதித்தோன் போல்வேண்டும் விட்டதுபின்-பற்றுமதிற்சிக்கெனநிற்பாய்—எ-து- தன்பகைவ னைச்சயங்கொண்டாலன்றி விடேனென்னும் விருதினோன்போ லுமொருவனோடுவாதுகூறி வெற்றிக்குத்தாவுதாவினோன்போ லுநீயும் பிடித்ததுறவை முற்றுஞ் சாதிக்கவேண்டு மதனைவிடா துசாதிக்கவேண்டின் விடயங்களை யடாதே யடுத்தான் முன்னர் நீவிட்டபற்றுக்களெல்லாமிப்போதும்வந்துபற்றுமிவையுன்னை ப்பற்றா தகலும்படி யத்துறவின்கண்ணுறுதிப்படநிற்றி—எ-று.

கரையடாது கடலினடுநின்றகப்பலை யலையலையாததுபோ லவிடயங்களை யடாது துறவின்கண் ணின்றோரை விடயபோத மலையாதென்ப திவ்வுவமைக் குறிப்பாற்காண்க.

விருதினோனுக் கெவ்விதத்தானுந் தன்பகைவனைச் சயங் கொள்வதே விருதுகூடாதாயினு மவனோடும் பொருதிறத்தலே விருதுபோற் றுறவினோனுக்குத் தன் பகையென்னு மாயைப் படைகளாகிய முப்பத்தாறையுங்கடத்து வீடடைதலேதுற வங் ஙனங் கடக்கக்கூடாதாயினு மதனைக்கடத்தற் கேதுவாய சுத்த வாசனையோடுநின் றிறத்தலேதுறவாகலின் "விருதினவன்,,போ லென்றும் வெற்றிக்குறிபடத்தாவுதாவத்தொடங்கினோனு

பத்தோராமடி தாவிருனெனி னதுவெற்றியதுதலைமின் வெற்றியுமிழந்தத்தாவினும் வீழ்வ னதுபோல விடயங்களைத் துறக்கத்தொடங்கினோ னவ்விடயங்களையுந் துறந்துதற்போதத்தையுந்துறப்பதே துற வங்ஙனஞ்செய்யாதவ்விடயங்களைச்சாரினத் துறவிருன்வரும் பெருமையு மிழந்து பிறப்பினும் வீழ்வனுக லின் "வெற்றிக்குதிகுதிததோன்போ,, லென்றுங் கூறினர்.

தத்துவத்தின் போர்வை யென்னுந் திருவெண்பாமுதலிவை மூன்று திருவெண்பாவானு ஞானிகளது பெயருந் தாமுந்துறந் தவைச்சாதியாது மீட்டுஞ் சாரலாகா தென்பது மறிவித்தவாறுகாண்க. (சஉ)

அருளவத்தைத்தன்மை-முற்றிற்று.

ஆக திருவெண்பா - உ௱௲ம்க.

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

ஒன்பதாவது.



# வாதனைமாண்டார் தன்மை.



குடும்பத்தோடு கூடியிருந்து ஞானம்பெற்றக்குடும்பவாதனைமாண்டு நின்றார்தன்மை கூறினமையா லிவ்வதிகாரத்திற்கு வாதனைமாண்டார்தன்மையென்று பெயராயிற்று. துறவிகளாயிருந்து ஞானம்பெற்றோருமன்றிக் குடும்பிகளாயிருந்து ஞானம்பெற்றோரு முளராகலி னவ்வதிகாரத்தின்பின் னிவ்வதிகாரம் வைக்கப்பட்டது.

ஞானமில்லாவிடினும் வைராக்கியத்தால்விட்டுநெறியடையலாகாதோவெனின் மேற்கூறுகின்றார்.

ஞானமில்லாதவைராக்கிநன்றல்ல... ... [வெ
காணவர்க்குநோயினர்க்குங்கள்ளர்க்கு - மானது
னென்னிலைக்கேநின்றாலெனவ்விடயத்தேய்ந்தாலென் ❋
றன்னிழப்பேயின்பாத்தலம்... ... ... ... ... ❋

## ௨௨௯ வாதவினைமாண்டார் தன்மை.

ஞானமில்லாத வைராக்கியமன்றல்ல- கானவர்க்கு நோயினர்க்குங் கள்ளர்க்கு-மானதுவென்—எ-று. அகத்துப்பரிபூரணஞானமில்லாதார் புறத்துச்செய்யும் வைராக்கிய நன்றல்லவாகும். அஃதெங்ஙனமெனின் மலைகளிற் சஞ்சரிக்கும் வேடர்களுக்கும் விடாநோயினர்க்கும் பொருடருங் கள்வர்க்கும் வைராக்கிய முண்டாவதென்லையாகலி னிவரது வைராக்கியத்தோ டவரது வைராக்கிய மொக்கும்.

என்னிலைக்கே நின்றுலைவெவ்விடயத்தேய்ந்தாலென் றன்னிழப்பேயின்பார்தலம்—எ-து. அகத்துப் பரிபூரணஞானமுடைய ரரசுரிமை முதலியன வுலகவியாபாரங்களி லியாது நிலையினிற்பினு மென்னை வனிதாதி விடயங்களி லியாது விடயங்களோடுங்கூடி யிருந்தாலுமென்னை யந்நிலையு மவ்விடயங்களுமி வர்க்கிடமுமன் றின்பமுமன்று தற்போதவிழப்பே யிடமுமிப் போதவிழப்பிற் றோன்று மின்பமே யின்பமுமாம்—எ-று.

தலைமயிர்பிடித்தன் மூலபலங்களைப்புசித்த லிராப்பகற் கானிற்சரித்தல்- பனி மழை வெய்யில் காற்றுகளைப் பொறுத்தன் முதலியன கானவர் வைராக்கியம் வனிதாதி விடய போகங்களைத் துறந்திருத்தல் விடாநோயினர் வைராக்கியம் பகைவர்க்கச்சமின்றித் தம்முடலையிழந் திருளிற் சேறன் முதலியன கள்வர் வைராக்கியம் இவரது வைராக்கியங்களாற் போதவிழப்புமின்பமு மின்றாயினம்போ லவரது வைராக்கியத்தானும் போதவிழப்புமின்பமுமின்றாகலி னவரது வைராக்கியத்தை யிவரது வைராக்கியத்திற் குவமை கூறினார்.

அகத்துப்பரிபூரண ஞானமுடையார்க்கியாது நிலையினிற்பினு மியாது விடயங்களைப் புசிப்பினு மவற்றையந்தப் பரிபூரணஞானத்தாற் பார்த்தழித்தலி னவற்றோடு தாக்கற்று நிற்பதுமிங்ஙனந் தாக்கற்று நிற்றலாற் போதவிழப்பு மப்போதவிழப்பாற் பேரின்பமு முண்டாமாகலின் "என்னிலைக்கே நின்றுலைவெவ்விடயத்தேய்ந்தாலென் றன்னிழப்பே யின்பார்தல" மென்றார்.

அஃதன்றி விடயவின்பத்திற் கேதுவாய வுலகவியாபாரங்களைச்செய்வார்போ லிவரியாது நிலையினின்றொ ணினு மதனுட்டாக்கற்றுநின்ற சொரூப வின்பத்திற் கேதுவாய தற்போதவிழப்பைச் செய்வாரென்பது மவ்விடயவின்பங்களைத்தாமற்றநுபவித்தலா லவற்றையநுபவிக்குந்தோறுந் தாமற்றவிடத் துண்

டாம் பேரின்ப மேலிடுமேயன்றி யவ்வின்ப மோர்பொருளாய வர்க்குத் தோற்றாதென்பதுங்காண்க.

“தன்னிழப்பேயின்பாந்தலை,, மென்றமையா னந்நிலையு மவ்விடயமு மிடமுமின்பமுமன்றென்பது வருவிக்கப்பட்டது.

‘வைராக்கியமென்பது, வைராகமென்று கடைக்குறைந்து நின்றது. (க)

---

ஞானம்பெறுவோர்க் கில்வாழ்க்கையைத் துறக்கவேண்டாவோவெனின் மேற்கூறுகின்றார்.

எல்லாச்சமயங்களுந் துதிக்குமில்லறத்தி ... ... ... *
னில்லாமனித்தாமொன்னித்தாலென் - புல்லறிவைத்... *
தீரத்தெளிந்துசிவத்தோடும்பற்றற்று ... ... ... *
ராகிற்பிறப்பறுக்கலாம்... ... ... .. ... *

எல்லாச்சமயங்களுந் துதிக்குமில்லறத்தி - னில்லாமனித்தா மொன்னித்தாலென் — எ-து- சமயங்களெல்லா மிது நன்றானதென்று புகழ்ந்துகூறுநின்ற வில்வாழ்க்கையி னில்லாமலதனைத் துறந்தாரிதுதுறவிற்குத் தகுமென மதியாது துறந்தாலு மெனனேயித்துறவினாற் பிறப்பறுக்க கூடுமோ.

புல்லறிவைத்- தீரத்தெளிந்துசிவத்தோடும்பற்றற்று-ராகிற்பிறப்பறுக்கலாம் — எ-து- தற்போதக் கருவிடமேயாதங்களாய புல்லறிவை ஞானகுருவானவருள் விசாரித்தறிந்து தன்னைக்கெடுத்துச் சிவத்தோடிரண்டறக்கலந்து நாஞ்சிவத்தோடுங் கலந்திருக்கின்றோமென்னும் வாசனைப்பற்று மற்றொழிவரவர்க்கே பிறப்பறுக்கலா மற்றையர்க்குக்கூடாது — என்று.

சமயநூல்களெல்லா மில்லறத்தையே மேம்பாடாகக் கூறுதலி “னெல்லாச் சமயங்களுந் துதிக்கு மில்லறத்தை,, யென்றார். அறனெனப்பட்டதே யில்வாழ்க்கை யஃதும் பிறன்பழிப்பதில் லாயினன்று - என்பதுமது- “நீத்தாலொன்னித்தாலென்,, றென்றதவ்வில்வாழ்க்கையைத் துறந்தபின்னரு முடலொடுற்றதனுண் வெறுத்த லுடைதுறத்த லொடுக்கந் துறத்தன்முதலியன துறந்துநிற்றலெனக்கொள்க.

“புல்லறிவைத் தீரத்தெளிந்து சிவத்தோடும் பற்றற்றாகிற்பிறப்பறுக்கலா,, மென்றமையா லிங்ஙனந் தெளிந்து பற்று

## உஉஅ வாதவூரமாண்டார்தன்மை.

றுதியுடையா ரில்லறந் துறவறங்களினின்றாலும் பிறப்பறுப்பா, ரென்பது மிவையில்லாரியாது துறந்தாராயினும்பிறப்பறாரெ ன்பதுங்காண்க.

தற்போதங் கருவிப்போத மிரண்டும்புல்லறிவாகலிற்பொ துப்படப் புல்லறிவென்றார். திரத்தெளிதலவற்றை யுள்ளபடிய றிந்துகெடுத்தல். (உ)



மனையிழக்கிலோமன துமாறுதுமாய்த்த ... ... -*
தனையிழக்கிலோசிவனைச்சார்ந்தங்-கநுபவிக்கைப்...*
போகாததுபோகிற்பூரணமாம்பூரணந்தா... ... ...*
ளுகாதிருப்பதெவர்க்காம்... ... ... ... ... ...*

மனையிழக்கிலோமன துமாறுதுமாய்த்த-தனையிழக்கிலோ சிவனைச்சார்ந்தங் - கநுபவிக்கைப் - போகாததுபோகிற்பூரண மாம்—எ-து- நீரிங்ஙனங் கூறியவாற்றா னில்வாழ்க்கையைத் து றப்பது துறவன்றோவெனி னவ்வில்வாழ்க்கையைத் துறக்கி னன் தன்கண்ணின் றநுபவித்த விடயவாதனை மனத்தின்கண் மாறா தொழுமாகலினது துறவன்றாயின் மனத்தைமாய்ப்பது துறவோ வெனின் மனத்தைமாய்த்த தற்போதமெழுமாகலி னது துறவ ன்றாயிற் றற்போத மிழப்பதோ துறவெனி னத்தற்போதமிழ க்கிற் சிவத்தையடைந்தாண்டுச்சுகத்தையநுபவிக்கைபோகாதா கலினது துறவன்றாயிற் சுகப்பேறிழப்பது துறவோவெனினச் சுகப்பேறுபோகிற் சிவபூரணந்தானு மப்போதிங்ஙனஞ் சிவபூர ணந்தானேனென்னும் வாதனைதோன்றுமாகலி னது துறவ ன்றாயி னினித் துறவுதா னியாதெனின்.

பூரணந்தா- ளுகாதிருப்பதெவர்க்காம்—எ-து - அச்சிவபூ ரணந்தானேனென்னு வாதனையுமறந்து நிற்பது துறவு இங்ங னஞ் சிவபூரணந் தானுகாதிருப்பதாய துறவியாவர்க்குண்டாம் —எ-று.

மாய்த்த லென்பதற்குந் தனையிழத்த லென்பதற்கு மிடை யிற் றற்போத மெழுமென்பது வருவிக்கப் பட்டது.

இவைமூன்று திருவெண்பாவாலு மெய்த்துறவாவ திது வென்றறிவித்தவாறுகாண்க. (ரு)

இல்வாழ்க்கையோடு கூடியிருந்து மித்துறவெய்தினோ ரைத் துறவிகளென்று சொல்லப்படுமோ வெனின் மேற் கூறு கின்றார்.

மாயாபோகத்தரசாய்வாழ்ந்தாலுமாமணிபோற் .. *
றோயாதவரோ துறந்தோர்க- டோய்வாரேற் ... *
சேரும்விதைபோலத்தீர்ந்தவிடத்தேதிரும்பும்... ... *
வேறொன்றதுவேவினை... ... ... ... ... ... ... ... ... *

மாயாபோகத்தரசாய்வாழ்ந்தாலுமாமணிபோற்- றோயா தவரோ துறந்தோர்கள்—எ-து - மாயாபோகத்துக் கெல்லா மர சராகி யப்போகங்களை யநுபவித்து வாழ்ந்தாராயினு மகத்தா கிய மாணிக்க மணியொன்றோடுந் தோயாதுநின்றதுபோலவற் றோடுந் தோயாது நின்றவரோ துறந்தோ ரென்று சொல்லப் படுவார்.

தோய்வாரேற் - சேரும்விதைபோலத்தீர்ந்தவிடத்தேதிரு ம்பும்- வேறொன்றதுவேவினை—எ-து - படிகமணிபோ லியா தொன்றோடாயினுந் தோய்வாரெனி னிலத்துச்சேரும் வித்து ப்போல வுடலிறந்த காலைநின்று நீங்கிய பற்றின்கண் மீட்டுந் தி ரும்புமோர் மூலமும் பற்றுடைமையே வினையென்பது மப்பற் றுடைமையேயாம்.—எ-று.

மாமணி தன்னை யடுத்த வன்னங்களைக் கவராது தனது பிரகாசத்தை யவற்றின்மேல் வீசிநின்றாற்போல யாதுவிடயங் கள்வந்தடுப்பினு மதிற்றோயாது தனது ஞானப் பிரகாசத்தை யவற்றின்மேல்வீசி நிற்றலான் "மாமணிபோற்றோயாதவ" ரெ ன்று முடம்பிற்குப் புறம்பாய பற்றுக்களை யொழித்து அவ்வு டம்பாய் நின்றோரைத் துறந்தோர்க ளென்று சொல்வதுபோ ல வுயிர்க்குப் புறம்பாய கருவிகண் முப்பத்தாறையு மொழித்த திவாய் 'நின்றோரைத் துறந்தோர்க' ளென்றார்.

நிலத்திற் சேரும் வித்துப்போ லுடலிறந்தகாலை நின்றபற் றின்கண் மீட்டுமுயிர் வந்தடைந்துற்பத்தியாகலிற் "சேரும்வி தைபோ" லென்று முடனீங்குங் காலை யுயிர்க் கெந்தவாதனையி ருந்ததந்த வாதனையோடும் பிறப்பின்கண்மீள்கலாற் "றீர்ந்தவி டத்தேதிரும்பும்வே" றொன்றும் பற்றுள்ளவிடத்து வினையுமுளு வாகலினதுவேவினை யென்றுங் கூறினார்.

# ௨௩௰ வாதனைமாண்டார்தன்மை.

அவா வென்பவெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந் தவாஅ ப்பிறப்பீனும் வித்து--என்பது-மது அதுவே யென்பதனைப் பற்றுடைமை யெனக்கொள்க.

இத்திருவெண்பாவா லெந்நிலையி னின்றாலு மதனுட் பற்ற றுதியுடையோர்க்கக வீடென் றறிவித்தவாறுகாண்க. (௬)

—•••◉•••—

விடயங்களை யநுபவிப்பினு மவற்றுட்கூடாதொன்றி நிற்ற லென்னை யெனவினா மேற்கூறுகின்றார்-

ஒருதுடைக்கீழ்வாழுலகத்தோர்க்குறும்புண்டோ *
வருணிழற்கீழ்வாழ்வாரறிவு - கருவிகளிற்......... *
போனாலெனசேற்றுத்தாள்போலோபருந்துநிழற்...... *
போனாற்போற்றோயாமற்போம்......... ......... ..... *

ஒருதுடைக்கீழ்வாழுலகத்தோர்க்குறும்புண்டோ - வருணிழற்கீழ்வாழ்வாரறிவு- கருவிகளிற்- போனாலென்சேற்றுத்தாள்போலா —எ-து- பூமியெல்லா மொருகுடைக்கீழாள்வோனுலகத்துவாழ் வோர்க்குக் குறும்பாற் றுன்ப முண்டாமோ அதுபோ லெங்கும் பரிபூரணமாய் நின்ற திருவடி நிழற்கீழாநந் தச் செல்வத்தோடும் வாழ்வா ரறிவுவிடயங்களிற்சென்றாலு மென்னை அவ்வறிவிற் கவ்விடயங்களான்வரு மயக்கமியாது மின்று மாயைக் கீழ்வாழ்வா ரறிவுபோ லவரறிவுசேற்றுக்குட்டேட்போ லழுந்துமோ.

பருந்துநிழற்-போனாற்போற்றோயாமற்போம்--எ-து-பருந்தி னிழலொன்றிற் றோய்ந்துந் தோயாது போனாற்போ லவரறிவு அவ்விடயங்களிற்றோய்ந்துந் தோயாதுநீங்குமென் றறிதி-எ-று.

ஒருகுடைக்கீழ் வாழ்வார் மற்றியாதோ ருருக்குச்செல்வினு மவ்வலாயன தாணையாற் குறும்பு செய்வாரு மிலரான் வருந் துன்பமு மவர்க்கின்றாயதுபோற் றிருவடிக்கீழ் வாழ்வாரறிவு விடயங்களிற் சென்றாலு மத்திருவடிப் பரிபூரணமாய் நிற்றலி னிவ் விடயங்கண் மயக்குவதுந் தான் மயங்குவது மிவ்வறிவிற்கின்றாமாகலி- னிங்ஙன முவமை கூறினார்.

பருந்தி னிழற் றோய்ந்தவாறே நில்லாது விரைவினீங்குதல்போ லவ்வறிவு விடயங்களிற்றோய்ந்தவாறேமயங்காது விரைவினீங்கித் திருவடிக்கீழ்நிற்றலா னிங்ஙனமுவமைகூறினார்.

பருந்தினையவர்க்கு மதனிழலை யவரதறிவிற்குமுவமையாக்கூறியவாறுகாண்க.

இத்திருவெண்பாவால் விடயங்க ளவரறிவை மயக்காதென்பதுமவ்விடயங்களி லவரறிவு தோயாதென்பது மறிவித்தவாறுகாண்க. (௫)

---

நெய்யுண்டநாயென்னநீரினிழலென்ன... ... ...*
மையுண்டகண்போன்மனைவாழ்வார்-துய்ய ... *
வருளால்விலையேறுமாணிக்கமெல்லாப்.... ... ... *
பொருள்போலவல்லாப்பொருள் ... ... ... ...*

நெய்யுண்டநாயென்னநீரினிழலென்ன - மையுண்டகண்போன்மனைவாழ்வார்—எ-று- நெய்யையுண்டு மீட்டுங் கக்காநின்ற நாய்போலுந் தடாகத்தீரத்தி னிற்கு மர மேன்முகமாய்நிற்கவு மத்தடாகநீரிற்கீழ் முகமாய்த்தோன்று மம்மரநிழல்போலும் பிறர்க்கழகாய்த் தனக்குக் கரிப்பாயிருக்கு மையுண்டகண்போலு மந்ஞானிக ளில்வாழ்க்கையோடுங் கூடியுங் கூடாதிருந்து வாழ்வா ரிங்ஙனம் வாழ்வாராயின் ஞானிக்கு மஞ்ஞானிக்கும்பேத மென்னையெனின்.

துய்ய - விருளால்விலையேறுமாணிக்கமெல்லாப்-பொருள்போலவல்லாப்பொருள்—எ-று- இருளைத்துறந்து பிரகாசித்தலா னிருளான் விலையேறு நிருமலமாயுள்ள மாணிக்கமணியவ்விருளான் மறையு மற்றெல்லாப் பொருள்களைப்போலு மல்லாத பொருளதுபோ லில்வாழ்க்கை யிருளாற்றுமறைந்திருப்பாரைப்போலு மன்றி யவ்வில்வாழ்க்கை யிருளைத் தமது ஞானப்பிரகாசத்தா னீக்கிநின்று விளங்குவ ரென்றறிதி.—எ-று.

நெய்யையுண்டபின் வயிற்றி லெட்டுணையேனுந் தங்காது மீட்டுங்கக்கலா னந்நெய்யினது சார மதனுடலிற்சாராததுபோல விடயங்களைத் தாமற்றநுபவித்துச் சிவத்திற் காக்கலா னவ்விடய வாசனை யிவரைச் சாராதாகலி ‘‘னெய்யுண்டநாயென்ன,, வென்றும்- கரையின்கண்மர மேன்முகமாய் நிற்கவு மதனது நிழனீரின்கட் கீழ்முகமாய்த் தோற்றுதல்போற் சகலத்தையுங் கடந்த சிவத்தைத் தாம்பிரியா திருக்கவு மனைகண்ணிருத்தல்போற் றோற்றலி ‘‘னீரினிழலென்ன,, வென்றும்- பிறர்க்கழகாய்த்தனக்குக் கரிப்பதா யிருக்கு மையுண்ட கண்போற் பிறர்க்குமு

# உ௯உ வாதனைமாண்டார்தன்மை.

னேக்கண் வாழ்கின்றதுபோற் றோற்றத் தமக்கிப் பிராரத்த வா சனை யென் மறக் கொழியுமென்று வெறுப்பாய்த் தோற்றலின் "மையுண்டகண்போலு" மென்றுங் கூறினார்.

மாணிக்கம் பகலைப்பற்ற விரவின் மிகவும் பிரகாசிப்பது போன் மெய்ஞ்ஞானிகட்குத் துறவைப்பற்றவில்வாழ்க்கையின் ஞானமிகவும் பிரகாசிகருமாகலி னிருளால விலையேறு "மாணிக் கமெல்லாப்பொருள்போலவலலாப்பொரு" ளென்றுங்கூறினார்.

---

ஞானியு மஞ்ஞானியுங் குடும்பத்தோ டிருப்பதாலிலவர்க் குப் பிறப்பிறப் பின்றாய தென்னை யிவர்க்குப் பிறப்புண்டாய தென்னை யெனின்மேற் கூறுகின்றார்.

துடைதட்டலொன்றேதுயிற்கும்விழிக்கும்... ... .*
படிகத்திருண்மணிக்கேன்பற்று- மடிபார்த்துக்...*
கூடப்போங்கள்ளனைப்போற்கூடாக்குடும்பக்கூத்... ...*
தாடிக்கேன்மேற்பிறப்புண்டாம் .. ... ... ... ......*

துடைதட்டலொன்றேதுயிற்கும்விழிக்கும் - படிகத்திரு ண்மணிக்கேன்பற்றும்—எ- து-துயிலும் பருவமுடையோன்று யிறற்குத்துடைதட்டலும்- விழிக்கும் பருவ முடையோன் விழி த்தற்குத் துடைதட்டலு மொன்றேயா மதுபோலன் ஞானிமனை விமுதலிய குடும்பத்தார் வந்து சருவுந்தோறு மகமுகமாய்த்த ற்போத வொழிவி னின்றுநந்த நித்திரைபண்ணுவான் அஞ்ஞா னி தன் மனைவி முதலிய குடும்பத்தார் வந்து சருவுந் தோறு ஞ் சகமுகமாய் நின்று மயக்கத்தி லழுந்துவானாயின் ஞானிக்கு மஞ்ஞானிக்கும் பேதமிங்ஙன மாயினு மந்த ஞானிக்குக்குடும் பத்தி லிருக்கின்றே னென்னும் வாசனையாயினுந்தோன்றாதோ வெனிற் படிகத்திற் பற்றும் பஞ்சவன்ன மாகிய விருண் மாணி க்க மணிக்கேன்பற்று மதுபோலக் குடும்பந் தானாய்நின்ற வஞ் ஞானிக் கேறும் வாசனை குடும்பத்திற் பற்றின்றி நிற்கும்ஞானி க்கேனேறு மிங்ஙனங் குடும்பவாசனையு மேறாதிருத்தலான்.

அடிபார்த்துக் - கூடப்போங்கள்ளனைப்போற்கூடாக்குடு ம்பக்கூத்- தாடிக்கேன்மேற்பிறப்புண்டாம்—எ-து- பொருள்க ளைக்களவுகொடுத்தோர்க ளவனடிபார்த்துச் செலல வப்பொரு ள்களவுகொண்டோனு மவரோடிக்கலந்துகொண் டவ்வடிபார் த்துக் கூடச்செல்லு மக்கள்வனைப்போற் குடும்பத்தார்க்குச்சு

துக்கம்வந்தகாலை யவனைப்போற் றானு மவர்க்குக் காயத்தா
ற் பிரிப்பும் வாட்டமுமுடையனைப்போற்காட்டி யவரோடுங்கூ
டிநின்று மனத்தா னவரோடுங்கூடாத குடும்பக் கூத்தாடியாகி
யவந்தஞானிக்கு மறுபிறப்பேனுண்டாம்—எ-று.

துடைதட்டலாற் றுயில்வதும் விழிப்பது மவர்க்கியல்பா
யினபோற் குடும்பத்தா லகமுகப்படுவதுஞ் சகமுகப்படுவது
மிவர்க்கியல்பாயின வென்பதுங்கொள்க.

பார்ப்பான்- தோட்டிவேடம்போட்டு நடிப்பினுந்தன்னை
வேறுகண்டு நின்றற்போ லிவன்குடும்பிபோ லிருப்பினுந்தன்
னை வேறுகண்டு நின்றானாகலிற் "குடும்பக்கூத்தாடி,, யென்றார்.

நீரிங்ஙனங் கூறியவாற்றான் ஞானிக்கு இல்லறமுந் துறவ
றமுஞ் சரிபோவெனின் மேற்கூறுகின்றார்.

தொடும்போசுழல்காற் றுத்தூளம்போற்றொட்டு ..*
விடும்போது மங்ஙனேவிட்டு - நடந்தாலு ...*
மாகாயநீங்காமலாடிபதுபோலடங்கு .. ... ... ...*
மேகாந்திக்கெங்கிருந்தாலென் ... ... ... ... *

தொடும்போசுழல்காற்றுத்தூளம்போற்றொட்டு - விடும்
போது மங்ஙனேவிட்டு-நடந்தாலும்--எ-து விடயங்களைப்பற்று
ம்போது சுழல்காற்றுத் தூளத்தைப்பற்றுவபோற் பற்றியவ்
விடயங்களை விடுக்கும்போது மச்சுழல்காற்றுத் தூளத்தை விடு
ப்பதுபோல விடுத் திங்ஙன ஞானியின தறிவு விடயங்களைப் ப
ற்றிவிடுத்துச் சென்றாலும்.

ஆகாயம்நீங்காமலாடியதுபோலடங்கு- மேகாந்திக்கெங்கி
ருந்தாலென்—எ-து- தூளத்தைப் பற்றும்போது மாகாயத்தை
விட்டு நீங்காமற்பற்றிச் சுழன்றும்போது மவ்வாகாயத்தைவி
ட்டுநீங்காதாடியத்தூளத்தைவிடுத்து அவ்வாகாயத்து ளடங்கும
ச்சுழல்காற்றுப்போலவிடயங்களைப்பற்றும்போதுந்திருவருளை
விட்டுநீங்காதுபற்றி யநுபவிக்கும்போது மவ்வருளைநீங்காதநு
பவித்து அவ்விடயங்களைவிடுத்து அவ்வருளினடங்கு மேகாந்தி
யாகிய ஞானிக் கிருவகை யறங்களி லெவ்வறத்திருந்தா லென்னை
யவர்க்கோர் பற்றுமின்று.

"ஆகாயநீங்காமலாடி,, யென்றதனாற் றூளத்தைப்பற்றும்
போதுமாகாயநீங்காமற்பற்றியென்பதுவருவிக்கப்பட்டது.

அதுபோலடங்குமென்றமையா லாடியென் றதன்பின்ன ரடங்குமென்பது வருவிக்கப்பட்டது.

இங்ஙனஞ் செய்தாலு மவரிருக்கு மிடந் திருவருளாகவி னேகாந்தி,,யென்றார். (அ)

—•••◉•••—

இங்ஙனங் குடும்பத்திருந்து மதன்கட் சார்வொழிந் தாரின் னாரியாவரென்னின் மேற்கூறுகின்றார்.

சுந்தரனூர்சேரர்கோன்சோழர்குறுமன்னர்... ... *
மைந்தருடறம்முடலைவாட்டினர்க - ளந்தமிலாப் ...*
பத்தரொடுஞானவயிராக்கியர்பலர்க்கு... ... ... ... *
மொத்ததுசார்போதவொழிவு... ... ... ... ... ...*

சுந்தரனூர் - போதவொழிவு - என்பது-சுந்தரநாயனூர் சேர்மான், பெருமாணுயனூர் செங்கட்சோழர், புகழ்ச்சோழர் ஆகிய, சோழராசாக்கள், மெய்ப்பொருணுயனூர், கழற்சிங்கர் முதலிய, குறுமன்னர், மைந்தருடலை வாட்டிய சிறுத்தொண்ட நாயனூர் -தம்முடலை வாட்டிய கண்ணப்பநாயனூர் - அரிவாட் டாயனூர், முதலியோர், நாசமிலலாத, திருநீல ,கண்டநாயனூர்.

அதிபத்தரொடு மற்றுமுண்டாகிய ஞானிகள் - வைராக்கி யராயுள்ள விம்மெய்யடியார் பலருக்குங் குடும்பத்திற் கூடியி ருந்துமதன்கட்சார்போத மொழிந்து நிற்றலொன்று மொத்தி ருந்ததாகவிற் சார்போதமொழிவோ ரெவ்வறத்திருப்பினுமொ ழிந்து நிற்பரொழியாதா ரெவ்வறத்திருப்பினு மொழியாரென் றறிதி.—எ-று.

தெய்யுண்ட நாயென்னுந் திருவெண்பாமுதலிவை நான் கு திருவெண்பாவானும் பற்றற்றஞானிகட்கு இல்வாழ்க்கையில் ஞானவொளிவிளங்கலி னிரவுவிளக்குப்போன் றந்தஞானம்பய ன்பட்டதிகமாமென்பதும் அவர் அக்குடும்பத்திற் பற்றிலராக லிற் பிறப்புண்டாகாதென்பதும் அவர் எவ்விடத்திருப்பினுந்நி லையயராரென்பது மிவ்வாறு குடும்பத்திலிருந்தும் ஞானிகளாயி ருந்தோ ரிவரிவரென்பது மறிவித்த வாறுகாண்க. (கூ)

---

வாதவூரமாண்டார்தன்மை- முற்றிற்று.

ஆ-திருவெண்பா- உாசய.

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

## பத்தாவது.

—»»()*()««—

# நிலையியல்பு.



இதனுட் கூறிய வுண்மை நிலைதலைநின்று வீட்டுமதனைச்சென்றடைதற் குபாயங் கூறினமையா னிவ்வதிகாரத்திற்கு நிலையியல்பென்று பெயராயிற்று.

அறியார்வழிகேட்டறிந்துநடக்க... .... ... *
வறிவாரறிவென்றறியார்-மறையாக் ... ...*
குடையிருக்கத்தாமேகுதித்துங்கடந்து... ... ...*
மடர்மழைக்கேவாறவர்போல்வார்... ... ... ... *

அறியார்வழிகேட்டறிந்துநடக்க - வறிவாரறிவென்றறியார் —எ-து - தாங்கருதிய வூருக்குச் செல்லும் வழியறியா ரவ்வழி யறிந்தோரைக் கேட்டறிந்து நடக்கவுந் தம்மாலறிந்து நடப்பதாய்க் கருதுவரன்றி யவ்வழி யறிவா ரறிவித்த வறிவுதா மவ்வழி யறிந்த வறிவென்றறியா ரதுபோலத் தாமுன்ன ரறியாத கருவிகண் முப்பத்தாறையு மிப்போதரு ளறிவிக்க வவற்றையறிந்துகடந்து செல்லவுந் தம்மா லவற்றையறிந்து கடந்துசென்றதாய்க் கருதுவரன்றி யவ்வருளறிவிக்க வறிந்த வறிவு தாமக்கருவிகளையறிந்த வறிவென்றறியார்.

மறையாக்- குடையிருக்கத்தாமேகுதித்துங்கடந்து - மடர்மழைக்கேவாறவர்போல்வார்—எ-து-அடர்மழைக்கணோரூர்க்குச்செல்லத்தொடங்கினோர் மழைதம்மேற்றாக்காதபடி தமக்குமறைப்பாகக் குடைகைக்க ணிருக்கவு மக்குடையைத் தம்மேற் கொண்டுசெல்லாது மழைத்திவலைகட் கிடையே தாமேகுதித்துங்கடந்து மவ்வடர்மழைக்கண் ணனைந்துசெல்கின்றாரைப்போலவர்கருவிகளைக்கடந்து விட்டடையக்கருதினோ ரக்கருவிகடம்மூட்டாக்காதபடி யருடம்மைவிட்டு நீங்காதிருக்கவுமவ்வருளை முன்னிட்டுக்கொண்டு செல்லாதக்கருவிகளைத் தற்போதத்தாலறிந்துங்கடந்துஞ்செல்வதாகக்கருதியவற்றுணனைவாரிதென்னை-எ-று

முன்னரறியாதிருந்த கருவிகளை யிப்போ தறியவந்தது திருவருளாலறியவந்ததென் றறியாது தம்மா லறிந்ததாகக்கருதி னமையா லிங்ஙன மூவமை கூறினார்.

கருவிகளை நீக்கத் தொடங்குவோர் திருவருளை முன்னிட்டுக்கொண்டு நீக்காது தற்போதத்தை முன்னிட்டு நீக்கத்தொடங்கினக்கருவிகணீங்காது பண்டைப்படிமூடுமாகலி னிங்ஙனமூவமைகூறினார்.

இத்திருவெண்பாவாற் கருவிகளையறிந்துநீங்கிநின்றவறிவருளறிவிக்க வறிந்தவறிவென் றறியவேண்டு மென்பதூஉங் கருவிகளைநீக்கிச் செலலும்போது தற்போதத்தைப் பின்னிட்டருட்போதத்தை முன்னிட்டு நீக்கிச்செலலவேண்டுமென்பது மறிவித்தவாறுகாண்க. (க)

---

கருவிகளை யிங்ஙன நீக்கித் திருவருளைக் கூடுநிட்டைகூடாதாயினுங் கேவல சகலங்க டாககாதருளே யெலவக்குந் தாரகமென்றறிந்து நிற்றற்குபாய மியாதெனின் மேற்கூறுகின்றார்.

செத்துப்பிறவாமற்றேடித்திரிகையிலே . .. *
செத்துப்பிறந்துதிரிவீரோ- சுத்த.... ... *
விருட்கேவலசகலம்போகவெதிரிட்ட... ..........*
வருட்போதராய்த்திரியாமல்... ... ... ... .. ..*

செத்துப்பிறவாமற்றேடித்திரிகையிலே- செத்துப்பிறந்துதிரிவீரோ—எ-து - இனிமே லிறந்து பிறவாம லிப்போது பிறப்பிறப்பைக் கடந்து நின்ற வீடுதேடிப்பாவனை முதலிய செய்துள்ளே சுழலுமிடத்துத் தானே கேவலாவத்தையி லிறந்துஞ்சகலாவத்தையிற் பிறந்துஞ் சுழல்வீர்.

எதிரிட்ட-விருட்கேவலசகலம்போகச்-சுத்த-வருட்போதராய்த்திரியாமல்—எ-து - உமதறிவிற் கெதிரிட்ட மயக்கவடிவாகிய கேவலாவத்தையும்-விகற்பவடிவாகியசகலாவத்தையும் போக விலைகடாக்காத சுத்தாவத்தையி னின்றவருளே யெவைக்குந் தாரக மென்றறிந்து நாடி யவ்வருட் போதராய்ச் சஞ்சரியாது விடுதன்னை.—எ-று.

மயக்கமாய்வந் தடுப்பது கேவலம் விகற்பமாய்வந் தடுப்பது சகல மயக்கம் வந்தடுத்தபோது மயக்கவடிவாய் நின்றும்விகற்பம்வந் தடுத்தபோது விகற்ப வடிவாய் நின்று மயக்கநீங்கிய

போதம்மயக்கத்தை மயக்கமென்றறிந்தும் விகற்பத்திற் சென்
றமீண்டபோது அவ்விகற்பத்தை விகற்பமென்றறிந்து மிங்
ஙன மலத்தின் மலமறந்துஞ் சுழன்று மலத்தை யிலையென்ற
றிந்து நின்றவறிவு தானென்றறிந் தவற்றையுந் தன்னையுந் தன
க்கறிவித்தருளை யறிந்து அவ்வருட்டன்னை யெப்போதும் வி
ட்டு நீங்காமெதன்றறிந் தவ்வருளை நாடி நிற்கவே யம்மயக்கம்வி
கற்பமாகிய கேவலசகலங்களினீங்கியருட் பூரணமாய்ப் பிரவே
சிக்குமாகலி "னிருட்கேவலசகலம்போகவெதிரிட்ட வருட்பேர
தாய்த் திரியாமை,, லென்றார்.

இத்திருவெண்பாவால ஆன்மபோதஞ் ஜீவியா தருட்போ
தத்தை நாடிநின்று லவ்வருளறியப் படுமென் றறிவித்தவாறு
காண்க. (உ)



இங்ஙனஞ் சகலகேவலங்க டன்னாலறியப்படுதலி னவற்றை
தன்னா னீக்கக்கூடாதோ வெனின் மேற்கூறுகின்றார்.

சகலமுங்கேவலமுந்தாக்கறுப்பான்றானே... ...*
பகல்விளக்கோடுச்சிப்படிகந்- தகவைத்தா... ..*
மூட்டியுறக்குவதுநாமேநம்முட்கலப்பு... ... ...*
நாட்டமொழியென்றருளினான் .. ... ... ... ...*

சகலமுங்கேவலமுந்தாக்கறுப்பான்றானே - பகல்விளக்கோ
டுச்சிப்படிகந்- தகவைத்தா - மூட்டியுறக்குவதுநாமே--எ - து-
நமதருளைமுன்னிட்டுக்கொண்டு சகலகேவலங்களைத்தன்னுட்டா
க்காது அறுப்பதேயன்றித் தானே சகலத்தையும் கேவலத்தை
யுந் தன்னுட்டாக்கா தறுப்பானாகித தன்சந்நிதி பிற்றற்சேட்டை
யற்றிருந்த விளக்குப்போலு முச்சிகாலத்துப் பஞ்ச வன்னங்க
ளையுங் கவராதிருந்த படிகம்போலு மெமது சந்நிதியிலுனது
தற்போதஞ் சீவியாதிருக்கவு மெமது சந்நிதியை நீயங்ஙன நீங்
காதிருத்தலிற் கருவிகளுன்னைத் தாக்காதிருக்கவுந் தகைமைபெ
றவைத்துன தூழ்வினைப்படி யுனக்கூட்டியுறக்குவிப்பது நமத
ருளே யிங்ஙனம் வீட்டின்பங்கொடுப்பது நமதருளே யென்ற
றிந்து இவ்விருவகையிடத்து மூன்போதஞ் சிறிதேனுஞ் சீவியா
துதிற்பி னம்மிருவர்க்குந் தாமே யிரண்டற்ற வைசுகியங்கூடு
மிதுதன்றி.

நம்முட்கலப்பு - நாட்டமொழியென்றருளினான்---எ - து-யா
ரவந்துகூடுதலு நீதம்மைவந்தடைதலு மாகியகருத்துடன்

பாலெழிலனைக்கியங் கூடாதாகலின் நாமிருவரும்வந்து நம்மு டைகலப்பதாகிய நாட்டத்தை நீயொழிதியென்று (திருஞானசம் பந்தப்பிள்ளையாராகியசுவாமிக) ளெனக்கருளிச்செய்தாரிவ்வா றேநீயுமறிதியெனி னவரது திருவடிக்கணைகிய முனக்குங் கி டைக்கும்—எ-று.

எதிரிட்டுத்தடித்தபோத மெதிரிடாதசைவற நின்றுதேய் ந்தபோ தான்மாவிற்குஞ் சிவத்திற்கு மைக்கியந்தாமேகூடுமா கலி "னம்முட்கலப்புநாட்டமொழி,, யென்று அருளினனென் றூர் தமதாசாரியர் தமக்கருளிச்செய்த முறைமை யீதென்றுமா ணாக்கனுக்கறிவித்தவாறுகாண்க.

இத்திருவெண்பாவால் சகலகேவலங்களை அருட்போதத் தாலன்றி யான்மபோதத்தால் நீக்கப்படாதென் றறிவித்தவாறு காண்க. (௫)



இங்ஙனங் கருதிநின் று திருவருளைக் கூடுதலரிதாயினுமின் னுமோருபாய மேற்கூறுகின்றார்.

சாக்கிரத்திற்போதச்சலனையெல்லாஞ்சொற்பனம்போ*
லாக்குமருட்போதராகுவோர் - நீக்கும்... ... ... *
பரயோகர்சுத்தர்பரமசுகாநந்தர்... ... ... ... ...*
துரியகதியின்புகடந்தோர்... ... ... ... ...*

சாக்கிரத்திற்போதச்சலனையெல்லாஞ்சொற்பனம்போ- லாக்குமருட்போதராகுவோர்—எ-து-சாக்கிராவத்தையிற்றோ ன்றும் போதச்சேட்டையு மற்றுமுண்டாகிய தேகாதிப் பிரப ஞ்சங்களெல்லாமு மிவையாவையென்ன வெதிரிட்டுப்பார்த்தப் போதச்சேட்டை விடயங்களைச்சார்ந்தவிடத்துத் தோன்றியவி டயபோதமென்றுந் தேகாதிப்பிரபஞ்சங்களெல்லாவற்றையுமா யையிற்றோன்றி யழிவதென்று மிவற்றிற்கெல்லாந் தாரகமாயு ட்புறம்பாய்ப் பரிபூரணமாய்நிற்ப தருளென்றுங் கண்டு பின்ன ரப்பரிபூரணமாகிய வருளே மெய்யென் றதனை நாடிநின் றிவ் விடயபோதத்தையு மிப்பிரபஞ்சங்களையுஞ் சொற்பனம்போல ப்பொய்யாக்குமவரிவற்றையுள்ளபடி நீங்கியவ்வருட் போதரே யாகுவார் அஃதன்றி அவரோ.

நீக்கும்-பரயோகர்சுத்தர்பரமசுகாநந்தர்-துரியகதியின் புகடந்தோர்—எ-து- அவ்வருளையுங் கடந்துசெல்லும் பரயோ ருந் தற்சுதந்திரமற்ற பரிசுத்தரு மப்பரமசுகமாகிய வாநந்தத்

தையுடையரு நின்மல துரியத்திற் றோன்றும் பரமசுகாநந்தா நீதருமாவர்—எ-று.

இங்ஙனம் விடயபோகத்தையுந் தேகாதிப்பிரபஞ்சங்களையும் பொய்யென்றுந் தமககமைவிய மென்றுங்கண் டிவற்றிற்குள்ளு ம்புறம்பும் பரிபூரணமாகிய திருவருளேமெய் நாடிநிற்போ ரிப் பொய்களை நீங்கி யம்மெய்யாகிய திருவருளே வடிவாவராகலிற் சொற்பனம்போலாக்கு மருட்போத ராகுவோரென்று மங்ஙன மருள்வடிவாயகாலத் தவ்வருளையுங்கடந்து பரயோகமுதலியன அவர்க்கெளிதிலுண்டாமாகலி னவனாமே பராயோக முதலிய னவுடையரென்றுங் கூறினார்.

'அவமொன்றுஞ், சுடமிப்பெயரொஞ்சிநின்றது.

இத்திருமெமை பாவால் கருவிகளையுள்ளபடி கண்டழியில்தி ருவருணிலைகாணவருமென்றும் அங்ஙனம்வரின் பராயோகமு தலியபேறுளவாமென்று மறிவித்தவாறுகாண்க. (௪)



இங்ஙனம் விடயபோகத்தையுந் தேகாதிப்பிரபஞ்சங்களை யுநீங்கி யருளைப்பெறுவதே யமையாதோ வதற்குமேனீர் -பர யோகமுதலியன கூறிய தென்னையெனின் மேற்கூறுகின்றார்.

தத்துவம்போய்க்கேவலம்போய்த்தான்போயருள்கழன்று. *
சுத்தபராயாய்த்தன்சுதந்திரம்போய்ச் -சத்தி ........ *
யொழிவிலேபோதம்போயொன்றாகாவொன்றி... .... ... *
னழிவிலேயின்பவதீதம்... ... ... ... ... ... ... *

தத்துவம்போய்க் கேவலம்போய்த் தான்போயருள்கழன் று-சுத்தபராயாய்த்தன்சதந்திரம்போய்ச்-சத்தி-யொழிவிலே போதம்போய்—எ-து - நினைப்பாய்நின்ற தத்துவ முப்பத்தா றையுநீங்கி யவற்றின்மேன் மறப்பாய்நின்ற கேவலாவத்தையுநீ ங்கி யத்தத்துவங்களையுங் கேவலாவத்தையையு மிவையென்றறி ந்துநீங்கிநின்ற வறிவு தானெனத் தன்னையறிந் தவைகளையறிந் துநீக்கவுந் தன்னையறியவும் வந்தது திருவரு ளறிவிக்க வறிய வந்ததென்றறிந்து தானறிந்தே னென்பதுநீங்கித் தனக்கறிவித்த வவ்வருளைத் தரிசித் தவ்வருளையுங் கழன்று திருமலமா யுள்ள பராயே தானாகி யப்பராயை யறிந்தவிடத்திதுவென்றுதா ன்காண்பானுங் காட்சியுமாயறிந்துவந்த தற்சுதந்திர வறிவுநீங்கி யப்பராசத்தி நீக்கத்திற் றற்போதமொழிந் தாநந்தானுபவம் பெற்றதற்பின்னர்.

ஒன்றாகாவொன்றி- னழிவிலேயின்பவதீதம்—எ-து-இங் ஙனங்கூறியவற்று ளொன்றுந் தானாகாதவொன்றாயிருந்த சிவத்தின்றானிரண்டறக்கலந்து போதவாசனையு மிறந்தவிடத்திற்சுகாதீத மிச்சுகாதீதமே யுண்மைநிலையென்றறிதி—எ-று.

பரையோகத்தி லான்மாவினது தற்சுதந்திரவறிவு கெடுமாகலிற் "சுதந்திரம்போ,,வென்றும் அப்பராசத்திநீககத்திற் போதமிறந் தாநந்தாநுபவமுண்டாயாகலிற் "சத்தியொழிவிலேபோதம்போ,, வென்று மான்மா சிவத்தோடிரண்டறசகலந்தவிடத்துப் போதவாசனையொழிதலானு மிவ்விடஞ் சுகாதீதமாகலானு "மொன்றாகாவொன்றி னழிவிலேயின்பவதீத,, மென்றுங் கூறினார்.

இன்பாதீதமென்றமையா லின்பட்பேறுவருவிக்கப்பட்டது.

தத்துவாதலியன போக்கப்போவனவாகலிற்போவென்பதனை நீங்கியென்று கூறப்பட்டது.

இத்திருவெண்பாவா லுண்மைநிலையிதென்றறிவித்தவாறு காண்க. (ரு)



இவ்வாநந்தப்பேறு பெறுமாறெங்ஙனமெனின் மேற்கூறுகின்றார்.

போதப்புரவிபுருடனதிலேந்து... ... ... ... *
வீதிப்பவனிவிரிசாரும் - போதப்... ... .. *
புரவியருளேறினாற்போக்குவரவற்ற... ... ... ... *
பரமசுகமாங்காணப்பா... ... ... ... ... ... *

போதப்புரவிபுருடனதிலேந்து-வீதிப்பவனிவிரிசாரும்—எ-து-போதமாகிய வரையன்புருடனாகிய புரவிமேலேறிக்கொண்டு பஞ்சேந்திரியவீதிகளில் விடயங்களாகிய காட்சிகளைக்கண்டு கொண்டு சுழல்விறிசுபோலப் பவனிசெல்வதாகும்.

போதப்-புரவியருளேறினாற்போக்குவரவற்ற- பரமசுகமாங்காணப்பா—எ-து-போதமாகிய புரவிமேலருளாகியவரையனேறினா லப்போதுபோக்குவரவற்றுநின்றமையானுநந்தமுண்டாமிதனைமாணாக்கனே நீயறிதி—எ-று.

போதம்புருடனோடுங்கூடிப்பஞ்சேந்திரியவழிசென்றுவிடயங்களைப்பற்றுமங்ஙனம்பற்றுதவற்றைநீங்கி யப்போதத்தையுள்ளேயடக்கித் திருவருளைநாடவே யிவ்வரு ளப்போதத்தை

க்கீழ்ப்படுத்தித் தான்மேலிடாய்ப் பிரகாசிக்குமப்போதாநந்தோதய முண்டாமாகலி னங்ஙனமூவகைகூறினார்.

போதவிடயாநந்தம் பெறுதற் கேதுவாய்நின்றது புருடனாகலி னிப்புருடனைப்புரவியாக்கினார்.

சொரூபாநந்தம்பெறுதற் கேதுவாயவருளைப் போதமுன்னிட்டுக்கொண்டுசேறலினிப்போதத்தைப்புரவியாக்கினார்

இந்தநாட்டம்வைத்தா லந்தநாட்டமறந்துசுழலுமந்தநாட்டம்வைத்தா லிந்தநாட்டமறந்து அலைசவற்றிருப்பதுங்காண்க

ஒருவனட்டாவதானஞ் செய்தன் முதலியவு மிப்புருடனதுவேகமெனக்கொள்க.

(இதற்குதாரணம்.) [சிவப்பிரகாசம்] ஐவகையாலுறுபயன்களுகரவருங்கால,மதுபுருடதத்துவமென்றறைந்திடுவாரறிந்தோ, ரெனமற்றும்வருவனவற்றாற்காண்க. (௬)

அறிவுமாநந்தமும் பெறுதற்குபாயங்கூறினி ரினித்துறவின திலக்கண மியாதெனின் மேற்கூறுகின்றார்.

அறிந்தமூர்த்தியாராய்ந்தகம்புறமாய்த்தேடி ..*
மறந்தவனுய்த்தானுய்மயங்கிப் - பிறிந்து...*
சுகதுக்கமாய்ப்பதறிச்சுட்டுத்தொழில்போய்ப்...*
பகைகெட்டதுதுறவப்பா .. ... ... ..... *

அகம்புறமாயாராய்ந்துதேடியறிந்தமூர்த்தி-மறந்தவனுய்த்தானுய்மயங்கிப்-பிறிந்து-சுகதுக்கமாய்ப்பதறி—எ-து- தற்போதத்தால் விடயங்க ளெவ்விதத்தா லுண்டாமென்றுள்ளும்புறம்புமாய்விசாரித்துத் தேடியு மவ்விடயங்கள் கிடைத்தகாலை யவற்றை ஞானேந்திரியங்களானறிந்து கன்மேந்திரியங்களாற்பற்றியந்தக்கரணங்களா லவற்றுளமூழ்ந்தி யவ்விடயங்களைக் கேவலத்தின்மறந்தவனுயுஞ் சகலத்தி லவ்விடயங்களை தானுய்மயங்கியும் விடயங்க டன்னைப்பிரியாதுநின்றவிடத் தவற்றிற் சுகரூபியாய்ச்சென்றுபற்றிப் பதறியும் அலைவதன்னைப்பிரிந்து நீங்கிய விடத்துத்துக்கியாநின்றுபதறியும்.

சுட்டுத்தொழிலபோய்ப்-பகைகெட்டதுதுறவப்பா—எ- து- இங்ஙனமயங்கிநின்ற சுட்டுப்போதமுங்கெட்டு அவ்விடயங்களாகிய வுயிர்ப்பகையுங்கெட்டதுவேதுறவென்றறிதிமாணக்கனே —எ-று.

"அறிந்தழுந்தியென்றதனால்" பற்றியென்பது இடையே வருவிக்கப்பட்டது.

துறவுகூறினமையால் விடயம் எதிராக வருவிக்கப் பட்டது-பிரதியாவருவிக்கப்பட்டதுவென்றுசில்வுரைபாடங்களிலிருக்கின்றது.

அகத்துத்தேடியென்றது- அவ்விடயங்கிடைத்தற் குபாய நாடுதல. சுகங்கூறினமையால் விடயம்பிரியாதுநின்றவிடத்தென்பதுவருவிக்கப் பட்டது—விடயம் பிரியாதபோ ததன்மேல் விரைந்துசேறலானும் பிரிந்தபோ துளம்பதைத்தலானு மிருமைக்கும் பொதுவாய்ப் பதறியென்றார்.

'மயங்கிச்சுழல்வதனாற், போதத்தைத்தொழிலென்றார்.

இம்மைமறுமைகளினு முயிர்க்குத் துன்பந் தருவதாகலி னவ்விடயங்களைப் பகையென்றார். (எ)



அறிவுந் துறவு மிவையென் றறிவித்தி னிச்சிவயோகமாவதியாதெனின் மேற்கூறுகின்றார்.

நடந்ததெல்லா நீயே நடப்பழிய நின்ற..........*
விடஞ்சிவ நீயென் றிருக்க வெண்ணி - லடங்கின்.*
மயக்கி மலமறைத்து மாயையி னுவாரா..............*
வயிர்ப்பருளாலாஞ்சிவயோகம்...................*

நடந்ததெல்லா நீயே நடப்பழிய நின்ற - விடஞ்சிவ நீயென் றிருக்க வெண்ணி-லடங்கின் - மயர்கிமலமழுத்தும்—எ-து- கருவிகளாகிதுவிதுவென்றறிந்து சென்றதெல்லா மூன்றற்போதமேயாமாகலி னிதுசிவயோகமன்றக்கருவிகளையறிந்துசென்றதொழியநின்ற விடத்தை நீசிவயோகமென் றிருக்கக்கருதினையெனி னக்கருவிகளடங்கின் உன்னை யாணவமலமயக்கித் தன்வயப்படுத்துமாகலி னக்கருவிக ளொழியநின்றவிடஞ் சிவயோக மன்று விற்சிவயோக மியாதெனுண்டாமெனின்.

மாயையிதுவாரா -வயிர்ப்பருளாலாஞ்சிவயோகம்—எ-து- உன்னலறியப்படுங்கருவிகளெல்லாமாயை அக்கருவிகளொழிய நின்றவிடத்து மறப்பாய்நின்ற தாணவமலமாகலி னம்மாயையுமிவ்வாணவமும் வந்தடாதசுத்தத்தின்கட்டோன்றுந்திருவருளானுண்டாஞ் சிவயோகமென்றறிதி—எ-று.

'இதுவென்றதை, யிதுவாணவமெனக்கொள்க.

சகலகேவலங்களிற் செல்வதுயிர்க்குப்பழக்கமாகலினிவற் றைமறந்துநின்ற சுத்தத்தை யயர்ப்பென்றார். (அ)

---

இச்சகலகேவலங்க ளற்றபோது தற்போதமறுமோவிவற் றின்மேலும் போதமுளதென்று நீர்கூறியதென்னையெனின் மே ற்கூறுகின்றார்.

அருளும்பனையுமருக்கன்மதிபோன்ற... ....*
விரவுபகலற்றவிடத்தே - பரமநிலை ........*
சத்திக்கழற்றியிலேசச்சிதாநந்தமய..............*
சுத்தநிலைநீயற்றது.. ........................*

அருக்கன்மதிபோன்றவருளும்பனையும் - பகலிரவற்றவிடத் தே-பரமநிலை—எ-து- அருக்கனு மதியும்போன்ற வருளும்ப னையுமாகிய பகலுமிரவுமற்றவிடத்தே பரமாநந்தாநுபவநிலை யாம்.

சத்திக்கழற்றியிலேசச்சிதாநந்தமய - சுத்தநிலைநீயற்றது— எ-து-அப்பரமாநந் தாநுபவமாகிய வநுபவசத்தி நீக்கமற்றச ச்சிதாநந்தவடிவாயிருந்த சிவமாகிய சுத்தநிலையிச்சுத்தநிலையே யுந்தற்போதஞ் சிறிதுமின்றேதற்ற நிலையென்றறிதி -எ-று.

அருளான்மாவிற்குப் புலப்படத் தோற்றலானு மப்ப னையினுந் தடிப்பாகலானு மவ்வருளை யருக்கனென்று மவ்வ ருளைக்கடந்தது பனையாகலானு மிப்பனை யான்மாவிற்குத் தோன்றாமற் றோற்றலானு மிப்பனையை மதியென்றும் பகலி ரவுகண்ணிற்குத் தோற்றுதல்போ லருளும்பனையு மான்மாவி ற்கநுபவமாய்த் தோற்றலாற் "பகலிரவென்று" கூறினார்.

பிரகாச முட்டணஞ் சோபை யென்னு மிம்மூன்றுகுண த்தையுமுடைய சூரியனைப்போ லருள்பனையாநந்தமென்னுமி ம்மூன்றிலக்கணத்தையு முடையது சிவமாகலிற் சச்சிதாநந்த மய சுத்தநிலையென்றார்.

ஆநந்தமளவு மான்மாவா லநுபவங்கூறப்படு மவ்வாநந் தாதிதத்தி லநுபவங் கூறப்படாதாகலிற் சுத்தநிலை நீயற்றதென் றார். (கூ)

இனிபஞ்சமலங்களு மறுநெறி யெங்ஙனமெனின்மேற்கூறுகின்றார்.

தாமருந்தல்போலத்தமைச்சிவனுக்கூணாக்கித்... ...*
தாமருளா லூன்பணிதாமாகித் - தாமழிய......*
வஞ்செழுத்தாலர்ச்சித்தடியார்க்கடிமைசெயிற்...... ..*
பஞ்சமலக்கொத்தறுமப்பா .. ... ... ... ... ... ...*

தாமருந்தல்போலத்தமைச்சிவனுக்கூணாக்கித்-தாமருளாலூன்பணிதாமாகித்- தாமழிய—எ-து-தமக்கூணாயிருந்தவுன்றுதிகளைத் தாமருந்தல்போலத் தற்போதஞ்சீவியாதுநின்று தமமைச்சிவனுக்கூணாயுண்ணக்கொடுத்துப் பஞ்சவிடயங்களவந்தடுப்பினு மவற்றைத் தற்போதத்தாற் சென்றுபற்றி யவற்றிலழுந்தாம லருளை முன்னிட்டுக் கொண்டு அவ்வருட்டாரை வாங்கியுண்ணின்றோமென்னு ஞாபகமறவாம லவ்வருளால் வாங்கியுண்டிங்களை மவ்வருளா லறிகின்றோமென்னும் போதமுஞ் சுருங்கிப் பணியேதாமாகித் தற்சுதந்திரவறிவுகெட்டுப்பின்னராநந்தானுபவத்திற் றாமழிபவே.

பஞ்சமலக்கொத்தறு-மஞ்செழுத்தாலர்ச்சித்தடியார்க்கடிமைசெயிலப்பா— எ-து- ஆணவமாயை காமியந் திரோதை மாமாயை யென்னும் பஞ்சமலக்கூட்டங்களுமறு மங்ஙன நிட்டைகூடி யிப்பஞ்சமலங்களை நீங்கக்கூடாதாயிற் சிவமுன்னாகவிதிப்படி யுச்சரிப்பதாய பஞ்சாக்கரத்தாற் சிவன்றிருவடியையருச்சனைபண்ணி யத்திருவடியை யடைந்த மெய்யடியார்க் கடிமைபூண்டு பணிவிடைசெய்யின் முற்கூறிய வநுபவங்களெல்லாங்கைகூடும் பஞ்சமலங்களுமறுமென்றறிதி நீமாணாக்கனே-எ-று.

தனதுடலருந்துமூ ணவ்வுடலுக் குண்ணக்கொடுத்துநிற்கவே யதனையவ்வுடல்சிறுகச்சிறுகவுண்டுதான்பருத்தல்போலத் தற்சேட்டையற்றுத் தம்மைச்சிவனுக் கூணாகக்கொடுத்துநிற்கவே யச்சிவந்தம்மைச் சிறுகச்சிறுகவுண்டுதான் பூரணமாய்விளங்குமாகலிற் றாமருந்தல் போலத் தமைச் சிவனுக் கூணாக்கியென்றார்.

விடயங்கள்வந்தடுக்கும்போதுந் தற்போதத்தைப்பின்னிட்டருட்போதத்தைமுன்னிட் டவ்வருளா லவ்விடயங்களை யறிந்துபற்றி யவற்றை யநுபவிக்கும்போது மவ்வருளை முன்னிட்டுநின் றநுபவித்தலற்றாலான்மசந்தோடம்பிறக்கும்போதுமிக்

சந்தோட மவ்வருளா லுண்டாயதென் றவ்வருளுக் காக்கிநிற்க
வேண்டுமாகலிற் றுமருளா லுண்டென்றார்.

சகலகேவலங்களை நீக்கிச் சுத்தாவத்தையி னின்று தம்மை
ச்சிவத்திற்கூறாக்கிநிற்றலான் முன்னரிதமாய்த் தோன்றிய விட
யபோக முமகிதமாய்த் தோன்றுமாகலி னதனை ருசிப்பித்துநி
ன்றதிரோதைசத்திநீங்கு மத்திரோதைசத்திநீங்கவே யிருவினை
ப்பயன்களுஞ் சமமாய்த்தோன்று மிவை சமமாய்த் தோன்ற
வே யிவ்விருவினைப்பயன்கட்கீடாய்ச் சிவன்சுத்தமாயையினின்
றுசெய்யும் பஞ்சகிருத்தியங்களுஞ்அச்சுத்தமாயையுநீங்கும்.

அவன் அவளது வென்னும் மூன்னிலைச்சுட்டொழிந்து அ
வ்விருவினைப் பயன்களைத்தருவ தருளென்றறிந்து அவ்வருளின்
மறைந்துநின் றவ்விருவினைப்பயன்களையு மவ்வருளாற் றுமுண்
டலாற் கன்மமலநீங்கு மிங்ஙனநீங்கவே யனாயோகமுண்டா மி
ப்பனாயோகத்தா லிவ்வுடம்புந் தாமென்றென்று நீங்கவரு மிவ்
வுடம்பு நீங்கவே மாயைநீங்கு மாநந் தாநுபவத்திற் றற்போத
ங்கெடு மித்தற்போதங்கெடவே யிப்போதத்திற்குத் தானல்லா
தவுடம்பைத் தாமென்றுந் தனதல்லாத போகத்தைத் தனதெ
ன்று மாறுபாடாய்க்கருதப்பண்ணிநின்ற வாணவங்கெடுமாகலி
ற்றுமழியப்பஞ்சமலகொத்தறு, மென்றார்.

இங்ஙனங் கூறியவாறு நிட்டைகளாற் பஞ்சமலங்களையுநீக்
கக்கூடாதவர் ந காரமாகிய திரோதையும் ம காரமாகிய மலத்
தையும் பின்னிட்டுச் சி காரமாகிய சிவத்தையும் வ காரமாகிய
வருளையும் முன்னிட்டு ய காரமாகிய தான் ந கார மகாரமா
கியபாசத்திற்குஞ் சி கார வ காரமாகிய பதிக்கு நடுநின்று வ
காரமாகிய வருளைக்கூடிச் சி காரமாகிய சிவாநுபவத்தில் வ
காரமாகிய வருளுங் கழலாது ய காரமாகிய தற்போதங்கழல.

இங்ஙன மவ்வருளே நாவாகச்செபியாமற்செபித்துச்சிகா
ரமாகியசிவத்தி லதீதப்படுவது பஞ்சாக்கர தரிசன மிங்ஙனம்
பஞ்சாக்கரதரிசனமும்பண்ணி மெய்யடியார்க்குப்பணிவிடை
செய்யின் முற்கூறிய நிட்டைகளுங் கைகூடிப் பஞ்சமலங்களு
மறுமாகலி "னஞ்செழுத்தா லர்ச்சித்தடியார்க்கடிமைசெய்யிற்
பஞ்சமலக்கொத்தறு" மென்றார்

இங்ஙனம் பஞ்சாக்கரதரிசனம்பண்ணுதல் சிவனுக்கருச்ச
னையாகலி " னஞ்செழுத்தாலர்ச்சித்" தென்றார். (ம)

தேவரீரருளிச்செய்த சுத்தத்தைத யடியேன் பெறுமா றெந்நாளென்றிரங்கியமாணாக்கனைநோக்கிமேலருளிச்செய்கின்றார்.

கருவியுதிப்பிற்சகலகேவலத்தைக்காட்டி... ... *
யருளுதிப்புமங்கதுபோலாக்கி - யிரவுபகற்...*
றூக்காதசுத்தத்தலத்துநாம்வைக்கநீ ... ... ... *
யாக்காதெமக்குப்பரம்..............................*

கருவியுதிப்பிற்சகலகேவலத்தைக்காட்டி - யருளுதிப்புமங்கதுபோலாக்கி—எ-து- கருவிகண் முப்பத்தாறுங்கூடி நின்றசாக்கிரத்தி னுதறிவின் விகற்பமாய் வந்தடைப்பது சகலமென்று மயக்கமாய்வந்தடைப்பது கேவலமென்று முனக்கறிவித்த சகலகேவலங்களை நீங்கப்பண்ணி யுன்னையுள்ளபடி யறிவித்து இங்ஙனமுன்னையறிவித்தபின்னர்த் தோன்றுந் திருவருட்டரிசனத்தினுமிவ்வாறாகச் சகலமென்று மிதுகழன்றுதோன்றும்பரையோகத்தைதகேவலமென்று முற்கூறிய சகலகேவலங்களைப்போ லுனக்கநுபவமாய்த்தரிசிப்பித்துப்பின்னர்.

பகலிரவு தூக்காதசுத்தத்தலத்துனைநாம் வைக்கவெமக்குப்பரம்நீயாக்காது—எ-து- அச்சகலகேவலங்களு மிச்சகலகேவலங்களுமாகிய பகலிரவுகளுந் தாக்காதுநின்ற சுகாதீதமாகிய சுத்தநிலையிடத்துனை நாங்கொடுசென்று வைக்க வெமக்குப்பரமீண்டுகூறியவிருவகைச் சகலகேவலங்களினுமுன்றற்போதத்தைமுன்னிட்டுண்டாக்கா தெம்மைமுன்னிட்டுக்கொண்டுசெல்வதுனக்குப்பர மிங்ஙனஞ் சென்றியே யுனக் கச்சுத்தநிலை வருமென்றறிதி—எ-று.

ஆன்மபோத வெதிரீட்டினுமெதிரீடற்றவிடத்துந்தோன்றுஞ்சகலகேவலங்களைப்போ லிவைநீங்கித் தன்னையறிந்தவிடத்திற்றோன்றுந் திருவருளையும் பரையையு மெதிரீடாயு மெதிரீடற்றுந் தரிசித்தலி "னங்கதுபோலாக்கி„ யென்றார்.

எமக்குப்பரமென்றமையா லுனக்குப்பரமென்றது வருவிக்கப்பட்டது.

ஞானாசாரியர் மாணாக்கனுக் குபதேசிக்குங்காற் றம்மைச் சிவமாகக் கூறவேண்டுமாகலி "னெமக்குப்பர„மென்றார். (௰௧)

கருப்பநிலத்தைக்கரண்டுதிரிவார்க்குச்.........*
சருக்கரையேவாயிற்சனித்தாம் - திருத்திவிடு...*

உந்தலைமையென்பீராலினர்வாக்கென்னவே.... *
தந்தலைமைமாண்டதலம் .. ... ... ... ... ... *

கருப்பநிலத்தைக்கண்டுதிரிவார்க்குச்-சருக்கரையேவாயிற் சனித்தாங் கிருத்திவிடும்---எ-று- சுவையைவிரும்பிக்கரும்பறுத்தொழித்த வக்கருப்பநிலத்தைத் தமதுபற்கொண்டுகறண்டுகொண்டுதிரிவோர்க்குத் தெய்வகதியாய்ச் சருக்கரை தானேவந்தவரதுவாயிற்றோன்றிய முறைமைபால வீட்டின்பத்தை விரும்பித் தற்போதத்தைக்கொண்டு சரிதாதிகளைச்செய்வோரிந்நூலிற்கூறிய முறைமைப சரிதாதிகளை விட்டு நீங்கித் தற்போதத்தைப்பின்னிட்டருட்போதத்தை முன்னிட்டுச் சென்றாலொனி னிவ்வருட்போதம் அவரை யவ்வீட்டின்பத்தின்கண் ணழுத்திவிடுமாகலின்

உந்தலைமையென்பீராலினர்வாக்கென்னவே-தந்தலைமைமாண்டதலம்---எ-று- ஓர்காரியஞ் செய்யுமிடத்து எமதுவலியினாற்செய்வோமென்றுகூறு மறிவினர் வாக்குப்போ லவ்வீட்டின்பத்தை யெமதும்போதவலியாற்சென் றடைவோமென்றுகருதிச்செல்வீராகு லங்ஙன நீர்கருதிச்சொல்வதேயுமதுஞானமேம்பாடற்றவிடமென்று அறிந்து நீருமிந்நூனெறிமுறைமையேசெய்வீர் —எ-று.

சரிதாதிகளைவிட்டிந்நூனெறிச் சென்றாற்போதமொழியுமிப்போதமொழியிலாநந்தந்தானே தோன்றுமாகலிற் கருப்பநிலத்தைக்கண்டு திரிவார்க்குச் சருக்கரையே வாயிற்சனித்தாங்கென் றுவமைகூறினார்.

உந்தலைமையென்பது தந்தலைமை யென்று முன்னிலைத்தன்மை தழிஇவந்தது.

பந்நூல்களையும்விட்டிந்நூனெறி சென்றார்க்கே யின்பங் கிடைக்குமென்பதுமாம்.

போதப்புரவியென்னுந் திருவெண்பாமுதலிவையேழுந் திருவெண்பாவானு மாநந்தவறிவுநிலையுந்துறவுநிலையுஞ் சிவயோகநிலையுஞ் சுத்தநிலையும் பஞ்சமலமறுக்கும் பஞ்சாக்கரநிலையு முத்திநிலையு மிந்நூனெறிச் சென்றார்க்கே வீட்டின்பங் கிடைக்குமென்னு முடிபுநிலையு மறிவித்தவாறுகாண்க. (யஉ)

தூண்மணியினாகாய நீழல்கலந்தாற்போல்.............*
உண்மையை நீயுண்டென்றனையுணர்த்தித்-தண்ணெனவே
பார்த்திருந்தசித்திரம்போற்பார்த்தானைநாம்பாவித்.........*
தோத்திரஞ்செய்யாப்பிறவாச்சொல்...........................*

இத்திருவெண்பாவி னருத்தம் இந்நூலினை நற்குணாறெறியினாலு நல்லறிவாளர்க்குத்தானே விளங்குமெனக்கொள்க.

நிலையியல்புமுற்றிற்று.

ஆ. திருவெண்பா - உருரு.



ஒழிவிலொடுக்கம்-உரைபாடம்

முற்றிற்றுமுற்றும்.

திருச்சிற்றம்பலம்.



சமரபுரியாறுமுகன்றானேயென்னுள்ளத்.... ...*
தமரவிருந்திந்நூற்கருத்தந் - திமிரமறக்......*
காட்டினான்பொல்லாக்கடையேனைச்சீர்வீட்டி....*
னாட்டினான்பேரருளினால்.......... ........*

ஐயிவ்வுரைபாலின்பங்காட்டுவிரலேகசிவ....*
மெய்யருளாம்பாதமிடுமென்பதுகை-துய்ய
விருட்கேவலசகலமெற்றைசம்பந்தன்.............*
திருக்கோலங்கொண்டசிறப்பு......... ..........*

அரவுவிடந்தீர்க்குமமணருடன்மாய்க்குந்..........*
திரகதியிலெண்ணிலரைச்சேர்க்கும்-புரமயிலை...*
யென்மைப்பெண்ணாக்கிவிடுமேழையேனேழ்பிறவித்...*
துன்பத்தைநீக்குவான்சொல்..........................*

## அதிகாரங்களின் பெயரு முறையுஞ்

## செய்யுட்டொகையுங்கூறியது.



சீராகுமாகமத்திற்செப்புமியற்சித்தாந்த...............*
நீராகுமுப்பொருளினேர்தெளிவிணேர்த்துய்த்தற் ... *
கொத்தபொதுவிலுபதேசமேழொன்பான்........... *
சத்திநிபாதத்துத்தமொழிவுநாலேழ் ..... ..... ...*
அருமையோகக்கழற்றியாய்ந்திடுமையாறுங்.............*
கிரியைக்கழற்றிகிளத்துமீரெட்டாஞ் .................*
சரியைக்கழற்றியதிற்சாற்றுமீரேழாம்............ .....*
விரத்திவிளக்கத்தின்மேவும்பதின்மூன் ..............*
றுறப்புறுநற்றுறவினுற்றவையைந்தாகு.............. ..*
மவத்தைத்தன்மைகளுரியவாறேழாம் ...............*
வாதனைமாண்டார்தன்மைவாய்த்தமூன்றாகும்.....*
கோதினிலையியல்பிற்கூறல்பதின்மூன்று... ... ..... *
மொருபத்ததிகாரத்தோங்குதிருவெண்பா ... ...........*
விருநூற்றைம்பான்மூன்றிவைகளிசையத்...... .....*
தழுவியுரைத்திட்டான்றகைமையுறுவள்ள.................*
லொழிவிலொடுக்கத்தினன்... ... ... ... ..........*





# அமைத்துக்கொளல்.

காப்பின்கண் ஈண்டு இத்தோத்திரச் செய்யுட்கொன்ற வையுள்- ஆனைமுகனுறுமுக னென்னுஞ் செய்யுளை யொழித்து வேறுகொள்க. ௬-ம்-பக்கம்- இக்கலத்தையிப்பொருளாகக் கொன்றதை-அக்கலத்தையிப்பொருளாகக் கொள்க இங்ஙனமின்னுஞ்சிலவிடங்களிலுள்ள அவற்றையு மங்ஙனங்கொள்க. ௯௰-பக்கம் மாறுபாடாய்க்கருதி என்பதில் செய்து என்னும் வாய்பாட்டுவினையெச்சமாய ஆய் என்பது- செய வென்னும் வாய்பாட்டுவினையெச்சமாய ஆகவெனக்கொள்க இங்ஙனமின்னுஞ் சிலவிடங்களிலுள்ள அவற்றையு மங்ஙனங்கொள்க. வடசொற்களுள்- ஞாநம்- ஞானம்- ஆநந்தம்- ஆனந்தம்- எனத்தமிழிற் பொதுவுஞ் சிறப்புமாய நகர னகரங்கள் சிற்சிலவிடங்களிலவிரவிநின்றன, அவற்றைத் தமிழ்ச்சிறப்பு வழக்கு நோக்கி யமைத்துக் கொள்க. ௱-ம்-பக்கம்- எட்டாவது பாட்டின-௨௫-வது-வரியில் இருப்பதுமன்றி அங்ஙனநின்று கெழுஉமொழி பிரம்மாடமே சமொழியாகலி னென்பதும்- சிலவுளபாடங்களிலுண்டு-௱௭-ம்-பக்கம் ஆறாவது பாட்டின- ஞானத்திலின்பைநசிப்பித்துநானதுவா மூலத்தை யாரொழிப்பா ரென்பதற்கு- சுவாநுபவத்தான் ஞானநந்தத்தைப்பெறாது அதனை விடயச்சேற்றிற்கெடுப்பித்து விடயசேற்றி லழுந்திநின்று அவ்வாநந்தத்தைபடைதற்கேதுவாய்க்கூறும் ஞானசாத்திரங்களைக் கேட்டறிந்தமாத்திரத்தின லவ்வாநந்தமய முனென்றுகூறும் என்பது சிலவுளபாடங்களிலுண்டு. இது-உரைவேறுபாடு.

---

# விளம்பரம்.

இதனால் யாவருக்குந் தெரிவிப்பதென்னவெனில், ஆதீனபுத்தகங்களைக்கொண்டு ஆராய்ச்சி செய்வித்து -மண்ணிப்பாக்கம்- சபாபதிமுதலியா ரவர்களா லச்சிடப்பட்டு நிறைவேறியது, இப்புத்தகம் வேண்டியவர்கள் - பெத்தநாயகன்பேட்டை- செங்காங்கடைக்கடுத்த -தாதமுத்தியப்பன்வீதியில் -௩௪-வது- நம்பருடைய வீட்டிலிருக்கும்ஷை முதலியாரிடத்தில் பெற்றுக் கொள்ளலாம்.

# செய்யுளகராதி.

# செய்யுளகராதி.

நெருப்பில் .. ௱௨௰

ப

பஞ்சமலமு ... ௬௬
பட்டினத்து... ௱௬௧
பரியிறகக்க.....௭௫
பரிசித்துஞ் .....௭௩
பழக்கங்கொடி..௱௫
பழுதையைப் ..௩௬
பற்றுதம்போது ...௱
பற்றியது ... ...௪௰

பா

பாசங்கழுன் ...௱௪௭

பி

பிறவாதயோ ௱௮௧

பு

புளிசேர்பழமா ௭௯

பூ

பூசிமுடிப்பன் ௫௮
பூரணவாநந்த ...௩௧

பெ

பெண்ணுணலி..,௨௪
பெருநோவு ௨௱௰௪

பே

பேயைப்பே...௱௯௰
பேரின்பமுன் ௱௩௭

பொ

பொய்போகம்...௯
பொய்போல ..௮௪
பொய்யென்றாரு௬
பொன்மலை...௱௭௮

போ

போதப்பூர...௨௪௰
போதம்பதை...௪௬
போதவொழி... ௨௰

ம

மண்ணுறிசத்தா ௩௩
மகவான்கண ...௬௧
மணிப்பாம் ... ௱௮
மண்ணைமலை....௱௨
மயலற்றூர்.....௬௭
மரப்பாவை ... ௭௮
மருண்மூகர்....௨௱௧
மருந்துபிணி ௱௨௭
மலட்டிமக... ௱௯௧
மலமாயை......௪௫
மலையேறிப் ... ௪௩
மறப்புநினைப்பு௱௰௩
மறவாத்தம்மை௩௯
மனவாகருக ... ௯௭
மனையிமூசகி..௨௨௮

மா

மாயாவிகாரம்,..௩௫
மாயாபோகத்௨௨௯
மாலயனு ... ௱௯௭
மாற்றுப்பல... ௭௬

மூ

மூலைமுதிரநா ௬௫
மூலையுண்ணி.. ௨௨

மே

மேர்க்கன்று..௨௱௮

மெ

மெய்யாகத்...௱௫௫

மே

மேலைச்சுகம் ... ௭௰

மோ

மோனிகளை ௨௱௰௯

வ

வணங்காவுளை ௰௮
வழுவைச்சட ௱௩௰

வா

வாசிக்குச்சா ௱௪௪
வாசகதருங் ௱௮௫
வாடன்மனம் ௨௨௧
வாதிவடத்தின் ௬௭
வாயுமனங்......௯௭
வாலைமுகமாய் ௬௫

வி

விடாதவத்தை ௨௯
விடயபுத்தி..௱௩௮
விபரீதப்பூணு௱௯௯

வெ

வெண்ணையழு.. ௭௯
வெற்றவெறும் ௪௯

வே

வேதாகமப்......௩௯
வேட்டியுந் ... ௱௩௯
வேண்டாம்...௱௫௭
வேதாந்தம் .. ௪௭
வேர்க்குகண்...௭௯
வேர்க்கும்வி ௱௮௯



செய்யுளகராதி - முற்றிற்று.

# பிழைதிருத்தல்.



| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|---|
| ௩ | ௨ | ௨௨ | தொடங்கின் | தொடங்கின் |
| ௫ | ௪ | ௩ | பரிக்குப | பரிகளுப் |
| ௨௯ | ௨௮ | ௰௪ | அணா | அணு |
| ௩௰ | ௨௯ | ௨௰ | நிழ்புடமேபா | நிழ்புடபேர் |
| ௩௫ | ௩௩ | ௩ | சாரங்கம் | சங்காரம் |
| ௪௰ | ௪௰ | ௨௯ | அபித்ததன் | அபிதத்தன் |
| ௪௨ | ௪௨ | ௰௭ | வேதங்கனை | வேதங்களை |
| ஷெ | ௪௬ | ௰௬ | பத்தத்திசலை | பெத்தத்திசை |
| ௪௩ | ௪௭ | ௪ | றவா | பிறவா |
| ஷெ | ௪௯ | ௨௩ | அருகிற்றோற்று | அருகித்தோற்று |
| ௬௪ | ஷெ | ௭ | நாலுமாம் | நாலும் |
| ௬௯ | ௫௰ | ௯ | மொழிந்ததெல் | மொழிந்தெல் |
| ௭௰ | ௭௨ | ௰௨ | சுதந்திரம் | சுதந்திரம் |
| ௭௨ | ௬ | ௰௩ | மவர்கரு | மவர்க்கு |
| ௮௫ | ௨௫ | ௭ | சாரி | சார் |
| ௮௯ | ௨ | ௨௨ | யும்மூர்த்தி | யம்மூர்த்தி |
| ௱௩ | ௰௮ | ௭ | மென்றன | மன்றன |
| ௱௫ | ௨௧ | ௰௮ | கன்னியம் | கதன்னியம் |
| ஷெ | ஷெ | ௨௰ | ளான்னியம் | ளாதன்னியம் |
| ௱௨௰ | ௫ | ௰௧ | லவாக்கு | லவர்க்கு |
| ஷெ | ௬ | ௨௨ | லுனைப்பாரோ | லுழைப்பாரோ |
| ஷெ | ஷெ | ௰௩ | லுனைப்பமோ | லுழைப்பாரோ |
| ௱௨௬ | ௰௧ | ௧ | கருதிமேறன் | கருதிறன் |
| ௱௪௫ | ௨ | ௩ | முடிகள்சமுசத்தி | முடிகளசமுத்தி |
| ஷெ | ஷெ | ௰௩ | மேற்படி | மேற்படி |
| ௱௨௨ | ௪௰ | ௫ | மேற்கூறுமுர் | மேற்கூறுகின்றார் |
| ௱௫௩ | ஷெ | ௰௯ | கதிட்டானமான் | கதிட்டானமான |
| ௱௫௪ | ௯ | ௨௭ | பொறுதல் | பெறுதல் |
| ௱௫௭ | ௰௨ | ௯ | வேயிலைத் | வெயிலைத் |
| ஷெ | ஷெ | ௯ | ளையயு | ளையு |
| ௱௬௬ | ௭ | ௧ | தனிலகை | தனிகை |

